# சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள்

பெரியார் பல்கலைக்கழகமுனைவர் பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்
கா.கலையரசி
(பகுதிநேர முனைவர் பட்டஆய்வாளர்)
பதிவுஎண் : PU/R/RD/26246/2015

நெறியாளர்
முனைவர் து.ரேணுகாதேவி எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
உதவிப்பேராசிரியர்

தமிழ்த்துறை
திருவள்ளுவர் அரசுகலைக்கல்லூரி
(தேசியத் தரச்சான்று ‘ஏ’ மறு நிர்ணயம் செய்யப்பட்டது)
இராசிபுரம் -637401.


அக்டோபர் 2020

**முனைவர் து.ரேணுகாதேவி எம்.ஏ., எம்.ஃ.பில்., பிஎச்.டி.,**
உதவிப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
திருவள்ளுவர் அரசு கலைக்கல்லூரி,
இராசிபுரம் - 637401.

## ஆய்வு நெறியாளர் சான்றிதழ்

திருமதி.கா.கலையரசி அவர்களால் **"சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள்"** எனும் தலைப்பில் அளிக்கப்பெற்றுள்ள இந்த ஆய்வேடு, பெரியார் பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் பட்டப் பேற்றிற்காகத் திருவள்ளுவர் அரசுகலைக் கல்லூரியின் தமிழ்த்துறையில் பகுதிநேரமாக 2015-2020ஆம் கல்வியாண்டுகளில் என் நெறிகாட்டுதலின்கீழ் ஆய்வு நிகழ்த்தி எழுதப்பெற்றதாகும். இந்த ஆய்வேடு ஆய்வாளரால் தன்னிச்சையாக உருவாக்கப் பெற்றதென்றும் இதற்குமுன் வேறு எந்தப் பட்டப்பேற்றிற்காகவும் எந்தப் பல்கலைக்கழகத்திற்கும் வழங்கப் பெறவில்லை என்றும் சான்றளிக்கப் பெறுகிறது.

இடம் : இராசிபுரம் — ஆய்வு நெறியாளர்

நாள்:

தமிழ்த்துறைத்தலைவர் — முதல்வர்

**கா.கலையரசி,**
பகுதிநேரமுனைவர் பட்டஆய்வாளர்,
தமிழ்த்துறை,
திருவள்ளுவர் அரசுகலைக்கல்லூரி,
இராசிபுரம் - 637401.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள்"** எனும் தலைப்பில், பெரியார் பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் பட்டப் பேற்றிற்காகத் திருவள்ளுவர் அரசு கலைக்கல்லூரியின் தமிழ்த்துறையில் பகுதிநேரமாக 2015-2020ஆம் கல்வியாண்டுகளில், **உதவிப்பேராசிரியர் முனைவர் து.ரேணுகாதேவி** அவர்களின் நெறிகாட்டுதலின்கீழ் ஆய்வுநிகழ்த்தி எழுதப் பெற்றதாகும். இந்த ஆய்வேடு, என் சொந்த முயற்சியால் உருவானது என்றும் இதற்குமுன் வேறு எந்தப் பட்டப்பேற்றிற்காகவும் எந்தப் பல்கலைக்-கழகத்திற்கும் வழங்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

இடம் : இராசிபுரம் ஆய்வாளர்

நாள் :

// நன்றியுரை

**“சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள்”** என்னும் தலைப்பில் பகுதிநேர ஆய்வாளராக ஆய்வு மேற்கொள்ள எனக்கு வாய்ப்பளித்த பெரியார் பல்கலைக்கழகத்திற்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பகுதிநேரமுனைவர் பட்டஆய்வாளராக ஆய்வு மேற்கொள்ள எனக்கு அனுமதியளித்த இராசிபுரம், திருவள்ளுவர் அரசுகலைக் கல்லூரியின் முதல்வர் முனைவர் சீ.மணிமேகலை, எம்.எஸ்சி., எம்..ஃ.பில்., பிஎச்.டி., அம்மாஅவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வின்போது எனக்குப் பல்வேறு கருத்துக்களையும் அறிவுரைகளையும் வழங்கிய தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் இரா.கலைச்செல்வி எம்.ஏ., எம்..ஃ.பில்., பி.எட்., பிஎச்.டி., அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

முனைவர் பட்டஆய்வு மேற்கொள்ள விருப்பம் கொண்டு அவ்விருப்பத்–தினை தெரிவித்தவுடன் இன்முகத்துடன் ஏற்றுக் கொண்டு, எனக்கு வாய்ப்பளித்து நான் வேண்டியபொழுதெல்லாம் ஆய்விற்கான நெறிமுறைகளை உவந்து உரைத்து, ஐயப்பாடு எழும்போதெல்லாம் தெளிவுறுத்தி, இந்த ஆய்வேடு சிறப்பாகவும் தரமாகவும் குறிப்பிட்ட காலத்திற்குள் அமைய பெரிதும் ஆர்வம் கொண்டு என்னை ஊக்கப்படுத்தி அனைத்து உதவிகளையும் செய்த எனது நெறியாளர் முனைவர் து.ரேணுகாதேவி எம்.ஏ., எம்..ஃ.பில்., பிஎச்.டி., அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வு மேற்கொள்ள உறுதுணையாக இருந்து பல உதவிகளைச் செய்த இராசிபுரம், திருவள்ளுவர் அரசு கலைக்கல்லூரியின் தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர்கள் முனைவர் க.செல்வராஜ், முனைவர் ந.தனசேகர், முனைவர் க.அன்பழகன், முனைவர் அண.செல்வகணபதி, முனைவர் இரா.பிரபாகர், முனைவர் இரா.ரம்யாமகேஸ்வரி ஆகியோர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குரிய காலங்களில் என்னை ஊக்கப்படுத்தி வழிநடத்திச் சென்ற தோழர், தோழிகள் லி.பழனிசாமி, லோ.தீபப்பிரியா, த.சுபத்ரா, த.சாந்தி, கு.கிருபானந்த், இரா.தீபா, மா.திவ்யா, இல.அய்யப்பன், வீ.சிலம்பரசன் ஆகியோர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

எனது வாழ்வு செம்மையடைய தங்களது வாழ்க்கையில் அயராது உழைத்த என் பெற்றோர் த.காத்தமுத்து, விஜயா அவர்களுக்கும் என் சகோதரி கலைவாணி, சகோதரர் கலைமாமணி அவர்களுக்கும் எனது நன்றிகள் பல. என் வளர்ச்சிக்கு தூண்டுகோலாக இருந்த என் கணவர் ப.ரவி அவர்களுக்கும் எனது மகன்களாகிய அபிநவ், ஸ்ரீபிரணவ்க்கும் என் மனமார்ந்த நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கி உதவிய பெரியார் பல்கலைக்கழக நூலகத்தாருக்கும், திருவள்ளுவர் அரசு கலைக் கல்லூரி நூலகத்தாருக்கும், தேவையான நூல்களை சேகரித்துத் தந்த மாணவன் ரமேஷ் மற்றும் முனைவர் பட்ட ஆய்வு மாணவர்கள் ஆகியோருக்கும் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டைச் சிறந்தமுறையில் அச்சிட்டு, நூல்வடிவாக்கிக் கொடுத்த ‘ஸ்ரீபுவனம்’ பண்டிட் பரமேசுவரன், எம்.எஸ்.ஸி., எம்.எஸ்.ஸி., எம்.எஸ்.ஸி., எம்.ஏ., எம்.ஏ., பிஎச்.டி., அவர்களுக்கும் ஆய்விற்கு உதவிய அனைத்து நல்உள்ளங்களுக்கும் என் மனம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**(திருமதி.கா.கலையரசி)**

# சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள்


## ஆய்வுச் சுருக்கம் (Abstract)

சங்க இலக்கியங்கள் பல்வேறு கால கட்டங்களில் பல்வேறு புலவர்களால் பலவிதமான வாழ்வியல் சூழல்களுக்கிடையே பாடப்பட்ட இலக்கியங்களாகும். சங்கப் பாக்கள் அனைத்தும் மனித வாழ்வியலில் அகம், புறம் எனும் இரண்டு கூறுகளில் அடங்கியுள்ளன. அன்றாட மக்களின் வாழ்வியலை மையப்படுத்தியே பாடப்பட்டுள்ளன. புலவர்கள் தாம் வாழ்ந்த கால கட்டத்தில் பார்த்துப் பழகிய நிகழ்வுகளை வர்ணனைகளோடு பதிவு செய்துள்ளனர். அவ்வகையில் சங்கப்புறப் பாக்களில் அமைந்துள்ள செவ்வியல் கூறுகளை ஆராயும்விதமாக இவ்வாய்வேடு அமைகிறது.

முதல் இயலான "**தமிழின் தகுதிப்பாங்கும் செம்மொழி வரையறையும்**" எனும் இயலில் மானிடம் மற்றும் மொழியின் தோற்றம் செவ்வியல் மூலப்பொருண்மை, செவ்வியல் குறித்த அகராதி மற்றும் அறிஞர்களின் விளக்கம், செம்மொழிக்குரிய அடிப்படைத் தகுதிகள், செவ்வியல் கோட்பாடுகள், வளர்ச்சி நிலைகள், உலகச் செவ்வியல் இலக்கியங்கள் பற்றிய விரிவான விளக்கங்கள், செவ்வியல் நூல்கள், செவ்வியல் கூறுகள் குறித்த அறிஞர்களின் பல்வேறு விளக்கங்கள் ஆகியனவற்றை ஆராயும்விதமாக அமைந்துள்ளது.

இரண்டாம் இயலான "**சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் பொருளமைவு**" எனும் இயலில் சங்க இலக்கியங்களின் தொன்மை, தனித்தன்மை, பொதுமை, நடுநிலைமை, பல மொழிகளுக்குத் தாயாம் தன்மை, பண்பாடு, கலை, பட்டறிவு வெளிப்பாடு, தனித்தியங்கும் தன்மை, இலக்கிய வளம், கலை இலக்கியத் தன்மை வெளிப்பாடு, உயர் சிந்தனை, மொழிக் கோட்பாடுகள் போன்றவை பற்றி ஆராயும்விதமாக அமைந்துள்ளது.

மூன்றாம் இயலான "**சங்கப்புற இலக்கியங்களில் ஆடவரின் செவ்வியல்**" எனும் இவ்வியலில் ஆட்சியமைப்புத் தோற்றம், அரசுரிமை, கல்விச் சிறப்பு, போருக்கான காரணங்கள், அரசனின் வீரம், புகழ், கடையெழு வள்ளல்களின் கொடைச் சிறப்பு, புலவர்களின் சிறப்பியல்புகள், நட்பு போன்ற செய்திகளை ஆராயும்விதமாக இவ்வியல் அமைந்துள்ளது.

நான்காம் இயலான "**சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள்**" எனும் இவ்வியலில் தாயின் மறப்பண்பு, கற்பு, புலவர்களின் கல்வித்திறன், விருந்தோம்பல், மகளிர் விளையாட்டுகள், கூத்துக் கலைகள் ஆகியவை பற்றி ஆராயும்விதமாக இவ்வியல் அமைந்துள்ளது.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | – | அகநானூறு |
| உ.ஆ. | – | உரை ஆசிரியர் |
| குறள் | – | திருக்குறள் |
| சிலம்பு | – | சிலப்பதிகாரம் |
| சிறு | – | சிறுபாணாற்றுப்படை |
| சொல் | – | சொல்லதிகாரம் |
| திருமுருகு | – | திருமுருகாற்றுப்படை |
| தொல் | – | தொல்காப்பியம் |
| நூ | – | நூற்பா |
| ப | – | பக்கம் |
| பக் | – | பக்கங்கள் |
| பதிற்று | – | பதிற்றுப் பத்து |
| பா | – | பாடல் |
| பு.வெ.மா. | – | புறப்பொருள் வெண்பா மாலை |
| புறம் | – | புறநானூறு |
| பெரும் | – | பெரும்பாணாற்றுப் படை |
| பொருநர் | – | பொருநராற்றுப் படை |
| பொருள் | – | பொருளதிகாரம் |
| மதுரை | – | மதுரைக் காஞ்சி |
| மலை | – | மலைபடுகடாம் |
| மேலது | – | மேலே குறிப்பிட்டுள்ளது |

# பொருளடக்கம்

## முன்னுரை

## சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள்

உலக மொழிகளில் முதன்மையானதும் மூத்த மொழியும் தமிழ் என்பர். மூத்த மொழியாகவும் முதன்மை மொழியாகவும் திகழ்ந்த காரணத்தால் மட்டும் அல்லாது மொழியின் வளமையினாலும் சொற்களின் சுவையாலும், உச்சரிப்புகளின் சிறப்பாலும் தமிழ் மொழி உலகளாவிய மொழியாகப் புகழ்பெற்று நிலைத்து வாழும் மொழியாக உள்ளது. தமிழ்மொழியின் சொற்கள் பேசுவதற்கும் எழுதுவதற்கும் தெளிவும் அழகும் எளிமையும் உடையதாக விளங்குவதால் அனைவராலும் விரும்பத்தக்க மொழியாகவும் உள்ளது.

ஒரு மொழியின் பிறப்பு, வளர்ப்பு பற்றி அறியவோ, ஆராயவோ முடியவில்லை என்றால், அம்மொழியின் தொன்மை எவ்வளவு ஆண்டுகளுக்கு முற்பட்டதாக இருக்கும் எனும் வினா எழுகின்றது. அவ்வகையில் தமிழ் மொழியானது கல்லும் மண்ணும் தோன்றுவதற்கு முன்பாகவே தோன்றிய மூத்தமொழியாகும். தமிழ் என்று பிறந்தவள் என்று உணரமுடியாத இயல்பு கொண்டது. தொன்மைமிக்க இத்தமிழ்மொழியின் தோற்றம் குறித்த பல ஆய்வுகளும் ஆராய்ச்சிகளும் இன்றும் நடைபெற்று வருகின்றன. ஒரு மொழியின் தொன்மையை அறிய வேண்டுமெனில், அம்மொழியில் உள்ள இலக்கியங்களே சான்றாக அமைகின்றன. அவ்வகையில் சங்கப் புற இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள செவ்வியல் கூறுகளை ஆராயும்விதமாக இவ்வாய்வேடு அமைகின்றது.

### ஆய்வுத் தலைப்பு

தமிழ்மொழியின் வளர்ச்சி குறித்து நமக்குக் கிடைத்துள்ள தரவுகள் வியப்பை உண்டாக்குகின்றன. ஒன்று, இரண்டு அல்ல மூன்று சங்கங்களை அமைத்து, இச்சங்கங்கள் மூலம் தமிழின் வளர்ச்சியை மன்னர்கள் வளர்த்துள்ளனர். தமிழின் செம்மை எட்டுத் தொகை நூல்கள், பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு, பக்தி இலக்கியங்கள், ஐம்பெரும் காப்பியங்கள், ஐஞ்சிறு காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் உட்பட பலவகை இலக்கிய வகைகள் பொதிந்து கிடக்கின்றது. அவ்வகையில் தமிழ் மொழியின் செம்மையினை சங்கப் புற இலக்கியங்களைக் கொண்டு ஆய்வு மேற்கொள்வது இயலும் என்ற வகையில் **“சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள்”** என்னும் தலைப்பே ஆய்வுத் தலைப்பாக அமைகின்றது.

## கருதுகோள்

தமிழ்மொழியின் தொன்மைக் கூறுகள் அக இலக்கியங்களைக் காட்டிலும் புற இலக்கியங்களில் மிகுந்துள்ளன. அக இலக்கியங்கள் தலைவன், தலைவியின் காதல் வாழ்க்கையினையும், சமுதாய சூழல்களையும் நமக்கு அளிக்கின்றன. புற இலக்கியங்களில் சமுதாயச் சூழல், அரசனின் வீரம், வள்ளல் தன்மை, ஆட்சிச் சிறப்பு, போர் பற்றிய அனைத்தும் மிகுந்துள்ளன. எனவே, தமிழ்மொழியின் தொன்மைக் கூறுகள் அக இலக்கியங்களைக் காட்டிலும் புற இலக்கியங்களில்தான் மிகுந்துள்ளன என்பதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

## ஆய்வு நோக்கம்

அக இலக்கியங்களில் வரலாறுகள் அமைவதில்லை. அதனால் காலத்தை கணக்கிடவும் முடிவதில்லை. ஆனால், தமிழ்ப்புற இலக்கியங்கள் வரலாற்றுடன் அமைகின்றது. இவ்வரலாற்றை ஆதாரமாகக் கொண்டு தமிழ்மொழியின் செம்மையை ஆய்வு செய்து வெளிக் கொணர்வதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களாகிய எட்டுத் தொகை பத்துப்பாட்டு என்னும் இலக்கியங்களில் அகத்தைப் பற்றி கூறும் இலக்கியங்களையும், அகமும்–புறமும் சார்ந்த இலக்கியங்களையும் தவிர்த்து முழுமையாக புறத்தை மட்டுமே கூறும் சங்கப் புற நூல்களை ஆய்வதே இவ்வாய்வின் ஆய்வு எல்லையாக அமைகின்றது.

## ஆய்வு மூலம்

தமிழ்மொழியின் செம்மைப் பண்பினை ஆராய முதன்மை ஆதாரமாக அமைவது சங்கப் புற இலக்கியங்களாகும். அவ்வகையில் புறநூல்களான புறநானூறு, பதிற்றுப்பத்து, திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம், மதுரைக்காஞ்சி போன்றன ஆய்வின் முதன்மை ஆதாரங்கள் ஆகும். துணைமை ஆதாரங்களாக தமிழின் தொன்மையைப் புலப்படுத்தும் இலக்கிய வரலாற்று நூல்கள், தமிழ்மொழிக் கோட்பாட்டு நூல்கள், செவ்வியல் குறித்த ஆய்வேடுகள், கட்டுரைகள் அமைகின்றன.

## ஆய்வு அணுகுமுறை

சங்கப்புற இலக்கியங்களில் தமிழ்மொழியின் தொன்மை மற்றும் செவ்வியல் கூறுகள் குறித்து இவ்வாய்வேடு அமைவதால் வரலாற்று அணுகுமுறையிலும், தமிழ்மொழியின் தோற்றம் வளர்ச்சி அது சார்ந்த ஆய்வுகள் மேற்கொள்ளப்படுவதால் விளக்கமுறை அணுகுமுறையும் செவ்வியலுக்குத் தகுந்த தொன்மை, தனிச்சிறப்பு, தாய்மை, பண்பாடு, கலை, மொழிக் கோட்பாடுகள் ஆகியவற்றை ஆய்வதால் உளவியல் அணுகுமுறையும் புற இலக்கிய வரலாற்றின் முதன்மை காலம் முதல் இக்காலம் வரை ஒப்புமை செய்வதால் ஒப்பீட்டு அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டுள்ளது.

## ஆய்வுப் பகுப்பு

“**சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள்**” என்னும் இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை :

**இயல் ஒன்று** : தமிழின் தகுதிப்பாங்கும் செம்மொழி வரையறையும்

**இயல் இரண்டு** : சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் பொருளமைவு

**இயல் மூன்று** : சங்கப்புற இலக்கியங்களில் ஆடவரின் செவ்வியல் கூறுகள்

**இயல் நான்கு** : சங்கப்புற இலக்கியங்களில் மகளிரின் செவ்வியல் கூறுகள்

## இயல் ஒன்று

“**தமிழின் தகுதிப் பாங்கும் செம்மொழி வரையறையும்**” எனும் முதல் இயலில் மானிடத் தோற்றம், மொழியின் தோற்றம், செவ்வியல் மூலச்சொல், செவ்வியலும் செம்மொழியும், செவ்வியல் குறித்த அறிஞர்கள் மற்றும் அகராதிப் பொருண்மைகள், தமிழ்ச் செவ்வியலின் காலம், செவ்வியல் வளர்ச்சி பெற்றவிதம், செவ்வியல் கோட்பாடுகள், உலகச் செவ்வியல் மொழிகள், செம்மொழித் தமிழின் தகுதிப்பாங்கு, செவ்வியல் நூல்கள், செம்மொழிக்கான கூறுகள் பற்றி அறிஞர்களின் கருத்துக்கள் ஆகியன ஆராயப்பட்டுள்ளன.

## இயல் இரண்டு

**"சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் பொருளமைவு"** எனும் இரண்டாவது இயல் புறம்–சொல்விளக்கம், புறத்திணை நோக்கம், புறப்பொருளின் முதன்மை, எட்டுத்தொகை நூல்கள், புற இலக்கியங்களில் செவ்வியல் பொருளமைவுகளான தொன்மை, தனித்தன்மை, பொதுமை, நடுநிலைமை, பலமொழிகளுக்குத் தாயாம் தன்மை, பண்பாடு, கலை பட்டறிவு வெளிப்பாடு, தனித்தியங்கும் தன்மை, இலக்கிய வளம், கலை இலக்கியத் தன்மை வெளிப்பாடு, உயர்சிந்தனை, மொழிக்கோட்டு ஆகியன பற்றி ஆராயும்விதமாக அமைகின்றது.

## இயல் மூன்று

**"சங்கப்புற இலக்கியங்களில் ஆடவரின் செவ்வியல் கூறுகள்"** எனும் மூன்றாவது இயல் புறநூல்களில் ஆடவரின் செவ்வியல் கூறுகள், ஆட்சியமைப்புத் தோற்றம், ஆட்சியாளரின் அரசுரிமை, மன்னனின் தகுதிகள், கடமைகள், பெயர்கள், பெற்ற பட்டங்கள், கல்விச்சிறப்பு, போர், வீரம், புகழ், கொடைத்தன்மை, கடையெழு வள்ளல்களின் சிறப்புக்கள், அறநெறி, புலவர்களின் சிறப்பியல்புகள், தன்மான உணர்வு, அரசர்களின் நட்பு பாராட்டல் ஆகியன பற்றி ஆராயும்விதமாக அமைகின்றது.

## இயல் நான்கு

**"சங்கப்புற இலக்கியங்களில் மகளிர் செவ்வியல் கூறுகள்"** எனும் நான்காவது இயலில் மகளிரின் மறப்பண்பு, பெருமிதம், கற்புத்திறம், கலைத்திறம், மகளிர் விளையாட்டுக்கள், ஐவகை நில மகளிரின் விருந்தோம்பல் முறைமை, பெண்பாற் புலவர்களின் கல்வியாற்றல் ஆகியன பற்றி ஆராயும்விதமாக அமைகின்றது.

நான்கு இயல்களிலும் ஆய்வு செய்து கண்டறியப்பட்ட மெய்மைகள் ஆய்வின் இறுதியில் முடிவுரையாகத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. ஆய்வின் தேவை கருதி ஆய்வேட்டில் பிறமொழிச் சொற்கள் இடம் பெறுவது இன்றியமையாததாகிறது. இறுதியாகத் துணை நூற்பட்டியலில் ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்கள் அகர வரிசையில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. பின்னிணைப்பாக சங்கப்புற இலக்கியச் செவ்வியல் கூறுகள் தொடர்பான செய்திகள் நிழற்படங்கள் ஆகியவை தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

# இயல் – ஒன்று

# தமிழின் தகுதிப்பாங்கும் செம்மொழி வரையறையும்

உலகம் தோன்றியதற்குப் பல காரணங்கள் பல அறிஞர்களால் கூறப்படுகின்றன. ஒவ்வொரு இடத்திற்கும் ஒரு கதை உண்டு. அவற்றை அறிவியலும் வரலாறும் ஏற்பதில்லை. அவற்றுக்குள்ளும் நுட்பமாகப் பார்த்தால் சில உண்மைகள் இலைமறை காயாகப் புலப்படும். அது எவ்வாறு இருப்பினும் அவற்றை ஒருபோதும் அறிவியல் ஏற்காது புறந்தள்ளும். அறிவியல் கொள்கைப்படி உலகின் தோற்றமானது, சூரியனிடமிருந்து தெறித்த ஓர் அனற்பிழம்பு. அது சுற்றிச் சுழன்று நிலவுருண்டையின் மேற்பகுதி குளிர்ந்து உருண்டு, இன்றைய நம் பூமி உண்டாயிற்று என்று எடுத்தியம்புகின்றது.

நாம் வாழும் உலகம் ஐந்நூறு கோடி ஆண்டுகளுக்கு முன்னர்க் கதிரவனிடமிருந்து கழன்று சிதறிய ஓர் அனற்பிழம்பு. கழன்ற பிழம்பு நீள்வட்டப் பாதையில் கதிரவனைச் சுற்றிச் சுழன்றது. சுழற்சி விசையினால் நிலவுருண்டையின் மேற்பகுதி குளிர்ந்து இறுகியது. உருண்டு திரண்டதால் உலகம் (உல் – உலம் – உலகு – உலகம்) என்றும், அண்டவெளியில் ஞாலுவதால் (தொங்குவதால்) ஞாலமென்றும் பெயர்சூட்டி வழங்கினர் தமிழ்ச் சான்றோர்.

எத்தனையோ காலம் தனியாகச் சுற்றிய பூமியில் உயிர்கள் உண்டானது. முதலில் ஓரறிவுடைய தாவரங்களும் (புல், மரம், கொடி, செடி போன்றவை), பின்னர் இரண்டு அறிவுடையவையான ஊர்வனவும் (நத்தை, சங்கு போன்றவை), படிப்படியாக நான்கறிவுடைய பறவைகளும், விலங்குகளும் உண்டாகி, இறுதியாக ஆறறிவுடைய மனிதன் உண்டானான் என தொல்காப்பியர் வகைப்படுத்திக் கூறியுள்ளார். அவ்வகையில் ஆறறிவு உயிர்களான மனிதனின் பகுத்தறிவினால் தோன்றி வளர்ச்சியுற்றுள்ள தமிழ்மொழியின் தகுதிப்பாங்கினையும் செம்மொழியாக வளர்ச்சி பெற்றுள்ள நிலைப்பாட்டினையும் ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## மானிடத் தோற்றம்

நாம் வாழும் இந் நிலப்பகுதியில் ஏழு கண்டங்கள் இருந்ததாக அறிஞர்கள் கூறினர். ஒவ்வொரு நிலப்பரப்பும் ஒன்றோடு ஒன்று தொடர்பு இல்லாமல் தண்ணீரால்

சூழ்ந்து இருந்ததால் தீவு என பகுத்துக் கூறினர். ஒவ்வொரு தீவும் தாவரங்களாலும் நீரினாலும் நிலத்தாலும் வளமையுற்று இருந்தமையால் அந்நிலப்பரப்புகள் புகழ் பெற்றன.

நாவலந் தீவு, இலவந்தீவு, இறலித்தீவு, அன்றில் தீவு, குசைத்தீவு, தெங்கந்தீவு, தாமரை தீவு என ஏழு நிலங்களுக்கும் பெயரிட்டு அழைத்தனர்.

**“நாவலந்தீவே இறலித் தீவே**
**கூசையின் தீவே கிரவுஞ்சத் தீவே**
**சான்மலித் தீவே தெங்கின் தீவே**
**புட்கரத் தீவே எனத்தீவு ஏழே**
**ஏழ் பெருந்தீவும் ஏழ்பொழில் எனப்படும்”**[1]

திவாகர நிகண்டில் கிரவுஞ்சம், சான்மலி, புட்கரம் என்பன வட சொற்கள் ஆதலால் அச்சொற்களுக்கு முறையே அன்றில், இலவம், தாமரை என தமிழ்ப்பெயர்களால் வழங்கப்பட்டது.

இவ்வேழு நாவலம்தீவு என்பது நாவலந்தீவு → குமரிக்கண்டம் → பழம் பாண்டிய நாடு எனும் மூன்று ஒரே இடமான குமரிக்கண்டத்தையே குறிப்பிடுகின்றது.

இக்குமரிக்கண்டம் சங்க காலத்தில் வளமையுடனும் சிறப்புடனும் விளங்கியது. இக்கண்டம் இந்தியாவின் தெற்கே இந்துமாக் கடலில் பெறும் நிலப்பரப்பாக விளங்கியது. அப்பெரும் நிலப்பரப்பு பெரியதொரு நாடாகவும் சிறப்பு பெற்றது. அந்நாட்டில்

1. பஃறுளியாறு,
2. தென்மதுரை,
3. குமரி மலை,
4. குமரியாறு,
5. வீரமகேந்திரம்,
6. இலங்கை

என்னும் நீர்ப் பகுதிகளும் நிலப்பகுதிகளும் மலைப்பரப்புகளும் இணைந்து இருந்து பெருநாடாகக் காட்சியளித்தது. இந்நிலப்பரப்பைப் பாண்டிய மன்னர்கள் ஆட்சி செய்ததால் இது பாண்டிய நாடாகப் புகழ்பெற்றுத் திகழ்ந்தது.

இப்பகுதிகளில் பெரும்பான்மையான பகுதிகள் பிற்காலத்தில் கடல்கோள்களால் சூழப்பட்டது. இந்நிலப்பரப்பு குமரி மலையும் குமரி ஆறும் புகழ்பெற்றுத் திகழ்ந்ததால்

இந்நாட்டை குமரிநாடு என்று சிறப்பித்தனர். இப்பகுதியில் சோற்றுக் கற்றாழை என்னும் மூலிகைச் செடி நிறைந்து இருந்ததால் குமரிக் கண்டம் எனப்பட்டது.

(குமரி → மூலிகை → சோற்றுக் கற்றாழை)

இக்குமரிக் கண்டமே நாவலந்தீவு, லெமூரியா, பழம் பாண்டிய நாடு போன்ற சிறப்பு பெயர்களால் அழைக்கப்பட்டு வருகின்றது. இந்நிலப் பகுதியில் தேவையான நீர்வளமும் உயிர்கள் தோன்றுவதற்கான வெப்பமும், அவ்வுயிர்கள் வாழ்வதற்கான வாழ்வாதாரங்களும் மிகுந்து இருந்ததால் இங்குதான் மனித உயிர்கள் தோன்றி இருக்க முடியும் என அறிஞர்கள் கருதுகின்றனர்.

**“தமிழ்நாட்டின் தென்பகுதியே மாந்தரின் முதல் பிறப்பிடம் என்றும் அது மனித நாகரீகத்தின் தொட்டில் என்றும் ஸ்காட்டு எலியட் கூறுகின்றார்”[2].**

கடல்கோள்களின் மிகுதியால் சிறுகச்சிறுக குமரிக்கண்டம் எனும் லெமூரியா சுருங்கியது. இச்சுருக்கத்தினாலேயே லெமூரியா கண்டத்தில் உருவான மனிதர்கள் தமிழ் என்னும் மொழியினைப் பயின்றனர். ஒவ்வொரு கடல்கோளின் போதும் மக்கள் பல திசைகளில் வாழ்க்கையை நோக்கிச் சென்றதால் தமிழ்மொழி உலகம் முழுவதும் பரவியது.

**“பஃறுளியாற்றுடன் பன் மலை அடுக்கத்துக்**
**குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள”[3]**

என இளங்கோவடிகள் கடல்கோள்களின் மிகுதியால் குமரிநாடு சுருங்கியதை விளக்குகின்றார்.

## மொழியின் தோற்றம்

பல்லாயிரம் ஆண்டுகள் விலங்குகளாகவே குகைகளிலும், மரப்பொந்துகளிலும் வாழ்ந்த மனிதன் சில ஒலிவகைகளால் தொடர்பை ஏற்படுத்திக் கொண்டான். அதற்கு ஒலிகளைப் பயன்படுத்தினான். அப்பொழுதுதான் மொழி உண்டானது என அறிஞர்கள் குறிப்பிடுவர். மொழி உண்டான முறையைப் பற்றி தமிழறிஞர் மு.வ. அவர்கள் எடுத்துக் கூறும்பொழுது, **“சிலவகை அசைவுகள் செவிப்புலனைத் தாக்கும்போது உணரப்படுவதே ஒலியாகும். மொழியும் இவ்வாறு உணரப்படுவதே. மொழி என்பது பேசுவோரின் குரலில் பிறந்து பொருளுடைய அறிகுறிகளாக அமைந்து கேட்போரால் பொருள் உணரப்படும், ஒலிவகை எனலாம். அது பெரும்பாலும் பேசுவோர், கேட்போர் ஆகிய இருதிறத்தார்க்கு இடையே நிகழ்வது. ஒருவர் உணர்ச்சியையோ, கருத்தையோ**

**மற்றவர் உணர்வதற்குப் பயன்படுகிறது. பேசுவோரின் மூளையில் ஓர் எண்ணம் எழுகிறது. கேட்போரின் மூளை அதை உணர்ந்து விடுகிறது. பேசுவோர், கேட்போர் ஆகிய இருவருக்கும் இடையே, இருவரின் உடல் நரம்புகளுக்கு இடையே, மூளைகள் உறவுகொள்ளத்தக்க தொடர்பை ஏற்படுத்துவதே மொழிமுதற் காரணமான ஒலி. இவ்வாறு பயன்படும் ஒலி ஒவ்வொரு மொழியினருக்கும் ஒவ்வொரு வகையாக அமைகிறது. ஒவ்வொரு குழுவினரும் கூடிப் பொதுவாக உணர்வதற்கு ஏற்றவாறு அந்த ஒலிவகை தொன்றுதொட்டு அறிகுறிகளாக அமைந்து வழிவழியாக வளர்ந்து பயன்படுவதால் மொழிக்கு ஒரு வரலாறும் உளதாகிறது"[4]** என்று விளக்கிக் காட்டியுள்ளார்.

மனிதர்கள் தங்களுடைய உள்ளக் கருத்தினைப் பிறருக்கு உணர்த்தவும் தான் அனுபவித்த உணர்வுகளைப் பிறருக்கு உணர்த்தவும் மொழி தேவைப்பட்டது. சிறுசிறு குறியீடுகளாகவும் ஒலிகளாகவும் ஆரம்பிக்கப்பட்ட மொழியானது மேலும் மேலும் ஒலிகளாக வளர்ந்து மொழியாக உருவானது. இம்மொழியே வளம் பெற்று இலக்கியங்கள் உருவாவதற்கு வழிகோலியது. இதனால் மொழி காலம் காலமாக மாறாது மேலும் பிற இலக்கியங்கள் தோன்றுவதற்கு வரையறைகளையும் எல்லைகளையும் வகுத்தது. இதனால் சங்க காலங்களிலேயே இலக்கிய, இலக்கணங்கள் தோன்றி மொழி வளமை பெற்றதால் சங்க காலத்தில் தோன்றிய இலக்கியங்களைச் சங்க இலக்கியம் எனக் குறிப்பிடுகின்றோம். இத்தொன்மையான இலக்கியங்களையே செவ்வியல் இலக்கியம் என்று குறிப்பிடுகின்றோம். அச்செவ்வியல் இலக்கியங்களையும் தமிழின் தகுதிப் பாங்கினையும் ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

## செவ்வியல் எனும் சொல்

செம்மை + இயல் = செவ்வியல் Classicus எனும் இலத்தீன் மொழியில் இருந்து உருவான Classical என்னும் பிரெஞ்சுச் சொல்லை ஆங்கிலம் கடன் பெற்றது எனக் கூறுவர். இலக்கியத்தில் பயன்படும் இச்சொல் ரோமச் சட்டத்திலிருந்து எடுக்கப்பட்டது என்றும், அதிக வரி செலுத்துவோரைக் குறிக்கும் சொல்லாக Classicus என்ற சொல்லும் வரியே செலுத்தாதவரைக் குறிக்கும் சொல்லாக Proleterius என்ற சொல்லும் பயன்படுத்தப்பட்டது. Classicus என்ற சொல்லிருந்து வந்த Classical என்பதற்கு

உயர்நிலை என்று பொருள். உலகப் பெருமொழி, உலகத் தனிமொழி என்ற சொல்லாட்சிகளும் காணப்படுகின்றது.

Classicus, Classical என்பதற்கு **“புலமையான, இலக்கிய கல்வி நூலான செய்யுட் போக்கிய சிறந்த”[5]** என்று வின்சுலேவின் ஆங்கிலத் தமிழ் அகராதி விளக்கம் தருகிறது.

## செவ்வியல் என்பதன் மூலச் சொல்

Classical என்ற ஆங்கிலச் சொல்லின் பொருள் செவ்வியல் ஆகும். இச்செவ்வியல் தமிழில் செம்மை என்ற சொல்லில் இருந்து தோன்றியது என்பர். **“தமிழில் ‘செவ்வியல்’ என்பதற்கு மூலச்சொல் செம்மை என்பதாகும். செம்மை+இயல் இரு சொற்கள் இணைந்து செவ்வியல் என்றானது. இஃது ஆங்கிலத்தில் கிளாஸ்+இசம் என்ற இரு சொற்களும் இணைந்து கிளாசிசம் என்றாகியது”[6]** என்று செ.சாரதாம்பாள் கூறுகின்றார்.

செவ்வியல் என்ற சொல்லுக்குக் கிளாசிசம் (Classicism) என்ற சொல் இங்கு எடுத்தாளப்படுகிறது. கிளாசிக் (Classic), கிளாசிகல் (Classical), கிளாசிஸ்ட்டு (Classicist), கிளாசிகஸ் (Classicicus), கிளாசிசம் (Classicism) என்ற குறிப்பிட்ட ஐந்து சொற்களும் கிளாசு (Class) என்ற சொல்லை அடிப்படையாகக் கொண்டு பிறந்தது. இவற்றிற்கு மூலச் சொல்லாகக் கிளாசிசு (Classicus) என்ற இலத்தீன் சொல்லே உள்ளது என்பர். இதனைப் பொன்முகிலன் குறிப்பிடும்போது, Classical என்னும் சொல் முதலில் கி.மு.ஆறாம் நூற்றாண்டில் உரோமானிய படைப்பகுப்பினைக் குறிப்பிட Classicis என வழங்கப்பட்டது. இலத்தீன் மொழிச் சொல்லான இது பின்னர் Classique என பின்னொட்டுப் பெற்று உயர் வகுப்பினர்களுக்கு உரியது எனப் பொருள் விரிந்தது. இதனைப் பிரெஞ்சு மொழி Classique என ஒலித்தது.

செவ்விலக்கியம் என்பதற்கு மணவை முஸ்தபா அவர்கள் **“கிளாசிக்கல் லிட்ரேச்சர் என்பதைத் தமிழில் ‘செவ்விலக்கியம்’ எனப் பெயர்த்தலே பொருத்தமாகவும் பொருள் பொதிந்ததாகவும் அமையும்”[7]** என்று கூறுகின்றார். செவ்வியல் உயர்வு நிலை உடைய என்னும் பொருளில் வழங்கி வந்தது. இந்த **“பிரெஞ்சு ஒலிப்பே ஆங்கிலத்தில் Classic என பதினேழாம் நூற்றாண்டில் பதிவாகியது”[8].** இவ்வாறு செவ்வியல் என்பதற்கு அறிஞர்கள் வரையறை கூறுகின்றனர்.

## செவ்வியலும் செம்மொழியும்

தமிழ்மொழி செந்தமிழ் என்றும் செம்மொழி என்றும் செவ்வியல் என்றும் கூறப்படுகிறது. முதலில் தமிழ் மொழியைச் செந்தமிழ் என்றே அழைத்து வந்தனர் என்பதை,

**“செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணி”[9]**

**“செந்தமிழ் நிலம் சேர்ந்த பன்னிரு நிலத்தும்”[10]**

என்ற நூற்பாவில் தொல்காப்பியர் செந்தமிழ் என்ற சொல்லைப் பயன்படுத்தியதைக் காண முடிகின்றது. மேலும் ஐந்திணை ஐம்பதில் – செந்தமிழ் என்ற சொல் இடம் பெற்றுள்ளது. பாரதியார் தம் செந்தமிழ் நாடு என்ற பாடலில் செந்தமிழ் எனும் சொல்லைக் கையாண்டதை அறிய முடிகிறது. செந்தமிழ் எனும் இச்சொல்லைத் தொடர்ந்தே செம்மொழி என்னும் சொல்லைக் கையாளத் துவங்கினர். செம்மொழி என்ற சொல்லுக்கு நல்ல, சிறந்த இனிய மொழி என்று அறிஞர்கள் பொருள் கூறுவர்.

**“செம்மொழி என்பது நல்வார்த்தை, தொகையில்லாத ஒரு மொழி என்பதாகும். செம்மொழி என்னும் பதம் Classical language என்பதற்கான மொழிப்பெயர்ப்பாகக் கொள்ளப்படுகிறது”[11]** என்று கா.சிவதம்பி கூறுகின்றார். மணவை முஸ்தபா அவர்கள், **“கிளாசிக்கல் எனும் ஆங்கில வார்த்தை அப்படியே மொழி பெயர்க்கும்போது, செவ்வியல் மொழி என்று பெயர்க்கிறார்கள். கிளாசிக்கல் லிட்டரேச்சர் என்பதைச் செவ்வியல் இலக்கியம் என்று பெயர்க்கலாம். ஆனால், செவ்வியல் மொழி என்றால் புதுவகை இயல்மொழி என்றே எண்ணத் தோன்றும். செம்மொழியில் உள்ள செம் என்பது செம்மை என்பதன் சுருக்கமாகும். செம்மையாய் அமைந்த மொழி என்று பொருள். இதனால்தான் கிளாசிக்கல் லாங்குவேஜ் என்பதைச் செம்மொழி என்று கூறுவதே பொருந்தும்”[12]** என விளக்கம் தருகிறார். செம் என்னும் அடைவுச் சொல் பண்டையில் வளர்ந்து நின்றது. மொழி என்னும் சொல்லோடு இச் செம் என்னும் அடைவுச் சொல் பயன்படுத்தப் பெற்றமையை அகநானூற்றில் முதன்முதலாகக் காண முடிகிறது. இதனை,

**“ஞெமன்ன தெரிகோல் அன்ன செயிர்தீர் செம்மொழி”[13]**

என்ற பாடலடிகளால் உணர முடிகிறது. மேலும் செம்மொழி மாதவர் **(சிலம்பு–30)** செம்மொழி என்பது பற்றி பரிதிமாற் கலைஞர் அவர்கள் **“திருந்திய பண்புஞ் சீர்த்த**

**நாகரிகமும் பொருந்திய தூயமொழி புகழ் செம்மொழியாம் என்பது இலக்கணம்''[14]** என்று தம் உரையில் எடுத்துக் கூறியுள்ளார்.

செம்மொழி என்பதற்கு **"தொன்மைச் சிறப்பும் காலத்தால் அழியாத உயர் இலக்கியங்களையும் கொண்ட மொழி செம்மொழி எனப்படும். தொன்மை, உயர் இலக்கிய வளம், இலக்கணங்களுக்கு அடிப்படையாக அமைதல் ஆகிய நான்கு சிறப்பான பண்புகளில் அடிப்படையில் ஒருமொழி செம்மொழி''[15]** எனக் கூறுகின்றது வாழ்வியல் களஞ்சியம்.

செம்மை+தமிழ்=செந்தமிழ், செம்மை+மொழி=செம்மொழி, செம்மை+இயல்= செவ்வியல் என்று பிரித்துக் கூறும்பொழுது அனைத்திற்கும் பொதுவாகச் செம்மை என்ற சொல் வருகின்றது. செம்மை என்றால் அழகு, இணக்கம், உயர்வு, பெருமை, ஒற்றுமை, கனம், நடுவு நிலைமை, கந்தகம், கேது, நற்சீரடைதல், ஒழுங்குபடுத்தல், சிவப்பு, சுத்தம், செப்பம், செவ்வை, தூய்மை, நேர்மை, நடுவு நிலைமை, நன்மை, பண்பட்ட நிலை என்ற பொருளில் அமைகின்றது.

**"வேரல் வேலி வேர்கோட் பலவின்**
**சாரல்நாட செவ்வியை ஆகுமதி''[16]**

என்ற குறுந்தொகைப் பாடல் வரியில் செவ்வி என்ற சொல் சிறந்த, பொருந்திய என்ற பொருள்களின் அடிப்படையில் எடுத்தாளப்பட்டுள்ளது. அதேபோல திருக்குறளில்

**"மலரினும் மெல்லியது காமம்சிலர் அதன்**
**செவ்வி தலைப்படு வார்''[17]**

என்ற குறளில் சீர்மை, பொருத்தம், உயர்வு போன்ற பொருள்களில் ஆளப்பட்டுள்ளது. செவ்வியது – நன்மை அமைந்தது (குறள்–279) என்றும், செவ்வியான் – நேர்மையாளன் (குறள்–169) என்றும் செப்பம் – நடுவுநிலைமை (குறள்–112) எனவும், செவ்வி என்ற சொல் திருக்குறளில் பயின்று வந்ததை அறிய முடிகிறது.

## செவ்வியல் – அகராதி விளக்கம்

- ❖ கிரியாவின் தற்கால தமிழகராதி – பழமையானதும் இலக்கிய, இலக்கண வளம் உள்ளதும், தொடர்ச்சியான மரபை உடையதுமான மொழி (Classical language).
- ❖ சென்னைப் பல்கலைக் கழக (1992) ஆங்கிலத் தமிழ் அகராதி –
    - ➢ ஒப்புக் கொள்ளப்பட்ட சிறப்புடையது

- முதல் தரமான இலக்கிய நயம் வாய்ந்தது
- பண்டைய இலத்தீன் கிரேக்க ஆசிரியர்களுக்கு உரியதாகும்
- பண்டைய இலத்தீன் கிரேக்க கலைக்குரியதாகும்
- பண்டைய இலத்தீன் கிரேக்க கலை இலக்கியங்களில் புலமை வாய்ந்த சிறப்புடையதாகும்
- பண்டைய கிரேக்க ரோம ஆசிரியர்களின் நடையைப் பின்பற்றியதாகும்
- தூய இன்னெளிமை நயமும் கட்டமைதியும் வாய்ந்த என்னும் பொருள்களை அகர முதலிகள் தருகின்றன.
- பண்டைய இலத்தீன் கிரேக்க நூல்களை அல்லது கலைகளை அடிப்படையாகக் கொண்டதாகும்

❖ சென்னைப் பல்கலைக் கழக (1992) ஆங்கிலம் தமிழ் அகராதி – கிளாஸிக் என்னும் சொல்லிற்கு,

- புகழ் சான்ற எழுத்தாளர்
- தலைமை சால் கலைஞர்
- பண்டைய கிரேக்க ரோம இலக்கியச் சான்றோர்
- பண்டைய உயர்தனிச் செம்மொழிப் பாணி பின்பற்றுபவர்
- புகழ் சான்ற ஏடு
- முதல்தரமான
- ஒப்புக் கொள்ளப்பட்ட மேம்பாடுடைய
- செம்மொழி முன்மாதிரி மேற்கொள்பவர்
- பண்டைய கிரேக்க இலத்தீன் மொழியின் இலக்கிய ஆசிரியர்க்குரிய
- பண்டைய கிரேக்க ரோமக் கலை சார்ந்த
- பண்டைய கிரேக்க ரோமரின் நாகரிகப் பண்பாடு சார்ந்த
- கிரேக்க இலத்தீன் பழைமைக்குரிய

- பண்டைய கிரேக்க ரோமக் கலையின் இன்னெளிமைக் கட்டமைதி வாய்ந்த
- பண்டைய கிரேக்க ரோம இலக்கிய காலத் தொடர்புடைய

ஆகிய பொருண்மைகளைத் தருகின்றன.

- ஆங்கிலக் கலைக்களஞ்சியம் – செவ்வியல் என்பதற்கு **"மீ உயர்வு, நிலைபேறு, தொன்மை, சீர்மை, தெளிவு, கட்டுப்பாடு, உயர்குறிக் கோளியல்"**[18] என்று விளக்கம் கூறுகின்றது.
- Classic, Classical என்பதற்கு, **"புலமையான, இலக்கிய, கல்வி நூலான, செய்யுட்போக்கிய, சிறந்த"**[19] என்று வின்சுலோவின் ஆங்கிலத் தமிழ் அகராதி கூறுகின்றது.
- தமிழ் லெக்சிகன் – இடஞ்சுட்டல், காலம், சமயம், தருணம் என, செவ்வி என்ற சொல்லுக்கு விளக்கம் தருகின்றது.
- ஆக்ஸ்போர்டு அகராதி – செவ்வியல் தன்மைக்கு **"மீ உயர்வு, தொன்மை, தலைமையுடைமை, தரமுடைமை, எளிமை, சீர்மை, பாடலும் பொருளும் ஒத்திருத்தல்"**[20] என்று விளக்கம் கூறுகிறது.
- அமெரிக்க கலைக்களஞ்சியம் – செவ்வியல் பண்புகளுக்கு **"தெளிவு, மேன்மை, எளிமை, கருத்துச் செறிவு, பாடலும் பொருளும் ஒத்திருத்தல்"**[21] என கூறுகிறது.

## செவ்வியல் குறித்து அறிஞர்களின் கருத்துகள்

- **"கிரேக்க உரோம இலக்கியத் தொடர்புடைய தலைமையுடைமை, மரபுடைமை, தொன்மையுடைமை, பல கூறுகளின் இணைவுடைமை, தற்சார்பின்றி இருத்தல், காரண–காரியத் தொடர்புடைமை, உருவமும் உள்ளடக்கமும் பொருந்தியமைதல், உத்திகள், கற்பனை கணைகள், போலச் செய்தல், முன்னோடியாக இருத்தல்"**[22] என்று சாரதாம்பாள் அவர்கள் சங்கச் செவ்வியல் எனும் நூலில் கூறுகிறார்.
- ஜி.ஜான் சாமுவேல் அவர்கள் **"தொன்மை, தனித்தன்மை, அனைவராலும் ஏற்றுக் கொள்ளும் பொதுமைப் பண்புகள், நடுவு நிலைமை, பல மொழிகளுக்கு தாயாக அமைந்த தன்மை, நாகரீக மேம்பாடு பெற்ற ஓர்**

**இனத்தின் பண்பாட்டு கலை அனுபவ உணர்வு, தனித்து இயங்கும் ஆற்றல், இலக்கிய வளம், பண்பட்ட உயர்ந்த சிந்தனைகள், தனித்தன்மை வாய்ந்த உயரிய கலை இலக்கிய வெளிப்பாடுகள், மொழிக் கோட்பாடுகள்''**[23] ஆகியவற்றைக் கூறுகிறார்.

- **''உலகப் பொதுமை, நிலைபேறு, சார்புநிலை, தெளிவு, தேற்றம், கட்டுப்பாடு, எளிமை, கருவும் உருவும் ஒன்றிய உறவு''**[24] என்று ச.அகத்தியலிங்கம் கூறுகிறார்.

## செவ்வியலும் மேலைநாட்டு அறிஞர்களும்

- ★ 'டொமினிக்கு சீக்ரிடன்' என்ற ஆசிரியர், **''மேன்மையுடைமை, அழுத்தமுடைமை, வளர்ச்சி நோக்கிய இலக்கியக் கலை, நகை தழுவிய உவகை''**[25] என்று செவ்வியல் பண்புகளை கூறுகின்றார்.
- ★ 'கார்னைல்' என்ற பிரெஞ்சு அறிஞர், **''செவ்வியலில் முன்னோரைப் பார்த்துச் செய்தல், அரசியலும் முக்கியமான பொருளாக அமைதல் இலக்கியத்தின் பொருளானது உண்மை போலத் தோற்றம் செய்யும் வகையில் பழமையில் ஊறின சிறப்பு வாய்ந்ததாக இருத்தல், வரலாற்றைப் பெரும்பயன் கருதி சிறிது மாற்றிப் புனைதல், சிக்கலொன்றைத் தீர்த்தல், அறிவுபூர்வமான உலகைப் பிரதிபலித்தல், நாடகம் ஐந்து அங்கங்களாக அமைதல்''**[26] போன்றவற்றைச் செவ்வியல் கொள்கைகளாகக் கூறுகின்றார்.
- ★ டி.எஸ்.இலியட் அவர்கள் **''செவ்வியல் தலைமைக்குப் பண்பட்ட நிலை''**[27] என்று கூறுகின்றார்.
- ★ ரெனிபிரே என்ற பிரெஞ்சு அறிஞர் **''நம்புதல், புகழ்தல், போலச் செய்தல், நுணுக்கமுடையதாயிருத்தல், பொதுமைப்படுத்துதல், முன்மாதிரியாகக் காட்டுதல், மன உணர்வினை நுணுக்கமாக வெளிப்படுத்துதல், செயல்கள், நோக்கம்''**[28] போன்றவற்றைச் செவ்வியல் பண்புகளாகக் குறிப்பிடுகின்றார்.

இத்தகைய அறிஞர்களின் கருத்துகளை நோக்குமிடத்து செவ்வியல் தொன்மை வாய்ந்தது, மரபிற்கு உட்பட்டது, வாழ்வியல் உண்மைகளைக் கொண்டது. பொதுமைப் பண்புகளைப் பெற்று விளங்குவது என்பது தெளிவாகிறது.

## செவ்வியலுக்கான அடிப்படைத் தகுதிகள்

செவ்வியலுக்கான அடிப்படைத் தகுதிகளாக வா.செ.குழந்தைசாமி அவர்கள், **“செவ்வியல் மொழி என்ற தகுதி அம்மொழியில் இடம் பெற்றிருக்கும் இலக்கிய தரத்தின் அடிப்படையில் வருகிறது. முதலில் அடையாளம் காணப்படுவது செவ்வியல் இலக்கியம். அப்படிப்பட்ட இலக்கியத்தைக் கொண்டுள்ள மொழி செவ்வியல் மொழியாகும். ஆகவே செவ்வியல் இலக்கியம் ; அதன் அடிப்படையில் செவ்வியல் மொழி ; இதுதான் செவ்வியல் தகுதி”**[29] என்று கூறுகின்றார்.

பரிதிமாற்கலைஞர் அவர்கள் வடமொழி, இலத்தீன், கிரீக் போன்று தமிழும் உயர்தனிச் செம்மொழியே என்கின்றார். தமிழ் மொழியானது ஏனைய மொழிகளுக்குத் தலைமையானது என்றும் மற்ற மொழிகள் துணையின்றி தனித்து இயங்க வல்லது என்றும் அவர் கூறும் கூற்றானது **“தான் வழங்கும் நாட்டின் கண்ணுள்ள பல மொழிகட்குத் தலைமையும், அவற்றினும் மிக்க மேதகவுடைமையுள்ள மொழியே ‘உயர்மொழி’ ஆகும். தான் வழங்கும் நாட்டிற் பயிலும் மற்றைய மொழிகளின் உதவியின்றித் தனித்து இயங்கவல்ல ஆற்றல் சான்றதே தனிமொழி எனப்படும். தான் பிறமொழிகட்குச் செய்யும் உதவி மிகுந்தும் அவை தனக்குச் செய்யும் உதவி குறைந்தும் இருத்தலே வழக்காறு, தமிழ்மொழியினுதவி களையப்படின், தெலுங்கு முதலியன இயங்குதல் முடியாது. ஆனால் தமிழ்மொழி அவற்றினுதவியில்லாமலே தனித்து இயங்க வல்லது. ஆதலில் தமிழ் தனிமொழியே என்க”**[30] என்று எம்மொழி உதவியும் இன்றி தமிழ் மொழியானது தனித்து விளங்கும் ஆற்றல் பெற்றது என்று கூறுகின்றார்.

## தமிழ்ச் செவ்வியலின் காலம்

கி.மு.500 முதல் கி.மு.300 வரையிலுள்ள காலகட்டத்தில் பிறந்த கிரேக்க இலக்கியமும், கி.மு.70 முதல் கி.பி.18 வரையிலான காலகட்டத்தில் உருவான இலத்தீன் இலக்கியங்களும் செவ்வியல் இலக்கியங்கள் எனப்படுகின்றன.

**“உலக அரங்கில் கிரீக், இலத்தீன், ஹீப்ரு, சமஸ்கிருத மொழிகளின் பழைய இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்கள் எனப்படுகின்றன. பழமையும் சிறந்த**

**இலக்கிய இலக்கண பாரம்பரியமும் உள்ள மொழிகளின் இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களாக கருதப்படுகின்றது"[31]** என்று அகத்தியலிங்கம் கூறுகின்றார்.

## செவ்வியல் கோட்பாடுகள்

- ★ செவ்வியல் மிகப் பழங்காலத்தில் தோன்றியதும் பழமையும் வளமையும் வாய்ந்ததும் அக்கால மொழிகளுக்குத் தலைமையானதுமாகும்.
- ★ மரபுகளைப் பின்பற்றி அதன் வரையறைக்கு உட்பட்டதாக இருக்க வேண்டும்.
- ★ குறிப்பிட்ட கால கட்டத்தினைச் சுட்டி அதன் வளர்ச்சி நிலையைக் காட்ட வேண்டும்.
- ★ போதிப்பதும் மகிழ்விப்பதும் இதனுடைய கருத்தில்லாமல் இதன்மூலம் அறக்கருத்துகளும் இடம் பெற வேண்டும்.
- ★ பெருங்காப்பியம் முதல் சிறுகவிதை வரை முடிவுகள் எப்பொழுதும் திருத்தமாகவும் இலக்கியப் பண்புகளுடனும் இயங்க வேண்டும்.
- ★ தன்னுடைய காலச் சமுதாயத்தையும் குறிப்பிட்ட சமுதாயச் சித்தரிப்பையும் எடுத்துரைக்க வேண்டும்.
- ★ உலகியல் உண்மைகளும் வாழ்வியல் உண்மைகளும் இடம் பெற வேண்டும்.
- ★ சமுதாயத்திற்கு எவ்விதத் தீங்கும் விளைவிக்காமல் மேன்மை பொருந்திய பாடுபொருளாக இருக்க வேண்டும்.
- ★ சொல்லும் கருத்துக்கள் நம்பக் கூடியனவாகவும் நடக்கக் கூடியனவாகவும் காரண காரிய இயைபுடையனவாகவும் காணப்பட வேண்டும்.
- ★ விழுப்பக் கோட்பாடு என்பது செவ்வியலில் உருவாகி வெளிவந்த கோட்பாடாகும். இதில் நடைச் செம்மையும் சொல்லாட்சி உயர்வும் இதில் பொருந்தியுள்ளமையால் இஃது விழுப்பக் கோட்பாடாகும்.
- ★ செவ்வியல், நடப்பியலையும் குறிக்கோளியலையும் தன்னுள் கொண்டதாகக் காணப்படும்.

- ★ சமுதாயத்திற்கு எவ்விதத் தீங்கும் விளைவிக்காமல் மேன்மை பொருந்திய பாடுபொருளாக இருக்க வேண்டும்.
- ★ விழுமிய பாத்திரங்களைப் படைத்துக் காட்டும்போது பொதுவாக மனித இயல்புகள் அப்படியே திகழ வேண்டும்.
- ★ பாடுபொருளும் வடிவச் செம்மையும் ஒருங்கிணைந்து வடிவத்தில் நெகிழ்விற்கு இடம் கொடுக்காமல் வடிவம் செம்மை மிக்கதாய் காணப்பட வேண்டும்.
- ★ தான் எதையும் பின்பற்றாமல் தன்னைப் பின்னுள்ளோர் பின்பற்றி முன் மாதிரியாகத் திகழ வேண்டும். (இஃது இலக்கியத்திற்கு மட்டுமல்லாது இயற்கையும் கவிதையும் மரபுப்படி முன்மாதிரிகளாகத் திகழ்ந்து அதனுடைய பண்பு மேலோங்கி நிற்கிறது.)
- ★ பாடுபொருளை வெளிப்படுத்துமபோது தற்சார்புக் குறிப்புகள் மிகக் குறைவாகவே காணப்படும். அஃதாவது ஒரு கவிஞனுடைய கவிதையோ இலக்கியத்தையோ படிக்கும்பொழுது அதனுடைய பொருள்தான் மேலோங்கி நிற்க வேண்டும்.
- ★ இயைபு மீறாத கற்பனைகள் இடம் பெறும். அவை கடவுள் பற்றியனவாகவும் கடவுளருக்கும் மனிதருக்கும் பொதுவாக காணப்படும். புராண மரபுச் செய்திகளும் இடம் பெறும். அக்கற்பனைகளில் இயைபும் காரண காரியத்தோடு தான் செயற்பட வேண்டும்.
- ★ இலக்கியம் படைத்த தனிமனிதர்களையோ ஆசிரியரையோ சுட்டிக் காட்டாமல் இலக்கியத்திற்கே முக்கியவத்துவம் தர வேண்டும்.
- ★ இயற்கை வாழ்வுடன் இயைந்த தன்மை உடையதாகச் செவ்வியல் காணப்படுகிறது.
- ★ கருத்துக்களின் வெளிப்பாட்டில் தனிமனிதச் சிந்தனை என்பதைவிட ஒரு குழுவினரின் சமுதாயச் சிந்தனையென கருத்தில் கொள்ள வேண்டும்.
- ★ செவ்வியலுக்குரிய பண்புகள் எளிமை, தெளிவு, தேர்ந்தெடுத்த சொல்லாட்சி முதலியனவாகும். மரபுத் தொடர்கள், அடைமொழி இதோடு புணர்ந்த பெயர்களும் பயின்று வரும் பண்புடையன எனினும் இவை

தெளிவு கருதித் திரும்ப வரும் இயல்புடையனவாகவும் காணப்படும். பொருட்செறிவு மிக்கதாயினும் தெளிவுடைமையால் அஃது எளிமை உடையதாகவும் அமையும்.

★ வாழ்வியல் நிகழ்ச்சிகளைப் புனைவியலாக்காது வாழ்வியல் உண்மைகளைத் தேர்ந்தெடுத்த நிகழ்ச்சிகளை, உயர்ந்தனவற்றை நிலைத்து நிற்பனவற்றை வெளிப்படுத்தும் புனைவியல் தன்மை இடம் பெறும். செவ்வியலும் புனைவியலும் ஒன்றையொன்று சார்ந்தே வளர்ந்தன என்பர்.

★ இறந்தகால விழைவுடையது செவ்வியல். நிகழ்காலச் சித்தரிப்பு இருப்பினும் இறந்த காலப் பண்பாட்டு மரபுகளைப் போற்றும் மனப்பான்மை காணப்படும்.

என்று சங்க செவ்வியல் எனும் நூலில் சாரதாம்பாள் செவ்வியலின் கோட்பாடுகளை வரையறை செய்துள்ளார்.

## செவ்வியலின் வளர்ச்சி

செவ்வியல் கால இலக்கியங்களாக சீனம், ஹீப்ரு, இலத்தீன், பாலி, பிராகிருதம், சமஸ்கிருதம், தமிழ் போன்ற மொழிகளை ஆய்ந்து செவ்வியலின் வளர்ச்சி நிலையை

1. பழங்காலம் (தொடக்க காலம்),
2. செவ்வியல் வளர்ச்சி பெற்ற காலம்,
3. தற்காலம்

மூன்றாகப் பகுத்துக் கூறினர்.

## தொடக்க காலம் (கி.மு.850 – கி.மு.323)

இலக்கிய வரலாற்றின் தொடக்கத்தில் எழுந்த கிரேக்கம், உரோமானிய இலக்கியங்களே முதலில் தோன்றிய இலக்கியங்களாதலால் இவ்விலக்கியக் காலமே செவ்வியல் காலம் எனப்பட்டது. கிரேக்க இலக்கிய வரலாற்றில் காப்பியங்கள், நாடகம், தன்னுணர்ச்சிப்பா என்ற மூன்றும் பெரும்பங்கு வகித்தது. இதற்கு அடுத்து உரைநடை, உரைநடையில் வரலாறு, தத்துவம், புலப்பாடு போன்றனவும் தோற்றம் பெற்றது.

கிரேக்க இலக்கிய வளர்ச்சிக்கு வித்திட்ட ‘அரிஸ்டாட்டிலினின்’ ‘கவிதையியல்’ எனும் நூலும் ‘ஹோமரது இலியத் ஒடிஸி’ என்னும் இரட்டைக் காப்பியமும் புகழ்பெற்று

விளங்கின. அரிஸ்டாட்டிலைத் தொடர்ந்து பின்பற்றி ஹெலனிஸ்டிக், லாங்கின்ஸ், கோரஸ் போன்றோர் இலக்கியங்களையும் இலக்கியக் கொள்கைகளையும் உருவாக்கினர்.

தமிழ் மொழியையும் வடமொழியையும் ஒப்பிட்ட முன்னோடிகளுள் ஒருவர் சிவஞான முனிவர். இவர் கி.பி.18 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவர் எழுதிய தொல்காப்பியச் சூத்திர விருத்தியில் வடமொழியில் காணப் பெறாத தமிழ்மொழியின் சிறப்புகளைத் **“தமிழ் மொழிப் புணர்ச்சிக்குட்படுஞ் செய்கைகளும் குறியீடுகளும் வினைக்குறிப்பு, வினைத்தொகை முதலிய சொற்பாகுபாடுகளும் அகம் புறமென்னும் பொருட்பாகுபாடுகளும் குறிஞ்சி வெட்சி முதலிய திணைப் பாகுபாடுகளும் அவற்றின் பகுதிகளும் வெண்பா முதலிய செய்யுளிலக்கணமும் இன்னோரன்ன பிறவும் வடமொழியிற் பெறப்படா”**[32] என்று தமிழின் சிறப்புகளை எடுத்துக் கூறினார். மேலும் காஞ்சிபுராணத்தில் வடமொழி, தமிழ்மொழி இரண்டும் சமமானது (நிகரெனவும்) எனவும் கூறியுள்ளார்.

கி.பி.1856 ஆம் ஆண்டு இராபர்ட் கால்டுவெல் திராவிட மொழிகளில் ஒப்பிலக்கணம் என்ற தம் நூலில் திராவிட மொழிகள் அனைத்திலும் உயர்தனிச் செம்மொழியாய் நிலைபெற்று விளங்கும் தமிழ் தன்னகத்தே உள்ள வடமொழிச் சொற்களை முழுவதும் நீக்கிவிட்டு தனித்து இயங்க முடியும். இத்தமிழ் மொழி செந்தமிழ் என்றும் தனித்தமிழ் என்றும் வழங்கப்படும் என்றார். பெரும்பாலும் இம்மொழி இலக்கியங்கள் அனைத்தையும் எழுதப் பயன்படுவதுமாகிய பழந்தமிழ் அல்லது இயல்தமிழ், மிகமிகக் குறைந்த வடமொழிச் சொற்களையே கொண்டுள்ளது. **“சமஸ்கிருதச் சொற்களையும் எழுத்துக்களையும் மேற்கொள்வதை வெறுத்து ஒதுக்கிவிட்டு பழந்திராவிடத் தனிச்சிறப்பு வாய்ந்த மூலங்கள், சொல்லுருவங்கள், ஒலி முறைகளை மட்டும் மேற்கொள்வதில் காட்டும் ஆர்வத்தையும் விழிப்புணர்ச்சியையும் விடாமல் மேற்கொண்டிருப்பதினாலேயே அச்செந்தமிழ் தன் மொழியின் உரைநடை, பேச்சு நடைகளோடு சிறப்பாக வேறுபடுகிறது”**[33] என்று இராபர்ட் கால்டுவெல் தமிழை உயர்தனிச் செம்மொழி என்று குறிப்பிடுகின்றார்.

கி.பி.1887 ஆம் ஆண்டு பரிதிமாற்கலைஞர் எழுதிய தமிழ்மொழியின் வரலாறு எனும் நூலில், **“வடமொழி, இலத்தீன், கிரீக்கு முதலியன போல தமிழ்மொழியும் ‘உயர்தனிச் செம்மொழியாகும்’. தான் வழங்கும் நாட்டின்கண் உள்ள பல மொழிகட்குந்**

**தலைமையும் அவற்றினும் மிக்க சிறப்பு பொருந்திய மொழியே 'உயர்மொழி' இவ்விலக்கணத் தான் ஆராயுமிடத்துத் தமிழ், தெலுங்கு முதலியவற்றிற்கெல்லாந் தலைமையும் அவற்றினும் மிக்க சிறப்பும் பெருமையும் தானும் உயர்செம்மொழியே என்க. தான் வழங்கும் நாட்டிற் பயிலும் மற்றைய மொழிகளின் உதவியின்றித் தனித்து இயங்கவல்ல ஆற்றல் சான்றதே 'தனிமொழி' எனப்படும். தான் பிறமொழிகட்குச் செய்யும் உதவி மிகுந்தும் அவை தனக்குச் செய்யும் உதவி குறைந்தும் இருத்தலே வழக்காறு. தமிழ்மொழியினுதவி களையப்படின், தெலுங்கு மொழி இயங்க முடியாது. ஆனால் தமிழ்மொழி அவற்றினுதவியில்லாமலே சிறிதுமிடர்படுதலின்றித் தனித்து இயங்க வல்லது"**[34] என்று தமிழ்மொழியின் உயர்வையும் தனித்து இயங்கும் ஆற்றலைப் பெற்று விளங்குவதையும் எடுத்துக் காட்டுகிறார்.

## செவ்வியல் வளர்ச்சி பெற்ற காலம் (கி.பி.2 – கி.பி.18)

செவ்வியலின் பண்புகள் உரோமானிய இலக்கியத்தின்மூலம் ஐரோப்பிய இலக்கியங்களான இத்தாலி, பிரெஞ்சு, ஜெர்மனி, இங்கிலாந்து போன்ற மொழிகளில் கலக்க ஆரம்பித்தது.

செவ்வியல் கருத்துக்கள் எங்கும் பரவிய நிலையில் ஐரோப்பிய இலக்கியங்களிடையே ஒரு மறுமலர்ச்சியை ஏற்படுத்தியது. இக்கால கட்டத்தில்தான் கிளாசிகல் (Classical) என்ற சொல் தகுதிவாய்ந்த இலக்கியத்தைக் குறிப்பிட பயன்படுத்தப்பட்டது. மறுமலர்ச்சித் தாக்கத்தால் கிரேக்க இலத்தீன் மொழியில் இலக்கியங்கள் இயற்றப்பட்டன. கிரேக்க இலக்கியங்கள் பல இலத்தீன் மொழியில் மொழி பெயர்க்கப்பட்டன.

பிளேட்டோ, அரிஸ்டாட்டில் போன்றோரின் கருத்துக்களை விவாதம் செய்து விளக்கம் காணப்பட்டன. சேப்ளின், ரெனிபிரே போன்ற திறனாய்வாளர்கள் செவ்வியல் கருத்துக்களைக் கோட்பாடாக உருவாக்கினர்.

இக்கால கட்டத்தில்தான் மேலைநாட்டு இலக்கியங்களோடு தமிழ் இலக்கியங்களை ஒப்பிட்டும், தமிழ்மொழியின் சிறப்பை இயம்பும் நூல்களும் வெளிவரத் தொடங்கின. செம்மொழி பற்றி அனைவரும் அறிந்து கொள்ளும்படியாக இந்நூல்கள் அமைந்தது என்பதில் ஐயமில்லை.

- **1911** ஆம் ஆண்டு த.வே.இராதாகிருஷ்ணப்பிள்ளை உள்ளிட்ட சிலரால் தஞ்சை–கரந்தைத் தமிழ்ச்சங்கம் தோற்றுவிக்கப்பட்டது. அதில் தமிழவேள் உமாமகேசுவரனார் தலைவராக இருந்த கால கட்டத்தில் நடைபெற்ற ஆண்டுக் கூட்டங்களில் தமிழ் செம்மொழியாக அங்கீகரிக்கப்பட்ட வேண்டும் என்பது தொடர்பான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.
- **15.03.1918** அன்று தமிழைச் செம்மொழியாக ஏற்க வேண்டும் என்று அரசிற்கு விண்ணப்பம் விடுப்பதற்காகச் சைவ சித்தாந்த மகா சமாஜம் ஒரு கூட்டத்தைக் கூட்டியது. பச்சையப்பன் கல்லூரியில் நடைபெற்ற அக்கூட்டத்தில் மறைமலை அடிகளார் உரை நிகழ்த்தினார். தமிழ்மொழி செம்மொழியே எனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.
- தஞ்சை – கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் ஏழு, எட்டாம் ஆண்டுகளுக்கான விழா நடைபெற்றது. அவ்விழா திருக்கோவிலூர் ஆதீனம், திருப்பாதிரிப் புலியூர் திருஞானியார் மடத்தின் தலைவர் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சார்ய சுவாமிகள் தலைமையில், தமிழவேள் உமாமகேசுவரம் பிள்ளை, தமிழறிஞர் ந.மு.வேங்கடசாமி நாட்டார், டி.என்.குருமூர்த்திப் பிள்ளை, டி.கூரத்தாழ்வார் ஆகியோர் முன்னிலையில் நடைபெற்றது. இதில் **“தமிழ் மொழியானது தொன்மையும் சீர்மையும் செம்மையும் வாய்ந்து விளங்குகின்ற ஓர் உயர்தனிச் செம்மொழியென உறுதிப்படப் பல திறத்தாராலும் ஏற்றுக் கொள்ளப்படுவதால் சென்னைப் பல்கலைக்கழகத்தார் தாம் இதுகாறும் கொண்டிருந்த கொள்கையை மாற்றித் தமிழ்மொழி, ஓர் உயர்தனிச் செம்மொழியே என்பதை ஒப்புக்கொண்டு, இத் தென்னாட்டு பல்கலைக்கழகத்தில் அதற்கு முறைப்படி முதலிடமும் உரிமைகளும் கொடுக்க வேண்டும்”**[35] என்று வற்புறுத்தும் விதமாகத் தீர்மானம் இயற்றப்பட்டது.
- மேற்கூறியது போன்றதொரு தீர்மானம் திருச்சிராப்பள்ளியில் நடைபெற்ற பிராமணர் அல்லாதார் மாநாட்டிலும் நிறைவேற்றப்பட்டது. **1919** ஆம் ஆண்டு ஜூன் மாதம் **22** ஆம் நாளன்று நடைபெற்ற இம்மாநாட்டில், **“சென்னைப் பல்கலைக்கழகமும் வடமொழி ஆகிய மொழிகளுக்குச் சமமாக ; செறிவும் செழிப்பும் நிறைந்த மிகப் பழைமை வாய்ந்த இலக்கியங்களைக் கொண்டுள்ள**

**தமிழ் மொழியை, செம்மொழியாக அங்கீகாரம் செய்யவேண்டும்"**[36] என்ற தீர்மானமும் முன்மொழியப் பெற்றது.

- கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் பன்னிரண்டாவது ஆண்டுவிழாவில், **"உலகத்து உயர்தனிச் செம்மொழிகளில், முதல்மொழியென கருதப்படுவதற்குரித்தான எல்லா இலக்கணமும் தமிழ்மொழி உடையதாயிருப்பதால், ஐ.சி.எஸ்.பட்டத்திற்கு ஒரு பாடமாக ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று இந்திய அரசியலாரை வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளப்படுகிறது"**[37] எனும் தீர்மானம் இயற்றப்பட்டது.
- சாகித்ய அகாதெமியை உருவாக்குவதற்காக 15.03.1951 அன்று மாநாடு நடத்தப் பெற்றது. இதில் உரையாற்றிய இந்தியாவின் முதல் கல்வி அமைச்சரான மவுலானா அபுல்கலாம் ஆசாத் **"தமிழ்மொழி செழுமையும் தொன்மையும் மிக்க இலக்கியத்தைக் கொண்டது. அம்மொழியிலுள்ள கவிதைகள் வெளிநாட்டு மொழிகளில் மொழியாக்கம் செய்வதற்குரிய தகுதி படைத்தவை. தமிழ்மொழி உண்மையிலேயே ஒரு செம்மொழி என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும். தமிழ் செம்மொழியென அங்கீகாரம் செய்வதற்குரிய தகுதிப்பாடுகள் அனைத்தும் பண்டைக் காலத்தைச் சார்ந்தவை"**[38] என்று தமிழ் செம்மொழியே என்பதைச் சுட்டிக் காட்டினார்.
- 1966 ஆம் ஆண்டு மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் உலகின் செம்மொழித் தமிழ் என்ற கருத்தினை The Primary Classical Language of the Word என்ற நூலில் விளக்கினார்.
- 1967 ஆம் ஆண்டு ஏ.கே.இராமானுஜம் The Interior Landscape என்ற நூலிலும் 1968 ஆம் ஆண்டு க.கைலாசபதி Tamil Heroic Poetry – A Comparative Study எனும் நூலில் தமிழின் தனிச்சிறப்புகளைப் பட்டியலிடுகிறார். மேலும் பிறமொழிக் கூறுகள் தமிழில் எங்ஙனம் இடம் பெற்றுள்ளன என்பதை விளக்கிக் கூறுகிறார்.
- மனோன்மணீயம் நூலில் உள்ள 'நீராருங்கடலுடுத்த......' எனத் தொடங்கும் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் பாடல் 1970 ஆம் ஆண்டு தமிழ்த்தாய் வாழ்த்துப் பாடலாய் அறிவித்தது தமிழுக்குப் பெருமை சேர்த்தது.
- 1974ஆம் ஆண்டு வா.செ.குழந்தைசாமி அவர்கள் 'நமது அவசரத் தேவைகள்' என்ற தலைப்பில் அரசுத் துறையினர் கவனத்தை ஈர்க்கும் பொருட்டு நீண்ட

கட்டுரைகளை எழுதி அனுப்பினார். அக்கட்டுரையில் ஒன்று 'தமிழ் வளர்ச்சி' எனும் தலைப்பிட்ட கட்டுரை.

- தமிழக அரசு **1974** ஆம் ஆண்டு 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்' என்ற ஒன்றை நிறுவி, அதன் முதல் இயக்குநராக மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரை நியமித்தது. தமிழறிஞர்கள் போராட்டத்திற்கு கிடைத்த முதல் வெற்றியாக இதனைக் கருத முடிகிறது.
- **1976** இல் ஜார்ஜ் எல்.ஹார்ட் The Relationship between Tamil and Sanskrit என்ற நூலை எழுதினார்.
- **1988** ஆம் ஆண்டு அண்ணா பல்கலைக்கழகத்தின் வளர்தமிழ்மன்றம் வாயிலாக நடத்தப் பெற்ற கருத்தரங்கில் உலக செம்மொழிகளின் வரிசையில் தமிழ் என்ற கட்டுரையை ஜி.ஜான்சாமுவேல் அரங்கேற்றினார். இதில் உலகச் செம்மொழிகள் குறித்தும் அதில் தமிழ்மொழி பெறும் இடம் குறித்தும் செம்மொழிக்கான தகுதிகள் தமிழ்மொழி பெற்றிருப்பதனையும் பலரும் அறியும்படியாகக் கூறினார்.
- **1989** இல் செ.சாரதாம்பாள் செவ்வியல் கருத்துரு வரலாற்றினைச் செவ்வியல் எனும் நூல் வாயிலாக உரைத்தார். **1993** இல் இவரது சங்கச் செவ்வியல் எனும் நூல் வெளியானது.

## தற்காலம்

ஆங்கில இலக்கியத்தின் செவ்வியல் வளர்ச்சியே செவ்வியலின் தற்காலமாகக் கருதப்பட்டது. கி.பி.பதினைந்தாம் நூற்றாண்டிற்குப் பிறகு செவ்வியல் வளர்ச்சி உச்சநிலையை அடைந்தது. புதுப் புதுத் திறனாய்வாளர்கள் பலர் தோன்றி பல நூல்களை எழுதி வெளியிட்டனர்.

- ச.அகத்தியலிங்கம் சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே என்ற நூலை எழுதி வெளியிட்டார்.
- ஜி.ஜான்சாமுவேல் தமிழும் தமிழ் மறையும் என்ற நூலை எழுதி வெளியிட்டார். இந்நூலில் தமிழ் ஓர் உலகச் செவ்வியல் மொழி என்ற தலைப்பில் கட்டுரை ஒன்று எழுதியுள்ளார்.
- மலையமான் எழுதிய செவ்வியல் மொழி தமிழ் எனும் நூலும் வெளியானது.
- த.சுந்தரராசனின் தமிழ் செம்மொழியே எனும் நூல் வெளியானது.

- சாலினி இளந்திரையன் தமிழ்ச் செம்மொழி ஆவணம், மணவை முஸ்தபா செம்மொழி உள்ளும் புறமும், தமிழின் செம்மொழித் தகுதிகள் போன்று செவ்வியல் வளர்ச்சியை தம் நூல்கள் வழியாக எழுதி வெளியிட்டனர். இவ்வாறு செவ்வியலானது இலக்கியத்தோடு மட்டும் நின்றுவிடவில்லை. அது பல்வேறு துறைகளில் தடம் பதித்து வருகின்றது.

## கலைத்துறை

**“எளிமையான அழகு, சுவை, ஒழுக்கம், கட்டுப்பாடு, தெளிவு ஆகியனவற்றின் அடிப்படையில் எழுதப்படும் அல்லது வரையப்படும் சித்திரங்கள் ‘செவ்வியல் சித்திரங்கள்”[39]** எனப்பட்டன.

ஒருங்கிணைப்பு, சமனிலை, தெளிவு முதலியனவற்றைப் பெற்றுள்ள ஓவியம் ‘செவ்வியல் ஓவியம்’ எனப்பட்டது. செவ்வியல் பண்பு நடனம் ‘செவ்வியல் நடனம்’ எனப்பட்டது.

## இசைத்துறை

வடிவம், உணர்ச்சி, கருத்து, புனைவு ஆகிய பண்புகளைக் கொண்ட இசை செவ்வியல் இசை எனப்பட்டது. இது ஜெர்மன் நாட்டில் சிறப்பெய்தியது வொல்ப்காங் மோசர்ட் பிதோவன் ஆகியோரது இசைகள் செவ்வியல் இசை என வழங்கப்பட்டு வருகின்றன.

## பொருளாதாரத் துறை

செவ்வியலானது பொருளாதாரத் துறையிலும் கால் பதித்துள்ளது. கி.பி.18 ஆம் நூற்றாண்டில் செவ்வியல் பொருளாதாரம் மலர்ந்தது. இதனைத் தோற்றுவித்தவர் ஆடம்ஸ்மித் என்பவர் பொருளாதாரச் சுதந்திரம், அரசின் தலையீடு இல்லாமை, தடைபடாத போட்டி ஆகியவற்றைப் பொறுத்தே ‘செவ்வியல் பொருளாதாரம்’ போற்றப்பட்டது.

இச்செவ்வியலானது அகழ்வாய்விலும் இடம் பெறுகின்றது. கிரேக்கம், உரோமம் தொடர்பான ஆய்வுகள் தொல்லியல் ஆய்வுகளை ‘செவ்வியல் அகழாய்வு’ எனும் பெயரால் வழங்குகின்றன. ‘ஸ்காண்டி நேவியா’ நாட்டில் நளினமும் விரைவும் கலந்த பனிச்சருக்கல் முறை ‘செவ்வியல் பனிச்சருக்கல்’ என்று கூறப்படுகின்றது.

இவ்வாறு இலக்கியத்தில் பிறந்த செவ்வியல் பல்வேறு துறைகளிலும் வளர்ச்சி பெற்றுள்ளதை அறிய முடிகிறது.

## உலகச் செவ்வியல் இலக்கியங்கள்

மனிதன் தோன்றி வளர்ந்த மொழிகளின் எண்ணிக்கையோ சுமார் மூவாயிரத்திற்கும் மேற்பட்டதாகும். அம்மூவாயிரத்திற்கும் மேற்பட்ட மொழிகளில் எத்தனையோ மொழிகள் காலவெள்ளத்தால் அழிந்தொழிந்து இறந்துபட்டன. அவ்வாறான இம்மொழிகளில் சிறப்புற்ற மொழிகள் பலவாகும். அத்தகு சிறப்பும் மேன்மையும் தொன்மையும் வரலாற்றில் பேரிடமும் கொண்டு செம்மொழி, செவ்வியல் மொழி என்ற ஏற்றத்தினைப் பெற்ற மொழிகள் அரிதினும் அரிதாய் விரல்விட்டு எண்ணும் நிலையிலேயே இருக்கிறது. அவை

1. கிரேக்கம்,
2. இலத்தீன்,
3. ஹீப்ரு,
4. சமஸ்கிருதம்,
5. அரபிக்,
6. பாரசீகம்,
7. சீனம்.

## கிரேக்கம்

உலகச் செவ்வியல் மொழிகளில் முதலிடம் பெற்றிருப்பது கிரேக்கமாகும். இக் கிரேக்க மொழியானது உலக மொழி வரலாற்றில் மிகவும் 'பழமை' வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. நீண்ட நெடிய வரலாற்றினைக் கொண்டது கிரேக்க மொழியாகும். மூவாயிரத்து நானூறு ஆண்டுகள் பழமை வாய்ந்ததாகும். இம்மொழி செவ்வியல் தன்மை உடையதாகவும் செவ்வியல் இலக்கியம் என்பதற்கு கிரேக்க மொழி பொருத்தமுடையது என்பதும் புலப்படுகிறது.

செம்மொழி என்று சொல்லப்படுகின்ற கிரேக்க மொழி பற்றி அறிஞர்கள் குறிப்பிடும்போது, கிரேக்க மொழியானது, **"இந்தோ–ஐரோப்பிய மொழிக் குடும்பத்தின் தனித்துவமான கிளையாக அமையும் கிரீக், கிரேக்கர்களுடைய மொழியாகும். தென் பால்க்கனின் தேசிய மொழியான கிரீக் இந்தோ–ஐரோப்பிய மொழிகளில் ஏறக்குறைய**

**மூவாயிரத்து நானூறு ஆண்டுகள் கொண்ட நீண்ட எழுத்தாவணமுடைய மொழியாக அமைகிறது. இதனுடைய பழைமை நிலையிலே பண்டைய கிரேக்க இலக்கியங்கள் மற்றும் கிறித்துவ பைபிளின் புதிய ஏற்பாடு ஆகியவை செம்மொழியாக அமைந்தது. நவீன நிலையிலே கிரீஷ், சைபீரிஸ் நாடுகளின் உத்தியோக மொழியாகவும் உலகிலே பதின்மூன்று மில்லியன் மக்கள் பேசும் மொழியாகவும் அமைகின்றது"[40].** இவ்வாறு கிரேக்க மொழியானது சிறப்பு வாய்ந்த மொழியாக இருந்திருக்கின்றது என்பதை அறிஞர்கள் விளக்குகின்றார்கள்.

**"கி.மு.ஐந்தாவது நூற்றாண்டு முதல் கி.மு.நான்காவது நூற்றாண்டு வரையுள்ள காலப் பகுதியே கிரேக்க இலக்கியங்களின் செவ்வியல் காலப் பகுதியாகக் கருதப்படுகின்றது"[41]** என்று அகத்தியலிங்கம் கூறுகின்றார். இக்கால கட்டத்தில் தான் சிறந்த புலவர்கள் தோன்றினர். பழங்காலத்தில் இருந்த இலக்கியங்கள் மீண்டும் துளிர்த்து காணப்பட்டது. இக்கால கட்டத்தில் முதலில் 'ஹோமரின் – இலியது மற்றும் ஒடிசி' என்ற காப்பியங்கள் ஆதிக்கம் செலுத்தியதாகக் கூறுகின்றனர். அதன்பின் ஹெரடோட்டஸ், வரலாற்றுப் பதிவுகள், டெமாஸ்தனிசின் – சொற்பொழிவு, பிளேட்டோ, அரிஸ்டாட்டில் தத்துவ நூல்கள், எஸ்ச்சிலஸ், சோஃபோசில்ஸ் துன்பியல் நாடகம், அரிஸ்ட்டேஃபேன்ஸ் – இன்பியல் நாடகம் போன்று பல கவிஞர்களின் படைப்புகள் செவ்வியல் இலக்கியங்களாகத் திகழ்ந்தன.

## இலத்தீன்

உலக இலக்கியங்களுள் பழமையும், பாரம்பரியமும் கொண்டு பலராலும் போற்றப்படுகின்ற மொழி இலத்தீன் ஆகும். இலத்தீன் இலக்கியம் கிரேக்க இலக்கியத்தின் மொழிபெயர்ப்பாகத்தான் தொடங்கியது. ஆனால் இதன் வளர்ச்சியால் இதன் உயர்ந்த தரமும் தனித்தன்மையும் பெற்று இம்மொழி தனித்து நின்றது. இனீட் (Aeneid) என்ற மாபெரும் காப்பியத்தைப் பெற்றது. இம்மொழியின் வளர்ச்சிக்கு டிபுலஸ் (Tibulus), ஓவிட் (Ovid) , சேலஸ்ட் (Salluset), டேசிட்டஸ் (Tacitus), செனகா (Seneca) போன்ற பல அறிஞர்கள் பாடுபட்டனர்.

இத்தாலி நாட்டில் லாத்தியம் என்னும் மாவட்டத்து மக்கள் குழுவினரால் பேசப்பட்ட மொழியாக இருந்த இலத்தீன், பின்னர் உரோமானியருடைய ஆட்சி மொழியாக மாறிவிட்டது. கிரேக்கர்கள் அறிவுசார் கலைகளில் ஈடுபட உரோமானியரே

யதார்த்தவாதிகளாகப் போரிலும், அரசியலிலும் ஈடுபட்டனர். அவர்கள் செய்முறைக் கலைகளையும், அறிவியலையும் பெரிதும் மதித்தனர். உலகமெல்லாம் பரவிய சட்ட அமைப்புக்கு அடிக்கல் நாட்டியவர்கள் உரோமானியரே ஆவார்.

**“ ‘ஐரோப்பாவின் மொழி’ என்னும் சிறப்பினை இலத்தின்மொழி பெற்றுக் கொண்டது. கத்தோலிக்க மதத்தின் மொழியாக அது விளங்கியது. சட்டம், அறிவியல் ஆகியவற்றின் கலைச்சொற்கள், சொற்றொடர்கள் இலத்தீன் மொழியிலிருந்தே பெறப்பட்டன”[42]** என்று சண்முகதாஸ் கூறுகின்றார்.

## ஹீப்ரு

உலகின் பழைய மொழிகளில் ஒன்று ஹீப்ரு மொழி தொன்மையானதால் இது செவ்வியல் மொழியாகக் கருதப்படுகிறது.

**“உலகில் எத்தனையோ தேசிய இனங்கள் தங்கள் ஆன்மீக ஈடேற்றத்துக்கான சமய நூலாகக் கொள்ளும் விவிலியம், ஹீப்ரு மொழியிலானது, பைபிள் ஹீப்ரு அல்லது செவ்வியல் ஹீப்ரு எனக் கூறப்படுவது ஹீப்ரு மொழியின் பண்டைய வடிவமாகும். ஹீப்ரு பைபிள் மற்றும் இஸ்ரேலியக் கல்வெட்டுக்கள் ஆகியன இம்மொழியிலேயே எழுதப்பட்டன. கி.மு.300 அளவில் பேசப்படாத மொழியாக இது வழக்கழிந்தபோதும், இருபதாம் நூற்றாண்டில் மீண்டும் புத்துயிர் பெற்ற தனித்துவமுடைய மொழியாக அமைகின்றது. இம்மொழியினை வழக்கிழந்த மொழிகள் பட்டியலிலே டாக்டர் ச.அகத்தியலிங்கம் சேர்த்துள்ளார்”[43]** என்பதை சண்முகதாஸ் மெய்ப்பிக்கிறார்.

இம்மொழி பேச்சுமொழியில் வழக்கிழந்தாலும் புத்துயிர் பெற்று பன்னெடுங்காலமாகக் கோயில்களில் படிக்கும் புனித மொழியாகவும் ஆய்வு செய்யும் மொழியாகவும் பயன்பட்டு வந்தது. இன்றைய இஸ்ரேல் நாட்டின் தோற்றத்திற்குப் பின்னர் இது மீண்டும் ஒரு பேச்சுமொழியாகத் தோற்றம் பெற்றது என்று கூறுகின்றனர். இது ஹெபிட்டோ செமிட்டிக் மொழிகளில் செமிட்டிக் பிரிவைச் சார்ந்தது. இது மெசபடோமியப் பகுதியில் வாழ்ந்த யூதர்களின் மொழி ஆகும். இதனை செம்மொழியாகவும் இதன் இலக்கியத்தைச் செவ்வியல் இலக்கியமாகவும் கருதுவர்.

## சமஸ்கிருதம்

கிரேக்கம், இலத்தீன், ஹீப்ரு இலக்கியங்களைப் போன்று சமஸ்கிருத இலக்கியங்களும் உலக மொழிகளில் ஒன்றாக உள்ளது. காப்பிய அரசர்கள் எனக்

கூறப்படும் வால்மீகி, வியாசர், நாடகச் சக்கரவர்த்தி எனக் கொண்டாடப்படும் காளிதாசர், உலக இலக்கணப் பேராசான் என எண்ணப்படும் பாணினி போன்ற பல அறிஞர்களைப் பெற்றெடுத்த பெருமையைக் கொண்டது சமஸ்கிருதமாகும்.

**“கிரேக்கச் செவ்வியல் காலம் இருநூறு ஆண்டுகள். இலத்தீன் செவ்வியல் காலம் நூறு ஆண்டுகள். தமிழ் செவ்வியல் காலம் முந்நூறு ஆண்டுகள். ஆனால் சமஸ்கிருத செவ்வியல் காலம் ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகள். இதனால் இக்காலப் பகுதியில் தோன்றிய நூல்களும் எண்ணிக்கையில் அதிகம்தான். ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகள் என்பது மிக அதிகமான காலம். இந்நிலையில் அதிகமான நூல்கள் இக்காலப் பகுதியில் உள்ளமை எதிர்ப்பார்க்கின்ற ஒன்றுதான். சமஸ்கிருத மொழியின் வாழ்வில் மிகுதியான காலம் செவ்வியல் காலமே”[44]** என்று அகத்தியலிங்கம் கூறுகின்றார்.

**பாரசீகம்**

பாரசீகத்தின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றி ஆராயுமிடத்து, செம்மொழித் தகுதி பெற்ற பாரசீக மொழியானது, **“இந்தோ–ஐரோப்பிய மொழிக் குடும்பத்தின் கிளைக் குடும்பமாகிய இந்தோ–குரானிய மொழியாகப் பாரசீகம் அமைகின்றது. இது பெர்சியா அல்லது பாரசீகம் என்றழைக்கப்பட்ட ஈரான் நாட்டு மொழியாகும். அது அரபிக் வரி வடிவினியே எழுதப்பெற்றது. பாரசீக மொழி வளர்ச்சியினை பண்டைய காலம் (கி.மு.3 வரை), இடைக்காலம் (கி.பி.9 வரை), நவீன காலம் (கி.பி.9 தொடக்கம்) என மூன்று பகுதிகளாகப் பகுத்து நோக்கலாம். ஆதி காலத்துப் பாரசீகர்கள் தங்களுடைய அவெஸ்தா என்னும் வேதத்தை ஜரதுஷ்டிரர் அருளிச் செய்தார் என்று நம்பினர். ஜரதுஷ்டிரர் பாரசீகரின் ஞானகுருவாக அமைந்தவர். உண்மையில் அவர் அவெஸ்தாவை இயற்றவில்லை. பல காலங்களாக அவர் கூறி வந்தனவற்றை அவருடைய சீடர்கள் பின்னர் தொகுத்தனர். எப்படி இருப்பினும் மொழியில் அடிப்படையில் பாரசீக மொழியின் தொடக்க கால இலக்கியம் என்று இதனைக் கொள்ளலாம். பாரசீக மொழியின் பொற்காலம் கி.பி.9–க்கும், 15–க்கும் இடைப்பட்ட காலமாகும். ஜரதுஷ்டிரரின் கொள்கைதான் கி.பி.8ஆம் நூற்றாண்டில் அராபியர்கள் வரும்வரை, பாரசீகர்களுடைய ஒழுக்கக் கோட்பாக அமைந்தது”[45].**

கி.பி. ஏழாம் நூற்றாண்டளவில் பாரசீகம் இஸ்லாமியரால் கைப்பற்றப்பட்டபோது, அந்நாட்டுப் பண்டைய இலக்கியங்கள் பல அழிந்து போயின என்றும், பின்னாளில் பாரசீகர்கள் இஸ்லாமியப் பேரரசில் எழுத்தர்களாகவும் நிர்வாகத்தினராகவும் எழுத்தாளர்களாகவும் கவிஞர்களாகவும் விளங்கினர். பிற்கால இலக்கியக்காரர் பாரசீக மொழியிலேயே எழுதினர். பாரசீகத்தின் தற்கால நிலை பற்றி வையாபுரிப் பிள்ளை குறிப்பிடும்பொழுது, **“தற்காலத்தில் பாரசீகத்தின் பெருமை பழம்பெருமையாகி விட்டது. அதன் தொன்னகரங்கள் பலவும் இடிந்து பாழாகிப் போயின. ஆனால், அந்த தேசத்தை ஸாபி, ஹப்விஸ், ஜாமி முதலிய பெருங்கவிஞர்கள் நாம் அடிக்கடி நினைவுகூறும்படி செய்துள்ளனர்”**[46] என்று குறிப்பிடுகிறார்.

## அரபிக்

அரபிக் மொழியினைப் பற்றி ச.அகத்தியலிங்கம் கூறும்பொழுது, **“பல்வேறு நாடுகளில் வழங்கும் பேச்சுவழக்கு அரபு மொழிகளில் வேறுபடுவதைக் காணலாம். எனினும், இலக்கிய வழக்கு அரபிக் மொழியால் அதிக வேற்றுமையின்றியே காணப்படுகின்றது. இன்றைய இலக்கிய மொழிக்கும், குர்ஆன் மொழிக்கும் அதிக வேற்றுமை இல்லை. குர்ஆன் அரபிக்கை, பழைய இலக்கிய அரபிக் என்பர்”**[47] என்று கூறுவதை மேற்கோளாக சண்முகதாஸ் அவர்கள் எடுத்துக் காட்டுகிறார். மேலும், சண்முகதாஸ் அவர்கள் அரபிக் மொழி பற்றியும், அதன் நிலை பற்றியும் அது வழக்கில் தோன்றியது எப்போது என்றும், அதன் இலக்கியச் சிறப்பு என்னவென்றும் அறிந்து கூறும்பொழுது, **“இலக்கிய அரபு மொழி மதபோதக மொழியாக அமைய, பேச்சு வழக்கு அரபிக் வானொலி, தொலைக்காட்சி, நாட்டுப்புறக் கதையாடல்கள், பள்ளிவாசலில் அளவளாவுதல் என்பனவற்றுக்குப் பயன்பட்டது, இஸ்லாமிய சமயத்தின் மொழியாக அரபிக் அமைந்தாலும், அச்சமயம் கி.பி.622–ல் தோன்றுவதற்கு முன்னரே அம்மொழி வழக்கில் இருந்தது. செவ்வியல் அரபிக் மொழியிலே திருக்குர்ஆன் எழுதப்பட்டமையால் முஸ்லீம்களும் அந்த மொழியிலேயே தம்முடைய வழிபாட்டினை மேற்கொண்டு வருகின்றனர். அரபிக் இஸ்லாம் சமயத்தின் வளர்ச்சிக்கும் செவ்வியல் புலமைக்கும், சமய நம்பிக்கைக்குமான மொழியாயிற்று”**[48] என்று கூறியுள்ளார்.

அரபிக்கின் இலக்கியங்களைப் பற்றி டாக்டர்.குழந்தைசாமி குறிப்பிடுகையில், கஸல் அல்லது காதல் கவிதை அரபிக் இலக்கியத்திலேயே முக்கிய இடம் பெறுகிறது.

அரபிக் புனைகதை முயற்சிக்கு எடுத்துக்காட்டாக ஆயிரத்தொரு இரவுகள் என்னும் நூலைக் குறிப்பிடலாம். மேலும், **“அரபிக்கின் பொற்கால இலக்கியம் செம்மொழி இலக்கியம் எனக் குறிப்பிட்டாலும் கிரேக்க, இலத்தீன் இலக்கியங்களுடன் ஒப்பிடுமிடத்து செம்மொழி இலக்கியம் எனக் கொள்ளமுடியாது, சுருங்கக்கூறின் கிரேக்கம், இலத்தீன், சமஸ்கிருதம் போன்றவை இருக்கும் செம்மொழிக் குடும்பத்தில் ஒரு மொழியாக அரபிக் மொழி வழங்கப்பட்டது”**[49] என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு மொழியின் போக்கு, வளர்ச்சி, இலக்கிய மாட்சி, அதன் செம்மொழித்திறன் போன்றவற்றை அறிஞர்கள் எடுத்துரைத்துச் செல்கின்றனர்.

### சீனம்

சீனமொழியைச் செவ்வியல் மொழி என்று கூறியவர் ‘கன்ஃபூசியஸ்’ (Confucious) மற்றும் லாவுட்சு (Lao-Tse) இருவரும் ஆவார். சீனமொழியில் கி.மு.3000 முதல் கி.மு.6000 வரையிலான இலக்கியங்களை நான்கு தொகுதிகளாகத் தொகுத்து தனது ஐந்தாவது தொகுதியான ‘தென்றலும் வாடையும்’ என்ற நூலை வெளியிட்டார் ‘கன்பூசியஸ்’ அதில் காலத்தையும் வரையறை செய்து கூறியுள்ளதால் பழம் பாடல்களின் தொகுதியாக அமைகின்றது.

கன்ஃபூசியசுக்குச் சம காலத்தவராக இருந்த ‘லாவுட்சு’ என்ற அறிஞர் ‘தாவ்’ என்ற கொள்கையைக் கண்டார். இவருடைய கொள்கையை இலக்கியங்கள் வாயிலாக ‘லியோட்சு’, ‘ஹான்–பொய்–ம்சோ’ இருவரும் பரப்பினர்.

**“தொடக்ககால சீனக் கவிதைத் தொகுதி சுச்சி (சுவின் பாடல்கள்) என்பதாகும். கு–யுவின் (கி.மு.340 – கி.மு.278) ஸொங்யு (கி.மு.4 ஆம் நூற்றாண்டு) ஆகியோருடைய கவிதைகள் இத்தொகுதியிலே இடம் பெற்றுள்ளன. டாங் அரச பரம்பரைக் (Tang Dynasty) காலத்திலேயே சீனச் செவ்வியல் கவிதை உச்சநிலையை அடைந்தது. லி பை (கி.பி.701 – கி.பி.762), துஃப்பு (கி.பி.712 – கி.பி.770) ஆகிய இரு கவிஞர்களும் இக்காலத்தைச் சேர்ந்தவர்களாவர். அவர்களுள் லி பை ஷொமான்லிக் கவிதைகளை இயற்றினார். துஃபு கன்பூசியஸின் கொள்கைகளின் செல்வாக்குக்குட்பட்டு சமூகப் பணியுள்ள கவிதைகளை இயற்றினார். பிற்கால டாங் அரச பரம்பரைக் கவிஞர்கள் யதார்த்தமும் சமூகத் திறனாய்வும் உடையவர்களாக அமைந்தனர். பை ஜீயி (772–846) தன்னுடைய காலச் சமூகத்தை விமர்சிக்கும் பாடல்களைப் பாடினார். லி யுன் (789–831)**

**பெரும்பாலும் அரண்மனைக் கவிதைகளையே பாடினார். சீன இலக்கியப் பாரம்பரியத்தை நோக்குமிடத்து ஏதாவது ஒரு காலம் செவ்வியற் காலமென்றோ, ஏதாவது ஒரு இலக்கியத் தொகுதி செவ்வியல் இலக்கியமென்றோ எங்கும் கூறப்படவில்லை. ஆனால், இடையறாத இலக்கிய மரபும் பெருந்தொகையாகக் கிடைக்கப் பெறும் இலக்கியமும் சீனம் ஒரு செம்மொழி எனக் கூறுவதற்கு உதவுகின்றன எனக் கூறுகின்றனர் அறிஞர் பெருமக்கள்''[50].** இவ்வாறு சீனமொழியினது தொடர்ச்சியாக இலக்கிய மொழியாகப் பேச்சுமொழியாகப் வழங்கி வந்திருக்கின்றது என்பதுவே இதன் பெரும்தகுதிக்கான சான்றாக அமைகின்றது என்று சண்முகதாஸ் கூறுகின்றார். இவ்வாறு அரபு, சீனம், இலத்தீன், கிரேக்கம், சமஸ்கிருதம், ஹீப்ரு, பாரசீகம் ஆகிய மொழிகள் உயர்தனிச் செம்மொழிகள்தான் என்பதை அறிஞர்களின் கூற்றுகளின் வாயிலாக அறிந்து கொள்ள முடிகின்றது.

## உலகச் செவ்வியல் மொழி தமிழ்மொழி

உலகச் செவ்வியல் இலக்கியமான கிரேக்கம், இலத்தீன், ஹீப்ரு, சமஸ்கிருதம், சீனம் இவற்றோடு ஒப்ப வைத்து போற்றும் மரபை உடையது தமிழ்மொழி ஆகும்.

தமிழின் தொன்மையை உணர்த்தும்விதமாக,

**''கல்தோன்றி மண்தோன்றா காலத்தே வாளொடு**
**முன் தோன்றிய மூத்த குடி''[51]**

என்று புறப்பொருள் வெண்பாமாலை உணர்த்துகின்றது.

**''முற்கால தமிழ்க் கவிதைகள் இந்தியாவின் மற்ற இலக்கியங்கள் அனைத்தினின்றும் வேறுபட்டவை என்பதால் மட்டுமின்றி, அவற்றின் மிக உயர்ந்த தரத்தின் அடிப்படையிலும் தனித்தன்மை வாய்ந்தவையாகும். சங்கத் தொகுதியில் இடம் பெறும் 26,350 அடிகள் உலகின் மகத்தான ஒரு செவ்வியல் மொழி தமிழ் என்பதை நிலைநிறுத்த போதுமான சான்று''[52]** என்று மேலைநாட்டு அறிஞரான கபில் சுவலபில் கூறுகின்றார்.

செம்மொழிகள் என்று எடுத்துச் சொல்லப்படுகின்ற மொழிகளின் அமைப்பு, வரலாறு, இலக்கியச் சிறப்பு இன்றைய நிலை போன்றவற்றை பெருமக்கள் எடுத்துக்காட்டுகையில் அஃது, **''தொல்பழமை, தனித்தன்மை, பொதுமைப்பண்பு, நடுநிலை, பன்மொழிகளுக்கான தாய்மை நிலை, பிற மொழித் தாக்கமின்மை, இலக்கிய வலிமை, பண்பாடு, பட்டறிவு வெளிப்பாட்டு நிலை, கலை நுணுக்க வளம், மேம்பாட்டு**

**எண்ணத் தகைமை, இலக்கண வளம் எனும் பதினொரு தகுதிகளும் முற்ற வாய்ந்த 'செம்மொழி'யாக, மிகப் பல்லாயிரம் ஆண்டுகள் தொடர்ச்சியில் உயிர்வாழும் அறிவுசார் அறிவியல் மொழியாக, இயற்கைத் தோற்றத்து மொழியாக உலகப் பெருமொழிகள் மிகப் பலவற்றின் அடிப்படைத் தாய்மொழியாக உலக முதன்மொழியாகத் தமிழ் மட்டுமே இன்று இவ்வுலகத்துள் இயங்குகின்றது''[53]** என்று செம்மார்ந்த பெருமிதத்துடன் தமிழ்மொழியை ஆய்ந்து கூறியுள்ளனர்.

## செம்மொழித் தமிழிற்கான முயற்சி

- **1856** ல் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' என்ற நூலில் முதன்முதலில் கால்டுவெல் 'தமிழ்மொழி ஓர் உயர்தனிச் செம்மொழி' எனக் கூறினார்.
- **1887–**ல் தமிழிற்குச் செம்மொழி தகுதி கோரிய முதல் தமிழர் பரிதிமாற் கலைஞர் ஆவார்.
- **1911** ஆம் ஆண்டு கரந்தைத் தமிழ்ச் சங்கம் தோன்றியது. அதில் தமிழவேள் உமாமகேசுவரனார் தலைவராக இருந்த காலத்தில் நடைபெற்ற ஆண்டுக் கூட்டங்களில் தமிழ் செம்மொழியாக அங்கீகரிக்கப்பட வேண்டும் என்று கூறி விழிப்புணர்வை ஏற்படுத்தினார்.
- **1917** ஆம் ஆண்டு மணவை முஸ்தபா செம்மொழித் தகுதிகளை நுட்பமாக ஆய்ந்து தமிழ் செய்யுட்களோடு பொருத்திக் கூறினார்.
- **1966** ஆம் ஆண்டு தமிழின் செம்மொழித் தகுதிகளை தக்க சான்றுடன் எடுத்துக் கூறியவர் தேவநேய பாவாணர்.
- ஆறு அழகப்பன் செம்மொழி குறித்த வரலாற்றுச் சிந்தனைகளைத் தூண்டினார்.

## செம்மொழித் தகுதி

பல ஆண்டுகளாக தமிழ் உணர்வாளர்கள் விடுத்து வந்த கோரிக்கையை மத்திய அரசு ஏற்று தமிழ்மொழி செம்மொழியே என **12.10.2004** அன்று அறிவித்தது. No.IV-14014/7/2004-N1-11 என்ற அரசாணை தமிழைச் செவ்வியல் மொழி என அறிவித்தது. சுதந்திர இந்தியாவில் அறிவிக்கப்பட்ட முதல் செவ்வியல் மொழியாகவும் மைய அரசு அரசாணையின் வழி அறிவித்த முதல் செவ்வியல் மொழி என்ற பெருமையும்

கொண்டு தமிழ்மொழி விளங்குகின்றது. தமிழ் வளர்ச்சிக்கு வழிகோலும்விதமாகவும் தமிழ் ஆய்வுக்கு உதவுவதற்காகவும் இந்திய அரசின் மனிதவள மேம்பாட்டு அமைச்சகத்தின்கீழ் ஓர் அமைப்பு உருவாக்கப்பட்டது. இது **2006** மார்ச் முதல் மைசூரிலுள்ள இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனத்தில் செம்மொழித் தமிழ் உயராய்வு மையம் எனும் பெயரில் செயல்பட்டு வருகிறது. **2008** மே **19** முதல் சென்னையில் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம் எனும் பெயரில் இந்நிறுவனம் செயல்பட்டு வருகிறது.

## செவ்வியல் நூல்கள்

செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம், சென்னை வெளியிட்டுள்ள அறிக்கையில் கி.பி.**6** ஆம் நூற்றாண்டிற்கு முந்தைய சங்க இலக்கியங்கள் சங்க மருவிய கால இலக்கியங்கள், காப்பியங்கள் என நாற்பத்தொறு நூல்களை இனங்கண்டு ‘செவ்வியல் நூல்கள்’ என பட்டியலிட்டுள்ளது. இந்நாற்பத்தொறு நூல்களும் தொன்மையும் பிறமொழி கலப்பும் இல்லாத பழமை வாய்ந்த நூல்களாகும். அந்நூல்களாவன,

| | | |
|---|---|---|
| தொல்காப்பியம் | – | 1 |
| எட்டுத்தொகை | – | 8 |
| பத்துப்பாட்டு | – | 10 |
| பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் | – | 18 |
| சிலப்பதிகாரம் | – | 1 |
| மணிமேகலை | – | 1 |
| முத்தொள்ளாயிரம் | – | 1 |
| இறையனார் அகப்பொருள் | – | 1 |
| மொத்தம் | : | 41 |

## செவ்வியல் கூறுகள்

செவ்வியல் கூறுகளைப் பற்றி அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களைக் கூறியுள்ளனர்.

**1. பரிதிமாற் கலைஞர்**

**"1. சீர்மை மிக்க நாகரிகம்,**

**2. தனித்தியங்கும் தூய்மை,**

**3. தெளிவான சொல், பொருள் முடிபுகள்,**

**4. கருதிய பொருள் உணர்த்தும் திறன்,**

**5. புதியன போற்றும் பெற்றிமை"**[54] என்றவாறு செம்மொழி வரையறைகளை எடுத்துக் கூறியுள்ளார், பரிதிமாற் கலைஞர்.

**2. தேவநேயப் பாவாணர்**

மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் இயல்பாகத் தோன்றிய இயன்மொழிக்குப் பதினாறு பண்புகள் இருக்க வேண்டும். அப்பதினாறும் அமைந்த மொழி தமிழ் ஒன்று மட்டுமே என்று திட்டவட்டமான ஆய்வுகளாலும் ஆய்வுகளில் முதிர்ந்து விளைந்த கருத்துக்களாலும் தெளிவுற எடுத்துக்காட்டி நிறுவுகின்றார். அவர் கூறும் அப்பதினாறு பண்புகள் வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| **"தொன்மை** | **இயன்மை** | **தூய்மை** | **தாய்மை** |
| **முன்மை** | **வியன்மை** | **வளமை** | **மறைமை** |
| **எண்மை** | **இளமை** | **இனிமை** | **தனிமை** |
| **ஒண்மை** | **இறைமை** | **அம்மை** | **செம்மை** |
| **எனும்பதி** | **னாறும் இன்றமிழ்** | **இயல்பெனப்"**[55] | |

என்று பாவாணர் எடுத்துக் காட்டுகிறார்.

மேலும், செம்மொழி பற்றி பாவாணர் அவர்கள்

1. **"தொல் இலெமூரியா காலத்தோடு தொடர்புடைமை.**
2. **சந்த ஒலிச் சால்பு.**
3. **உலகளாவிய உணர்வுப் பெருமிதம்.**
4. **ஆரிய மொழிகளுக்கு இடையே தலை நிமிரும் தமிழின் தரம்.**
5. **சொல்லமைப்பின் தொன்மையும், ஒலிச் சுருக்கமும்.**
6. **தமிழ்மொழியில் உள்ள 'அம்மா', 'அப்பா' என்கின்ற சொற்கள் பிற பழமையான மொழிகளில் ஒத்த வடிவங்களில் வழங்குகின்றமை.**
7. **எழுவாய் வேற்றுமைக்குத் தனி விகுதியின்மை.**
8. **அடைமொழிகள் பிரிக்கத் தக்கவை : ஆழமுடைமை.**

**9. தமிழ்ச் சொற்களுக்குப் பாலினம் இல்லை.**

**10. தமிழில் ஒழுங்குமுறையற்ற சொற்கள் இல்லை.**

**11. தமிழ்மொழி தோன்றிய காலத்தைக் கண்டறிய இயல்கின்றமை.**

**12. தமிழில் காணப்படும் சொற்கள் இயற்கையான காரண காரியத் தொடர்புடைமை.**

**13. ஒருமை, இருமை, பன்மை என்று வடமொழியில் இருக்க, தமிழில் ஒருமை, பன்மை ஆகிய இரண்டையும் பொருத்தமாகக் கொண்டிருத்தல்.**

**14. தமிழின் தனித்தன்மையும், இயற்கைத் தன்மையும்.**

**15. உயர்ந்த இலக்கியத் தரம் மிகுந்த நூற்கோவைகள்''[56]**

இவ்வாறு தகுதிப்பாடுகள் அனைத்தையும் கொண்டிலங்குவது தமிழே என்று கூறுகின்றார்.

**3. வா.செ.குழந்தைசாமி**

செம்மொழி என்ற தகுதியுடையதாக ஒரு மொழி எந்த அடிப்படையில் கருதப்படுகின்றது என்பதனை, முதலில் தெரிந்து கொள்ள வேண்டும் என்று கூறும் அவர், செவ்வியல் மொழிக்கென இலக்கணம் வகுக்கப்பட்டு, அதற்கான தகுதிகள் பட்டியலிடப்பட்டு, அதன் அடிப்படையில் ஒரு மொழி செம்மொழி என்று அறிவிக்கப்படுவதில்லை என்றும், செவ்வியல் மொழி என்னும் தகுதி அம்மொழியில் இடம் பெற்றிருக்கும் இலக்கியத்தின் தரத்தின் அடிப்படையில் இனம் காணப்படுவது என்று கூறும் வா.செ.குழந்தைசாமி அவர்கள் செம்மொழிக்கான வரையறைகளாக :

1. **"தொன்மை (Antiquicy),**
2. **ஒத்திசைவு (Harmony),**
3. **தெளிவு (Clarity),**
4. **தன்னடக்கம் (Restraint),**
5. **கண்ணியம் (Serenity),**
6. **உயர் இலட்சியம் (Idealism),**
7. **உலகப் பொதுமை (Universality),**
8. **பகுத்தறிவு (Reason),**
9. **ஒழுங்கு (Order),**

**10. கண்ணோட்டம் (Humanism)"[57]**

என பத்து வரையறைகளை எடுத்துக்காட்டுகின்றார்.

## 4. மணவை முஸ்தபா

உலகில் உள்ள சுமார் 6,000 மொழிகளுள் ஏறத்தாழ 3,000 மொழிகளுக்கே இலக்கிய, இலக்கணங்கள் உள்ளன. இவற்றுள்ளும் 2,000 ஆண்டுகளுக்கு முற்பட்ட வரலாற்றுடைய மொழிகளாக யுனெஸ்கோ இனம் கண்டுள்ள மொழிகள் ஆறு மட்டும். அவை தமிழ், சமஸ்கிருதம், சீனம், இலத்தீன், கிரீக், ஹீப்ரு ஆகியன. அவற்றுள் தமிழ் தவிர ஏனைய ஐந்து மொழிகளும் வழக்கொழிந்து அருகிவிட்டன. தமிழ்மொழி மட்டுமே செம்மொழிக்கு உரிய அனைத்துத் தகுதிப்பாடுகளையும் கொண்டு திகழ்கின்றது என்று

1. **"தொன்மை உடைமை (Antiquicy),**
2. **தனித்தன்மை (Individuality),**
3. **அனைவரும் ஏற்றுக்கொள்ளும் பொதுப்பண்பு (Common character),**
4. **நடுவு நிலைமை (Neutrality),**
5. **தாய்மைத் தன்மை (Parentalkingship),**
6. **பண்பாடு, கலை, பட்டறிவு வெளிப்பாடு,**
7. **பிறமொழித் தாக்கமில்லாத் தனித்தன்மை,**
8. **இலக்கிய வளம் (Literary Prowess),**
9. **உயர்சிந்தனை (Noble ideas and ideals),**
10. **கலை, இலக்கியத் தன்மை வெளிப்பாடு, பங்களிப்பு,**
11. **மொழிக் கோட்பாடு (Linguistic principles)"[58]**

என்று 11 வரையறைகளை மணவை முஸ்தபா கூறியுள்ளார்.

## 5. ச.அகத்தியலிங்கம்

1. **"மகோன்னதமான மாண்புமிகு பண்பு (Excellance),**
2. **உலகப் பொதுமை (Universality),**
3. **பொதுச் சார்புநிலை (Objectivity),**
4. **கண்ணியம் (Dignity),**
5. **கட்டுப்பாடு (Moderation),**
6. **கற்பனைத் திறன் (Imagination),**

**7. எளிமை (Simplicity),**

**8. கவிதை அழகு (Poetic beauty),**

**9. பெருந்தன்மை கொண்ட பெருமையான போக்கு (Nobility),**

**10. கருவும் உருவும் ஒன்றி இணைந்து இரண்டறக் கலந்து உள்ளத்தே பசுமரத்தாணி போன்று சென்று உறையும் நிலை (Proportion of structure and the Union of form),**

**12. சமன்நிலை (Balance)''[59]**

என்று செவ்வியல் தகுதிகளை வரையறுக்கின்றார்.

**6. த.சுந்தரராசன்**

**1. "தொன்மையான மொழி,**

**2. தனித்தன்மை,**

**3. பொதுமைப் பண்பு,**

**4. நடுநிலைமை,**

**5. கிளைமொழிகளின் தாய்மொழி,**

**6. பட்டறிவு இலக்கியங்கள்,**

**7. பிறமொழித் தன்மை,**

**8. சமயச் சார்பு,**

**9. உயர்சிந்தனை,**

**10. கலை,**

**11. மொழிக்கோட்பாடு" [60]**

என்று வரையறை செய்கிறார் சுந்தரராசன்.

**7. ஜி.ஜான்சாமுவேல்**

செவ்வியல் தகுதிகளாக **"தொன்மை, தனித்தன்மை, அனைவராலும் ஏற்றுக் கொள்ளும் பொதுமைப் பண்புகள், நடுவு நிலைமை, பல மொழிகளுக்கும் தாயாக அமைந்த தன்மை, நாகரீக மேம்பாடு பெற்ற ஓர் இனத்தின் பண்பாட்டுக் கலை அனுபவ உணர்வுகளின் முழு வெளிப்பாடு, தனித்து இயங்கும் ஆற்றல், இலக்கிய வளம், பண்பட்ட உயர்ந்த சிந்தனைகள், தனித்தன்மை வாய்ந்த உயரிய கலை இலக்கிய**

**வெளிப்பாடுகள், மொழிக் கோட்பாடுகள்”[61]** ஆகியனவாகும் ஜான் சாமுவேல் எடுத்துரைக்கிறார்.

### 8. செ.சாரதாம்பாள்

**“கிரேக்க உரோம இலக்கியத் தொடர்புடைமை, தலைமையுடைமை, மரபுடைமை, தொன்மையுடைமை, பல கூறுகளின் இணைவுடைமை, தற்சார்பின்றியிருத்தல், காரண– காரியத் தொடர்புடைமை, உருவமும் உள்ளடக்கமும் பொருந்தியமைதல், உத்திகள், கற்பனைகள், போலச் செய்தல், பாத்திர அமைப்பு, முன்னோடியாக இருத்தல்”[62]** என்று சாரதாம்பாள் செவ்வியல் தகுதிகளை பட்டியலிட்டு கூறுகின்றார்.

### 9. கா.சிவதம்பி

**“1. தொன்மை,**

**2. தொடர்ச்சி,**

**3. செழுமை”[63]**

என்று வரிசைப்படுத்தி கூறுகின்றார் கா.சிவதம்பி.

## 10. பேராசிரியர் ஜார்ஜ் எல்.ஹார்ட் அவர்கள்

அமெரிக்காவில் உள்ள கலிபோர்னியா பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையின் தலைவராகப் பணியாற்றுபவர். தமிழ், வடமொழி, இந்தி, இலத்தீன், கிரேக்கம், இரஷ்யன், ஜெர்மனி, பிரெஞ்சு முதலான மொழிகளின் இலக்கியத்தை அதன் மூல மொழியிலேயே படித்தறிந்து புலமை பெற்ற அவர், தமிழ்மொழி உலகின் மிக உயர்ந்த செவ்வியல் இலக்கியங்களையும், மரபுச் செல்வங்களையும் பெற்றுத் திகழும் உயர்தனிச் செம்மொழிகளுள் ஒன்று என்பதனை நான் எந்தவிதத் தயக்கமுமின்றிக் கூறுவேன் என்கிறார். செம்மொழி வரையறைகளாக அவர் கூறுமிடத்து

1. **“செவ்வியல் இலக்கியங்களைப் பெற்றிருத்தல்,**
2. **தனக்கே உரித்தான இலக்கண, இலக்கிய மரபினைப் பெற்றிருத்தல்,**
3. **தொன்மை உடைமை,**
4. **சிறப்புமிக்க இலக்கியக் கொள்கைகளைப் பெற்றிருத்தல்,**
5. **போற்றத்தகு இலக்கண மரபுகளைப் பெற்றிருத்தல்,**
6. **தொன்றுதொட்டு வரும் பண்பாட்டு மரபினைப் பெற்றிருத்தல்”[64]**

என்று ஜார்ஜ் எல்.ஹார்ட் அவர்கள் எடுத்துரைக்கிறார்.

இவ்வாறு அறிஞர்கள் பலரும் பலவித வரையறைகளை எடுத்துக் கூறுகின்றனர். தமிழக அரசானது பரிதிமாற்கலைஞர், தேவநேயப் பாவாணர், வா.செ.குழந்தைசாமி, மணவை முஸ்தபா, கா.சிவத்தம்பி, ஜார்ஜ் எல்.ஹார்ட் ஆகியோர் கூறிய வரையறைகளை உட்படுத்திச் செவ்வியல் தகுதிகளாகக் கீழ்க்கண்டவற்றை வரையறுத்துள்ளது.

1. **“தொன்மை,**
2. **தனித்தன்மை,**
3. **பொதுமை,**
4. **நடு நிலைமை,**
5. **பல மொழிகளுக்கும் தாயாம் தன்மை,**
6. **பண்பாட்டு கலை, பட்டறிவு வெளிப்பாடு,**
7. **தனித்தியங்கும் தன்மை,**
8. **இலக்கிய வளம்,**
9. **கலை, இலக்கியத் தன்மை வெளிப்பாடு,**
10. **உயர்சிந்தனை,**
11. **மொழிக் கோட்பாடு”**[65]

என்பனவாகும்.

இவ்வாறு ஒரு மொழி செம்மொழி என்னும் உயரிய இடத்தைப் பெறுவதற்கு கொண்டிருக்க வேண்டிய அனைத்துக் கூறுகளையும் தமிழ்மொழி பெற்றுள்ளது என்பதை அறிஞர்களின் கூற்றுக்கள் வாயிலாக அறிந்து கொள்ள முடிகிறது.

# தொகுப்புரை

★ தமிழின் தகுதிப்பாங்கும் செம்மொழி வரையறையும் எனும் இவ்வியலில், செவ்வியல் என்பதன் சொல் விளக்கமும் அகராதி விளக்கமும் அறிஞர்களின் கருத்துகளும் செவ்வியலின் பண்புகளும் தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன.

★ உயர்தனிச் செம்மொழியின் தோற்றம், வளர்ச்சி நிலை குறித்தும் இன்றைய கால கட்டத்தின் மேம்பாடு நிலை பற்றியும் ஆராயப்பட்டுள்ளது.

★ கி.பி.இரண்டாம் நூற்றாண்டில் செவ்வியல் கருத்துரு தோன்றியது கிரேக்கம், இலத்தீன், அரபு, ஹீப்ரு, பாரசீகம், சமஸ்கிருதம், தமிழ் ஆகிய எட்டு மொழிகள் செவ்வியல் மொழிகளாக ஏற்கப்பட்டிருக்கின்றன. கிளாசிக்கல் என்ற இலத்தீன் சொல்லிலிருந்து கிளாசிக்கல் எனும் பிரெஞ்சுச் சொல் உருவானது. இதனை ஆங்கிலம் கடன் பெற்றது என்பது இவ்வியல் வழி தெளிவாகிறது.

★ பிற செவ்வியல் மொழி இலக்கியங்களின் வரலாற்றினைப் பழங்காலம், செவ்வியல் காலம், பிற்காலம் எனப் பகுக்கலாம். தமிழ் இலக்கிய வரலாற்றின் துவக்கமே செவ்வியல் காலமாகத் திகழ்ந்திருக்கிறது என்பதை அறிய முடிகின்றது.

★ சங்க காலம் முதல் இன்றைய கால மறுமலர்ச்சி இலக்கியங்கள் வரை உயிரோட்டமாய் விளங்குவது தமிழ் மொழியே என்பதை செம்மொழித் தகுதிகளுடன் சான்றுகளுடன் முழுமையாக இவ்வியல் விளக்கி உணர்த்துகிறது.

# அடிக்குறிப்புகள்

1. லோகநாத முதலியார், திவாகர நிகண்டு, ப.2.
2. ச.ஈஸ்வரன், இலக்கிய வரலாறு, ப.14
3. சாமிநாத பைரவர்கள், சிலம்பு, ப.20
4. மு.வ.மொழிநூல், ப.27
5. வின்சுலோவின் ஆங்கிலத் தமிழ் அகராதி, ப.194
6. சாரதாம்பாள், சங்கச் செவ்வியல், பக்.29, 30
7. பொன்முகிலன், செம்மொழித் தமிழின் செவ்வியல் தன்மைகள், ப.14
8. மணவை முஸ்தபா, செம்மொழி உள்ளும் புறமும், ப.6
9. தொல்காப்பியம் சொல்லதிகாரம் நூற்.392
10. மேலது, ப.394.
11. உலகத் தமிழ் செம்மொழி மாநாட்டு சிறப்பு மலர், ப.33
12. http://tamil.dinamalar.com
13. சா.வே.சுப்பிரமணியன், அகம். பா.349
14. உலகத் தமிழ் செம்மொழி மாநாட்டு சிறப்பு மலர், ப.33
15. பாலுசாமி வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–9, ப.377
16. சா.வே.சுப்பிரமணியன், குறுந்தொகை, பா.18
17. திருவள்ளுவர் (பரிமேலழகர்) திருக்குறள் எண்.1289
18. மலையமான், செவ்வியல் மொழி தமிழ், ப.84
19. வின்சுலோவின், ஆங்கிலத் தமிழ் அகராதி, ப.194
20. மலையமான், செவ்வியல் மொழி தமிழ், ப.86
21. மேலது, ப.85

22. செ.சாரதாம்பாள், சங்கச் செவ்வியல், ப.47

23. ஜி.ஜான் சாமுவேல், செம்மொழிகளின் வரிசையில் தமிழ், ப.7

24. மலையமான், செவ்வியல் மொழி தமிழ், ப.86

25. செ.சாரதாம்பாள், சங்கச் செவ்வியல், ப.57

26. மேலது, ப.58

27. மலையமான், செவ்வியல் மொழி தமிழ், ப.86

28. செ.சாரதாம்பாள், சங்கச் செவ்வியல், ப.52

29. வா.செ.குழந்தைசாமி, உலகச் செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ், ப.37

30 பரிதிமாற்கலைஞர், தமிழ் மொழியின் வரலாறு, ப.71

31. ச.அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, ப.31

32. சிவஞான சுவாமிகள், தொல்காப்பிய சூத்திர விருத்தி, ப.6.

33. கா.கோவிந்தன், டாக்டர்.கால்டுவெல்லின் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம், ப.57.

34. பரிதிமாற்கலைஞர், தமிழ்மொழியின் வரலாறு, ப.95.

35. http://tamil.dinamalar.com

36. மேலது,

37. மேலது,

38. மேலது,

39. செ.சாரதாம்பாள், சங்கச் செவ்வியல், ப.57.

40. அ.சண்முகதாஸ், செவ்வியல் தமிழ் வரலாறும் பண்புகளும், பக்.17, 18

41. ச.அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, ப.38

42. அ.சண்முகதாஸ், செவ்வியல் தமிழ் வரலாறும் பண்புகளும், ப.36

43. மேலது, ப.37, 38

44. ச.அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, ப.38

45. மேலது, ப.32.

46. மேலது, ப.35

47. மேலது, ப.35

48. மேலது, ப.37

49. மேலது, ப.37.

50. அ.சண்முகதாஸ், செவ்வியல் தமிழ் வரலாறும் பண்புகளும், பக்.43, 44.

51. பெ.வே.சோமசுந்தரனார், புறப்பொருள் வெண்பாமாலை, ப.14

52. வா.செ.குழந்தைசாமி, உலகச் செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ், ப.73

53. அருளி, நம் செம்மொழி, பக்.74, 75

54. பரிதிமாற்கலைஞர், தமிழ் மொழியின் வரலாறு, ப.95

55. தேவநேயப் பாவாணர், வேர்ச்சொற் கட்டுரைகள், ப.xxxvii

56. மேலது, ப.22

57. வா.செ.குழந்தைசாமி, உலகச் செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ், ப. 38

58. மணவை முஸ்தபா, செம்மொழி–உள்ளும் புறமும், ப.23

59. ச.அகத்தியலிங்கம், சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே, ப.20

60. த.சுந்தரராசன், தமிழ் செம்மொழியே, பக்.113, 114

61. ஜி.ஜான் சாமுவேல், செம்மொழிகளின் வரிசையில் தமிழ், ப.17

62. செ.சாரதாம்பாள், சங்கச் செவ்வியல், ப.47

63. பாக்கியமேரி, செம்மொழிப் பண்புகள், ப.84

64. தேவநேயப் பாவாணர், வேர்ச்சொற் கட்டுரைகள், பக்.84, 85

65. மேலது, ப.85

*****

# இயல் – இரண்டு

## சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் பொருளமைவு

தமிழக வரலாற்றின் பொற்காலமாகவும் பிற்காலங்களுக்கெல்லாம் ஈடு இணையற்ற காலமாகவும் மதிக்கப்படுவது சங்க காலமாகும். இச்சிறப்புகளுக்குக் காரணமே அக்கால மக்களின் வாழ்க்கைச் சிறப்புகளும் வாழ்க்கை முறைகளும் ஆகும். அவர்கள் உணர்ந்து, நமக்கு விட்டுச் சென்ற பண்பாடு, கலாச்சாரம், விருந்தோம்பல் பண்பு, அவர்களுடைய சிறந்த வாணிபத் திறன், வானவியல் சாஸ்திரங்கள், அறிவியல் சார்ந்த நிகழ்வுகள் ஆகிய அனைத்தையும் அனைவரும் புரிந்துகொள்ளும் முறையில் தமிழில் சங்க இலக்கியங்கள் நமக்குத் தொகுத்து வழங்கியுள்ளன.

புகழ்பெற்ற தமிழ் இலக்கியங்களில் உள்ள கருத்துகள், வகைகள், அவ்வகையில் கூறப்பட்டுள்ள கோட்பாடுகள், தத்துவங்கள், ஆட்சிமுறைகள், புறச்செய்திகளாகிய அரசர்களின் போர்முறை, ஆட்சியின் பெருமை, வீரம், கொடை, புகழ் போன்ற செய்திகளையும் சிறப்பித்து தெளிவிப்பது சங்க இலக்கியங்களே.

புற இலக்கியங்களில் அமையப் பெற்றுள்ள மொழியின் செம்மைத் தன்மையும், அத்தன்மைகளுக்கு ஏதுவாக இருக்கக்கூடிய இலக்கியங்களையும் ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும். செம்மொழியான தமிழ் மொழியின் தன்மை, மற்ற மொழிகளில் இல்லாத தனித்தன்மை, அனைத்து சமயத்தாரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய பண்புகள், நடுநிலை மாறாத சிறப்பு, பிற மொழிகளுக்கு எல்லாம் தாயாக விளங்கும் தன்மை, பிறமொழியாளர்களும் விரும்பி கற்கும் திறம், பிறமொழி கலப்பு இல்லாமல் தனித்து இயங்கும் தன்மை, இலக்கிய வளங்கள் போன்ற செவ்வியல் பொருள் அமைவுகளைத் திறம்படவும் எளிமையாகவும் ஆய்வு செய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### புறம் – சொல் விளக்கம்

புறம் என்ற சொல் தமிழ் இலக்கண நூலாகிய தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியமான எட்டுத்தொகை, பத்துப்பாட்டிலும் பயின்று வந்துள்ளது. புறம் என்ற சொல். வெளியிடம், பக்கம், அந்நியம், முதுகு, காலம் ஆகிய வெவ்வேறு பொருளைக் குறிக்கின்றது. புறப்பொருள் புறத்திணை என வழங்குமிடங்களில் அகப்பொருள்,

அகத்திணை என்பவற்றிற்கு மறுதலையாகின்றவற்றைக் குறிக்கப் ‘புறம்’ என்னும் இச்சொல் பயன்படுகின்றது.

இளம்பூரணர் ‘அகம்’ என்பதனை உரிப்பொருளுள் முதற்கூறாக எண்ணி அகத்திணைகளின் மாட்டேறாக வருவன புறம் எனக் கூறுகிறார். அகப்பொருள் என்பதற்குப் ‘போக நுகர்ச்சி’ என்றும் புறப்பொருள் என்பதற்கு **“மறஞ்செய்தலும், அறஞ் செய்தலும் என்றும்”**[1] அவர் பொருள் கூறுவர். நச்சினார்க்கினியர் அகத்திற்குரிய விளக்கம் கூறி, இதனை ஒழிந்தன புறம் எனக் கூறுகின்றார். இவ்விரு உரையாசிரியர்களின் விளக்கங்களிலிருந்தும் தெரிய வருவதாவது தத்தமக்குப் புலனாவதும், பிறர்க்குக் கூறப்படாததும் அகமாகும் என்பதும், பிறருக்குப் புலனாவதும், பிறர்க்குக் கூறப்படுவதும் புறம் என்பதும் ஆகும். தமிழிலுள்ள பொருள் இலக்கணம் அகம் என்றும் புறம் என்றும் இரு பிரிவுகளை உடையது. அகப்பொருள் தலைவன் தலைவியரின் அன்பை சிறப்பிக்கிறது. புறப்பொருள் என்பது புறம் சார்ந்த செய்திகளாகிய வீரம், புகழ், கொடை, பரிசு, ஆட்சி, விருந்தோம்பல், ஈகை, நட்பு போன்றவற்றை உணர்த்துகிறது.

**“அக ஒழுக்கமும் புற ஒழுக்கமும் ஐவகை மக்களிடையே நிகழுமாதலின் அவற்றால் ஐந்து வகையாகவும், இவைகளினிடையே நிகழும் ஒழுக்கங்கள் அகம், புறம் என இரண்டு வகையாகவும் கொண்டு அகத்திணை யேழெனவும், புறத்திணை யேழெனவும் பொருளிலக்கணத்தைத் தொல்காப்பியர் பிரிப்பர்”**[2].

தொல்காப்பியர் புறப்பொருளை ஏழு திணைகளாகப் பிரித்துள்ளார். அவை

1. வெட்சி,
2. உழிஞை,
3. வஞ்சி,
4. தும்பை,
5. வாகை,
6. காஞ்சி,
7. பாடாண் எனும் ஏழு திணைகள் ஆகும்.

**"அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்**

**புறத்திணை இலக்கணம் திறம்படக் கிளப்பின்**

**வெட்சிதானே குறிஞ்சியது புறனே**

**உட்குவரத் தோன்றும் ஈர் ஏழ் துறைத்தே"[3]**

சங்க காலத்தில் இவ்வேழு திணைகளே முறைமைகளாக வகுக்கப்பட்டு இவ்வரையறைகளுக்கு உட்பட்டு போரும் போர் திறங்களும் நிகழ்த்தப்பட்டது என்பர். பின்னர் தோன்றிய பன்னிரு படலமும் புறப்பொருள் வெண்பா மாலையும் புறத்திணைப் பன்னிரண்டு எனக் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

1. வெட்சி,
2. கரந்தை,
3. வஞ்சி,
4. காஞ்சி,
5. நொச்சி,
6. உழிஞை,
7. தும்பை,
8. வாகை,
9. பாடாண்,
10. பொதுவியல்,
11. கைக்கிளை,
12. பெருந்திணை

பன்னிரு படலமும் புறப்பொருள் வெண்பாமாலையும் தொல்காப்பியர் கூறிய ஏழு திணைகளுக்கு மேலாக ஐந்து திணைகளை மிகுதிப்படுத்தி உள்ளனர். உலகில் தாம் எடுத்துக் கொண்ட செயல்களை இனிது நிறைவேற்றுவதற்கு திட்டங்களும் தீர்வுகளும் தீட்டிச் செயல்படுவதே இனிதாக முடியும். அதுபோல சங்ககாலப் போர்முறைகளும் போருக்கு உரிய செயல்களை இனிதே நிறைவேற்ற வரைமுறைகளையும் கோட்பாடுகளையும் மிகுதிப்படுத்தினர். அதன் காரணத்தாலேயே தொல்காப்பியர் கூறிய ஏழு திணைகள் மட்டும் அல்லாது பிற்கால இலக்கண ஆசிரியர்கள் ஐந்து திணைகளைக் கூட்டிப் புறத்திணைகள் பன்னிரெண்டு என வரைமுறைப்படுத்தினர்.

## புறத்திணை நோக்கம்

சங்க இலக்கியங்களில் அகத்திணை இலக்கியங்கள் சிறப்புப் பெறுகின்றன. அகத்திணை இலக்கியங்கள் தோன்றுவதற்கும் மனித வாழ்க்கைக்கும் புற நிகழ்வுகளே காரணமாக அமைகின்றன.

வாழ்வெனும் நாணயத்தின் இருபக்கங்களே அகமும் புறமும் ஆகும். இவ்விரண்டும் இன்றியமையாதனவே ஆகும். இரண்டில் உயர்வு தாழ்வு இல்லை. அகப்பாடல்கள் எண்ணிக்கையில் மிகுந்துள்ளன என்பது உண்மையே. ஆயின் அவ்வகைப் பாடல்களில் இடம் பிடித்துக் கொண்ட புறப்பொருட் செய்திகள் பற்பல உண்டென்பதை எண்ணுதல் வேண்டும். புறத்திணைப் பனுவல்கள் பண்டைத் தமிழகத்தின் அரசியல் நெறியையும் சமுதாய அமைப்பையும் மக்கட்பண்பையும் எடுத்துரைக்கும் வரலாற்றுக் கருவூலம் ஆகும்.

அறிவியல், கலையியல், உளவியல், நிலவியல், ஆட்சியியல், குடியியல் எனப் பன்னெறித்தான துரையறிவுகளை வழங்கும் அக்கருவூலம் அகம் போல உயர்ந்ததே. கற்பனைக்கும் சுவைக்கும் வரலாறனைய புறப்பாடல்கள், கதையனைய அகப்பாடல்கள் போல இடந்தராமற் போகலாம். தன்மை நவிற்சியொடு நிகழ்ந்ததை இலக்கியப்படுத்தி அதற்கு நிலை பேறளித்த புறத்திணைப் புலவர்கள் அறிவாற்றலிற் குறைந்தவரிலர். இவருள் பலர் அகமும் பாடினோர், அகத்திற் பொய்மை கலந்து விடுகிறது. அக்கலப்பாற் சுவையும் பிறக்கிறது. புறத்தின் இச்சுவையை உணர்ச்சிகள் படைத்தளிக்கிறது. வீரம், அன்பு, இரக்கம் ஆகிய உணர்ச்சிகள் கற்போரைத் துடிக்கவும் துள்ளவும் வைக்கின்றன.

வாழ்வின் செம்மைக்கு அகமும் புறமும் செம்மையாய் அமைய வேண்டுமென்பது பண்டைத் தமிழரின் குறிக்கோளாக இருந்துள்ளது. ஆகவே அகம் போலவே புறத்தையும் போற்றிப் பாடியுள்ளனர். **''நாட்டின் குறிப்புகளைத் திரட்டித் தொகுத்தற்கு புறநூல்கள் காரணமாக அமைந்துள்ளன. ஒரு நாட்டின் மக்களினத்தின் வரலாறு, பண்பாடு, பொருளியல், தொழிலியல் ஆகியன எல்லாம் புறப்பொருளாலேயே விளக்கப்படும்''**[4] என்று புறத்திணை நோக்கத்திணை பாலசுப்பிரமணியன் அவர்கள் சங்க இலக்கியத்தில் புறப்பொருள் எனும் நூலில் எடுத்தியம்புகின்றார்.

## புறப்பொருளின் முதன்மை (தொடக்கம்)

தொடக்க காலத்தில் மனிதன் தோன்றிய நாள் முதலே தனக்கு தேவையான உணவினைப் பெறவும் தன்னைப் பிறரிடம் இருந்து காத்துக் கொள்ளவும் சமுதாயத்தோடு போராட வேண்டியிருந்தது. முதலில் தனித்தனியாக இருந்த மனிதர்கள் பின் குழுக்களாக மாறினர். அக்குழுவிற்கு வலிமையும் பகைவரிடம் போராடித் தன் இனத்தைக் காக்கின்ற பண்பையும் உடைய தலைவனைத் தேர்ந்தெடுத்தனர். மகள் மறுத்தல் (பெண் தர மறுத்தல்) காரணமாகவும் வீரத்தை நிலைநாட்டுதல் பொருட்டும் போர் செய்ய ஆரம்பித்தனர்.

**“தொடக்க கால மனிதன் உணவு தேடுவதிலும் தன்னைக் காத்துக் கொள்வதிலும் இப்போர்ப் பண்பைத் துணையாகக் கொண்டிருக்கிறான். பின் கூட்டமாய் வாழக் கற்றுக் கொண்ட நிலையில் தமக்கு வேண்டிய பொருள்கள் தம்மிடம் இல்லா நிலையில், அப்பொருளுடைய குழுவைக் கருவி கொண்டு தாக்க முனைந்தமையே போரின் தொடக்கமாயிற்று”**[5] என்று பாலசுப்பிரமணியன் அவர்களும் குறிப்பிட்டுள்ளார்.

வீரம் என்பது ஒரு ஆண்மகனின் அடையாளமாகக் கருதப்பட்டதால் அக்கால மக்கள் அதனை ஒரு கலையாகவே வளர்த்து வந்தனர். ஒருநாடு தன்னாட்சி பெற்று விளங்க வேண்டுமாயின் அந்நாட்டு மக்கள் பலர் மறவராயிருத்தல் வேண்டும். அங்ஙனம் இருப்பதற்கு அவருக்குப் போர்ப் பயிற்சி இன்றியமையாதது. ஆதலின் பண்டைத் தமிழர் அதனை ஒரு கலையாகவே வளர்த்தனர் எனலாம்.

## எட்டுத்தொகை நூல்கள்

சங்க இலக்கியம் என்பது எட்டுத் தொகையும் பத்துப்பாட்டும் ஆகும். எட்டுத் தொகையில் இடம் பெறும் அனைத்தும் பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு சூழல்களில் பல்வேறு புலவர்களால் பாடப்பட்டு பலரால் தொகுத்து அமைக்கப்பட்டதால் இதைத் ‘தொகைநூல்’ என்பர்.

**“நற்றிணை நல்லகுறுந்தொகை ஐங்குறுநூறு**
**ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்**
**கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம் புறம் என்று**
**இத்திறத்த எட்டுத் தொகை”**[6]

இவ்வாறு சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களை வகைப்படுத்துவர். அவ்வகைகளுள் எட்டுத்தொகை நூல்களை மூன்று வகையாகப் பிரிப்பர்.

**எட்டுத்தொகை நூல்கள்**

| **அகம் சார்ந்தவை** | **புறம் சார்ந்தவை** | **அகமும் புறமும் சார்ந்தது** |
|---|---|---|
| நற்றிணை | புறநானூறு | பரிபாடல் |
| குறுந்தொகை | பதிற்றுப்பத்து | |
| ஐங்குறுநூறு | | |
| கலித்தொகை | | |
| அகநானூறு | | |

இவ்வாறு அகம் சார்ந்த நூல்களாகவும் புறம் சார்ந்த நூல்களாகவும் அகம்–புறம் சார்ந்த நூலாகவும் ஆன தொகுப்பே எட்டுத்தொகை நூல்கள் ஆகும்.

## பத்துப்பாட்டு

மேற்கணக்கு நூல்கள் என்பது எட்டுத் தொகையும் பத்துப்பாட்டுமே ஆகும். சங்க கால மக்களின் வாழ்க்கை முறைகளையும் பண்பாடுகளையும் கலாச்சாரங்களையும் அறிந்து கொள்வதற்கு எட்டுத் தொகையும் பத்துப்பாட்டுமே தமிழர்களுக்குக் கிடைத்த புதையல் ஆகும்.

**“முருகுபொருநாறு பாண் இரண்டு முல்லை**
**பெருகு வளமதுரைக் காஞ்சி – மருவினிய**
**கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்**
**பாலை கடாத்தொடும் பத்து”[7]**

இவ்வாறு பத்துப்பாட்டை வகைப்படுத்துவர். அவ்வகைகளுள் பத்துப்பாட்டை மூன்று வகைகளாகப் பிரிப்பர்.

**பத்துப்பாட்டு நூல்கள்**

| **அகம் சார்ந்தவை** | **புறம் சார்ந்தவை** | **அகமும் புறமும் சார்ந்தது** |
|---|---|---|
| 1. முல்லைப்பாட்டு, | 1. திருமுருகாற்றுப்படை | 1. நெடுநல்வாடை |
| 2. குறிஞ்சிப் பாட்டு, | 2. பொருநராற்றுப்படை | |
| 3. பட்டினப்பாலை | 3. சிறுபாணாற்றுப்படை | |
| | 4. பெரும்பாணாற்றுப் படை | |
| | 5. மலைபடுகடாம் | |
| | 6. மதுரைக்காஞ்சி | |

இவ்வாறு பத்துப்பாட்டு நூல்கள் அகம் சார்ந்த நூல்களாகவும் புறம் சார்ந்த நூல்களாகவும் அகம்–புறம் சார்ந்த நூலாகவும் இருக்கின்றன. எட்டுத்தொகை மற்றும் பத்துப்பாட்டில் இடம் பெற்றுள்ள புறநூல்களில் செவ்வியல் கூறுகளாக வரையறை செய்யப்பட்டுள்ள தொன்மை முதலாக மொழிக் கோட்பாடு ஈறாக சொல்லப்பட்டுள்ள பதினோறு கூறுகளும் உள்ளடங்கியுள்ளன என்பதற்கான சான்றாதாரங்கள் நிரம்பி உள்ளன.

## புற இலக்கியங்களில் செவ்வியல் பொருளமைவு

எட்டுத்தொகையில் புறநூல்களாகக் கருதப்படுவன புறநானூறு, பதிற்றுப்பத்து மற்றும் பத்துப்பாட்டில் இடம்பெற்றுள்ள திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப் படை, மலைபடுகடாம், மதுரைக்காஞ்சி ஆகியனவாகும். செவ்வியல் பொருளமைவுகளாவன,

1. தொன்மை,
2. தனித்தன்மை,
3. பொதுமை,
4. நடுநிலைமை,
5. பல மொழிகளுக்கு தாயாம் தன்மை,
6. பண்பாடு கலை, பட்டறிவு வெளிப்பாடு,

7. தனித்தியங்கும் தன்மை,
8. இலக்கிய வளம்,
9. கலை இலக்கியத் தன்மை வெளிப்பாடு,
10. உயர் சிந்தனை,
11. மொழிக் கோட்பாடு என்பனவாகும்.

## தொன்மை

மனித இனத்தை அடையாளப்படுத்துவதும் கலை, கலாச்சாரம், நாகரிகம், பண்பாடு உள்ளிட்ட வாழ்வியல் முறைகளுக்கு அடிப்படையாக விளங்குவதும் மொழியே. மனிதனும் மொழியும் ஒன்றிலிருந்து ஒன்றாகப் பிரித்துப் பார்க்க முடியாத தொடர்புடையன. இந்த அடிப்படையில் மனித இனமும் மொழியும் ஒரே தொன்மையுடையதாகக் காணப்படுகின்றன. ஆதி மனிதன் சைகை மொழியைப் பல நூற்றாண்டுகள் பயன்படுத்தி வந்த பிறகே எழுத்து என்ற ஒன்று வடிவமைக்கப்பட்டிருக்கும் என்பதை யூகத்தின் அடிப்படையில் கணிக்க முடிகின்றதேயன்றி ஆதாரப்பூர்வமாகத் தீர்மானப்பதற்குப் போதுமான சான்றுகள் அகப்படவில்லை. எனினும் கி.மு.200 முதல் கி.பி.200 வரையிலான சங்க இலக்கியப் பாடல்களிலும் பிற இலக்கண, இலக்கிய நூல்களிலும் உள்ள தரவுகளின் மூலம் தமிழின் தொன்மையை அறிய முடிகின்றது.

தமிழ் என்ற சொல், தமிழின் முதல் நூலாகிய தொல்காப்பியத்தில் இடம் பெற்றுள்ளது. **"தமிழ் என் கிளவியும் அதனோரற்றே"**[8] எனும் நூற்பாவின் வழி இதனை அறிய முடிகிறது. மொழி என்ற சொல்லும் தொல்காப்பியத்தில் 135 இடங்களில் பயன்பெறுகின்றது. மொழி என்ற சொல், சொல் என்ற பொருளில் மிகுதியாக ஆளப் பெற்றுள்ளது. மொழி மரபு என்ற இயலும் தொல்காப்பியத்தில் உண்டு.

தமிழ் என்ற சொல்லில் த்—வல்லினம், ம்—மெல்லினம், ழ்—இடையினம் மூன்று இனங்களும் உள்ளன. அதோடு 'ழ்' என்பது தமிழுக்கே உரிய சிறப்பு எழுத்தாகிறது.

தமிழ் என்ற சொல்தான், தமிள, த்ரமிள, த்ரமிடா, த்ரபிடா, திரவிடா எனப் பிற மொழியாளர்களால் அழைக்கப் பெற்றது என்பது மொழியியலாளர்களின் கருத்து. திருஞானசம்பந்தர், சங்கரரால் 'திராவிடச் சிசு' என்று அழைக்கப் பெற்றார். தமிழ்ச் சிசு என்பதைத்தான், திராவிடச் சிசு எனக் குறிக்கிறார்.

**“பழங்காலத்தில் சமஸ்கிருதத்திலிருந்துதான் தமிழ்மொழி பல சொற்களைக் கடன் வாங்கியது என்ற எண்ணம் இருந்தது. பரோவும் எமனோவும் திராவிட மொழிகள் பற்றி ஆராய்ச்சி செய்து திராவிட மொழி அகராதி என்ற நூலை எழுதிய பின்பு அவ்வெண்ணம் மாற்றமடைந்தது. இருவரும் இணைந்து திராவிட மொழிகளின் அடிச்சொல் அல்லது வேர்ச்சொல் அகராதி உருவாக்கிய பின்பு திராவிட மொழிகளின் பெருமையையும் அதில் தமிழின் சிறப்பினையும் உலக மொழியில் அறிஞர்கள் உணரத் தொடங்கினர்.”[9]**

## தமிழகத்தின் எல்லைகள்

தொல்காப்பியத்திற்குப் பாயிரம் எழுதிய பனம்பாரனார் ‘‘வடவேங்கடம் தென்குமரியாயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்’’ என்று தமிழகத்தின் எல்லையைக் கூறியுள்ளார். **13–**ஆம் நூற்றாண்டில் நன்னூலை எழுதிய பவணந்தி முனிவர் ‘குணகடல், குடகடல், குமரி, வேங்கடம் எனும் நான்கு எல்லையுள் இருந்தமிழ்க் கடலுள்’ என்று தமிழ் நாட்டின் எல்லையைக் கூறியுள்ளார்.

முதல் தலைமுறை நாகரிகமான சிந்துச் சமவெளி நாகரிகத்திற்கும் முன்னோடியானதும் ஒரே பண்பாட்டுப் பின்னல்களையுடைய தமிழர் நாகரிகமான சங்ககால நாகரிகம் பற்றிய கூறுகளைப் புறநானூற்றில் பல புலவர்கள் பாடியிருப்பதை அறிய முடிகின்றது. இவற்றின்மூலம் விளக்கப்படும் பண்பாட்டு நாகரிகங்கள் கடல் கோள்களினால் அழிந்துள்ளன. கடல்கோள்களைப் பற்றி,

**‘‘மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வெளவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார் நாடி டம்படப்
புலியொடு வில்நீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினால் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்’’[10]**

**‘‘வடிவே லெறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்திசை யாண்ட தென்னவன் வாழி’’[11]**

என்பதன் வழி அறிய முடிகின்றது. மேற்கூறப்பெற்ற பாடல்கள் குமரிக் கண்டம் கடலால் அழிக்கப் பெற்றதையும் அப்பெருநிலப்பகுதி மாற்றம் அடைந்ததையும் பற்றிக் கூறுகின்றன.

சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் குமரி மலைக்கும் பஃறுளியாற்றுக்கும் இடையே 700 காதத் தூரம் இருந்தது என்றும் இந்தப் பெருநிலப் பரப்பில் ஏழ்தெங்நாடு, ஏழ்மதுரை நாடு, ஏழ்முன்பாலை நாடு, ஏழ்பின் பாலை நாடு, ஏழ்குன்ற நாடு, ஏழ்குணகாரை நாடு, ஏழ்குறும்பனை நாடு என 49 நாடுகள் கடலில் அமிழ்ந்தன என்றும் கூறுவர். இவ்விலக்கியச் சான்றுகள் குமரிக்கண்டம் அல்லது இலெமூரியா கண்டம் என்ற ஒன்று இருந்து அதன் பெரும்பகுதி இரண்டு கடற்கோள்களால் அழிந்து போயின என்னும் வரலாற்றுச் செய்தியை வழங்குகின்றன.

## தமிழ்ச்சங்கம்

தமிழ்நாட்டில் சங்கம் இருந்தமைக்காகக் கிடைத்துள்ள ஆதாரங்கள், தமிழின் பழமையை உணர்த்துகின்றன. புறநானூற்றில் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டின் நெடுஞ்செழியன்,

**“ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**
**மாங்குடி மருதன் தலைவனாக**
**உலகமொடு நிலைஇய பலர் புகழ் சிறப்பின்**
**புலவர் பாடாது வரைகஎன் நிலவரை”**[12]

என்று கூறிய வஞ்சின மொழியில் மாங்குடி மருதன் தலைமையில் புலவர் கூட்டம் ஒன்றிருந்தது புலனாகின்றது. சிறுபாணாற்றுப் படை,

**“தமிழ்நிலை பெற்ற தாங்கரும் மரபின்**
**மகிழ்நனை மறுகின் மதுரை – என்றும்**
**தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே”**[13]

என்று சங்கம் பற்றிக் கூறுகின்றது. கி.பி.ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாவுக்கரசர்,

**“நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி**
**நற்கனகக்கிழி தருமிக்கு அருளினோன் காண்”**[14]

(திருப்புத்தூர்த் திருத்தாண்டகம்) என்னும் குறிப்பினாலும் கி.பி.எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த மாணிக்கவாசகர் தம் திருக்கோவையாரில்,

**“உயர்மதிற் கூடலில் ஆய்ந்த ஒண்தீந்தமிழ்”[15]**

என்னும் சான்றினாலும், இறையனார் அகப்பொருள் உரை தரும் வரலாற்றுக் குறிப்புகளினாலும் பண்டைய தமிழகத்தில் மூன்று சங்கங்கள் இருந்தமையை அறிய முடிகின்றது. முதற்சங்கம் தென் மதுரையிலும் முதல் சங்கத்திற்குப் பிறகு இரண்டாம் தமிழ்ச் சங்கம் கபாடபுரத்திலும் இயங்கி வந்துள்ளன. அதன்பிறகு மூன்றாம் தமிழ்ச் சங்கம் மதுரையில் நடந்துள்ளது. தென் மதுரையும் கபாடபுரமும் கடற்கோளினால் அழிந்த பிறகு பாண்டிய நாட்டு மதுரையில் மூன்றாம் தமிழ்ச் சங்கத்தில் சங்க நூல்களான பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும் எழுதப்பட்டுள்ளன. எட்டுத்தொகை, பத்துப்பாட்டில் இடம் பெற்றுள்ள புற நூல்களில் பண்டைய மக்களின் வாழ்க்கை முறைகளையும் சேர, சோழ, பாண்டியர் என்னும் மூவேந்தர்களைப் பற்றிய வரலாறுகளையும் மன்னர்கள் நிகழ்த்திய போர்களையும் தமிழின் தொன்மையினையும் சிறப்புக்களையும் புலவர்களின் நிலைப்பாடுகளையும் அறிய முடிகின்றது.

## வரிவடிவம்

உலகில் வரிவடிவம் பெறாத மொழிகள் பல உள்ளன. ஒரு மொழி வரிவடிவம் பெறுவதற்குப் பல நூற்றாண்டுகள் ஆகின்றன. அதை தொல்காப்பியம்,

**“உட்பெறு புள்ளி உருவா கும்மே”[16]**

**“மெய்யின் இயற்கை புள்ளியொடு நிலையல்”[17]**

**“எகரஒகரத்து இயற்கையும் அற்றே”[18]**

எனும் மூன்று நூற்பாக்களும் வரிவடிவம் பற்றி கூறுகின்றன. தொல்காப்பியர் காலத்து எ, ஒ என்னும் எழுத்துக்கள் புள்ளி இருந்தால் குறில் எனவும் வழங்கப்பட்டன. எ, ஒ புள்ளி இல்லை எனில் நெடில் எனவும் வழங்கப்பட்டன. எ, ஒ எழுத்துக்களின் வடிவடிவம் காலந்தோறும் மாற்றமடைந்து வந்ததை இவை உணர்த்துகின்றன. கல்வெட்டுக்கள் தோன்றிய பின்பே ஓரளவு வடிவ மாற்றம் குறைந்தது எனலாம். அச்சு வடிவம் வந்தபின்பு வடிவ வேறுபாடுகள் மிகக் குறைந்து காணப்பட்டன என்பதை சுவாமிநாத தேசிகர் தமது இலக்கணக் கொத்து எனும் நூலில்,

**“ஐந்துஎழுத் தால்ஒரு பாடையும் ஆம்என்று**
**அறையவும் நாணுவர் அறிவுடை யோரே”[19]**

என்று கூறியுள்ளார்.

**“வடமொழியில் இல்லாத தமிழில் மட்டுமே உள்ள ஐந்து எழுத்துக்கள் எ, ஒ, ற, ன, ழ என்பன. இதனால் சமஸ்கிருத மொழி எழுத்துக்களைக் காட்டிலும் தமிழுக்கு அதிக வரிவடிவங்கள் உள்ளன என்பதே சமஸ்கிருதத்திற்கு முன்பு தமிழ் தோன்றியது என்பதற்கான சான்றுகளுள் வலுவான சான்றாகின்றது.”**[20] என்பர்.

## ஒலி வடிவம் வரி வடிவம்

**“இந்திய மொழிகளில் நான்கு க, நான்கு ப, நான்கு த, நான்கு ட வரிசை எழுத்துகள் அமைந்திருப்பதைப் போன்று திராவிட மொழிகளாகிய தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளும் சமஸ்கிருதச் செல்வாக்கால் வர்க்க எழுத்துக்களைக் கொண்டுள்ளன. ஆனால் தமிழ் மட்டும் அன்று முதல் இன்று வரை பிற மொழித் தாக்கங்களுக்கு அசையாமல் வர்க்க எழுத்துக்கள் இன்றி, ஒரு க, ஒரு த, ஒரு ப, ஒரு ட வுடன் உள்ளது. இந்த ஒரு வரிவடிவம் நான்கு நிலைகளிலும் சூழ்நிலைக்குத் தக ஒலிக்கப் பெறுகிறது. அது தமிழின் பெருமை”**[21] ஆகும்.

ஒலி எழுத்து, வரி எழுத்து இரண்டிலும் ஒற்றுமையுடையது தமிழ். ஆங்கிலம் போன்ற பிற மொழிகளில் அவ்வாறில்லை. ஒலி, வரி வடிவ மாற்றங்களை C என்ற வடிவு கொண்டு உணர்த்தலாம். இதைத் தனியாக ஒலிக்குமபோது சி என்று கற்பிக்கின்றனர். சொற்களில் வரும்போது சி யை க என்று ஒலிக்கிறோம். O என்ற எழுத்தைத் தனியாக ஒலிக்கும்போது ஒ என்று ஒலிக்கிறோம். சொல்லில் வரும்போது அ என்று ஒலிக்கிறோம். தமிழ் மொழி இவ்வாறில்லை.

**“மொழிப்படுத்து இசைப்பினும் தெரிந்துவேறு இசைப்பினும்**
**எழுத்துஇயல் திரியா என்மனார் புலவர்”**[22]

இந்நூற்பாவுக்குப் பொருள், எழுத்தைச் சொல்லில் வைத்துச் சொன்னாலும் தனியாகச் சொன்னாலும் எழுத்தின் ஒலி இயல்பு திரியாது என்பதனால் உணர முடிகின்றது.

## தமிழ் இயற்கை மொழி

தமிழ்ச் சங்க காலத்திலிருந்து இதுவரை பெரும்பாலும் மாறுபடாமல், கி.மு.2000 ஆண்டளவில் இயற்றப்பட்ட தொல்காப்பியத்திலும் கி.பி.2 ஆம் நூற்றாண்டினதான புறநானூற்றிலும் தூய இலக்கிய நடையில் சொல்லமைதியும் சொற்றடரமைப்பும் பெரும்பாலும் ஒத்ததாய், சிறிது கற்றார்க்கும் ஓரளவு விளங்குவதாய் உள்ளன.

புறநானூற்றில் சில செய்யுட்களில் இரண்டொரு வடசொற்களே காணப்படுகின்றன. பல செய்யுட்களில் வட சொல்லேயில்லை. **(எ–டு : ''யாதுமூரே யாவரும் கேளீர்'' புறம்.192).** ஆகையால், நூலின் மொத்தச் சொற்களில் நூற்றுக்கொன்றுகூட வடசொல்லில்லை என்பது தெளிவு'' எனத் தேவநேயப் பாவாணர் குறிப்பிட்டுள்ளார்.

## தமிழ்மொழியின் பொருள்

தமிழ் என்ற சொல், மொழி, தமிழ்நாடு, தமிழ் மக்கள், தமிழரசர் போன்ற பொருள்களைத் தந்தது. 'இனிமையும் நீர்மையும தமிழ் எனலாகும்' என பிங்கல நிகண்டு பொருள் கூறியுள்ளது.

## வரலாற்று ஆசிரியர்களின் கருத்து

கி.மு. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்த சந்திரகுப்த மௌரியரின் அமைச்சரான சாணக்கியர், தம் அர்த்தசாஸ்திரத்தில் கபாடபுரம் கடற்துறையில் முத்துக்குளித்ததைப் பற்றிக் குறிப்பிடுகிறார். சங்க இலக்கியங்களில் பாடலிபுத்திரத்தை ஆண்ட நந்தர்கள், மௌரியர்கள் பற்றி குறிப்புகள் உள்ளன.

**''கி.மு.350–இல் வாழ்ந்த வடமொழி இலக்கணப் பேரறிஞரான காத்தியாயனார், சேர, சோழ, பாண்டியர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார். கி.மு.150–இல் வாழ்ந்த பதஞ்சலியார் காஞ்சிபுரத்தைப் பற்றியும் கேரளத்தைப் பற்றியும் குறிக்கிறார். கி.மு.மூன்றாம் நூற்றாண்டில் வாழ்ந்த பேரரசனான அசோகன், தன் கல்வெட்டுக்களில் தன் எல்லைக்கு உட்படாதவர்களாக, பாண்டிய, சோழ, கேரள புத்திரர்கள் தனியரசு செலுத்துவதாகக் குறித்துள்ளார்''[23].** இதன் மூலமாகவும் தமிழ்நாட்டின் தொன்மையை அறிய முடிகின்றது.

## மேனாட்டுத் தொடர்புகள்

ஐரோப்பாவிலிருந்து யாத்திரை செய்த பிளைனி **(கி.பி.27–29)** என்பவர் தம் குறிப்புகளில் தமிழ்நாட்டின் பழங்காலத் துறைமுகங்களாகிய, தொண்டி, முசிறி, கொற்கை, காவிரிப் பூம்பட்டினம் போன்றவற்றைக் குறித்துள்ளார். கி.பி.**60** ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பெரிப்புளுஸ் என்ற நூலின் ஆசிரியரும் தென்னகம் பற்றிய பல குறிப்புகளைத் தருகிறார். கி.பி.**150** ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தாலமி என்பாரும் பல தென்னகத் தொடர்புகளைத் தெரிவித்துள்ளார். மூவேந்தர் பற்றிய குறிப்பும் கருவூர், நாகப்பட்டினம், புதுச்சேரி முதலிய ஊர்களைப் பற்றிய குறிப்பும் அவர் நூலில் உள்ளன.

மேனாட்டினர் குறிப்புகள் தமிழ் இலக்கியங்கள் கூறும் வரலாற்றுக் குறிப்புக்களோடு ஒத்துள்ளன. மேலும்

1. **“ஐரோப்பாக் கண்டத்தில் கிரேக்கர்களுக்கு முந்திய அயோனியர்களுடைய மொழியுடனும் கிரீட் தீவில் நிலவிய மொழியுடனும் தமிழ் தொடர்புடையது என சுனித்குமார் சாட்டர்சி ‘திரவிடியன்’ என்ற நூலில் விளக்கியுள்ளார். உரோமானியர்களின் முன்னோடிகளான எட்ரூரியர் (வடக்கு இத்தாலி) களுடைய மொழிக்கும் தமிழுக்கும் நெருக்கமான உறவுள்ளது என்றும் வடக்கு இத்தாலியில் ‘இலம்பார்டி’ சமவெளியில் தசுக்கனி என்ற இடத்தில் தமிழ்மொழியின் எச்சம் உள்ளது”[24]** என்றும் கூறுகின்றார்.
2. **“ஐரோப்பாவின் மேற்கில் ஐபீரிய தீபகற்பத்தின் வடக்கில் ‘பிரனீசு’ மலைத் தொடரில் வாழும் பாசுக்கு இன மக்களின் மொழி, தமிழுடன் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளது. (பாசுக்கு இனத்தவர்களுக்கும் தமிழகத்துக்கும் வரலாற்றுக் காலத்தில் எந்தத் தொடர்புமில்லை.) இதனைப் போன்று ஆசியாவில் சைபீரியாவின் கிழக்கில் காமாட்சி கட்கன் தீவுகளில் வாழும் எங்களுடைய மொழிக்கும் தமிழுக்கும் நெருங்கியத் தொடர்பு உள்ளது”[25]** எனக் கூறுகின்றார்.
3. ஆத்திரேலிய பழங்குடி மக்களின் மொழி தமிழுடன் உறவு கொண்டுள்ளது. ஆப்பிரிக்க மக்கள் பேசும் மொழிகளின் அடித்தளத்தில் தமிழின் வேர்கள் உள்ளன என்று க.ப.அறவாணன் நிரூபித்துள்ளார்.
4. மேற்காசிய துரேனிய மொழிக் குடும்பம் தமிழுடன் உறவுடையது எனக் கால்டுவெல் விளக்கியிருப்பதைத் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் என்ற நூலில் தெளிவுபடுத்தியுள்ளார். தமிழுக்கும் இலக்கண அடிப்படைகளும் சொல் ஒற்றுமைகளும் இருப்பதை சுசுமோ ஓனோ என்ற சப்பானிய ஆய்வாளரும் பிறரும் நிரூபித்துள்ளனர்.

தமிழின் தொன்மொழி வரலாறு, காலம் கணக்கிட முடியாத பழமையுடையது. அவ்வரலாறு கி.மு.பத்தாம் நூற்றாண்டு வரை இந்தியர்கள் அனைவரும் ஒரே தாய்மொழியாக முதல் நிலைத் தமிழைக் கொண்டிருந்தனர் என்ற வரலாற்று உண்மையையும் வெளிப்படுத்துகின்றது என்பதன்மூலம் தமிழின் தொன்மையை அறிய முடிகின்றது.

மக்கள் முதலில் தோன்றி வளர்ந்த இடம் என,

1. **“குமரி முனைக்குத் தெற்கே இருந்த பரந்த நிலப்பரப்பு**
2. **மத்தியத்தரை கடற் பகுதி”[26]**

ஆகிய இரண்டைத்தான் வரலாற்றை உணர்ந்தவர்கள் குறிப்பிட்டுள்ளனர். இவற்றில் **“குமரி முனைக்குத் தெற்கே பரந்து விரிந்திருந்த குமரிக்கண்டம் லெமூரியா எனப்பட்டுள்ளது. இதனை ‘லெமூர்’ என்ற குரங்கு வாழ்ந்தது என்ற அடிப்படையில் இப்பெயரிட்டு அழைத்துள்ளனர். புராணங்களிலும் பண்டைய இலக்கியங்களிலும் நாவல் மரம் அதிகமிருந்ததினால் நாவலந்தீவு என்றனர்”[27]** என்ற தரவின்மூலம் மக்களின் முதல் வாழிடமாகவும் தமிழ் மொழி உள்ளிட்டப் பண்பாடுட்டுக் கூறுகள் வேரூன்றிய இடமாகவும் குமரிக்கண்டம் விளங்கியுள்ளதை அறிய முடிகின்றது. இதன் தொன்மையை புறநானூற்றுப் பாடல்களிலும் காண முடிகின்றது.

## ஆரியருக்கு முற்பட்டவர்

**“ஆரியர் இந்தியாவிற்கு வந்த போது சிறந்த மக்களினத்தார் அவரினும் மேம்பட்டவராய் உயர்ந்த நாகரிகமும் பண்பாடும் நிறைந்தவராய் வாழ்ந்தனர் என்பதை வரலாற்று உலகம் கொண்டுள்ளது. அந்த இனத்தவரையே பலரும் திராவிட இனத்தவர் என்பர். அவ்வாறு கூற விரும்பாதவர்கள் ஆரியர்க்கு முற்பட்டவர் என்றனர்”[28]** என அ.மு.பரமசிவானந்தம் குறிப்பிட்டுள்ளது இங்கு நோக்கத்தக்கதாகும்.

வேதத்தை அடியொட்டிய வாழ்க்கை முறையைப் பின்பற்றும் ஆரியர்கள் கைபர், போலன் கணவாய் வழியாக இந்தியாவின் வடபகுதியில் வந்து குடியேறினர். அதற்கு முன்பாகவே சிந்துச் சமவெளி நாகரிகப் பகுதிகள் உள்பட லெமூரியா கண்டம் என்ற வரையறைக்குட்பட்டப் பகுதிகள் முழுவதிலும் திராவிடர்கள் எனப்பட்ட தமிழ் மொழியை அறிந்த தமிழர்கள் வாழ்ந்து வந்ததால் ஆரியருக்கு முற்பட்டவர்களாக விளங்குகின்றனர் என்பது தெளிவாகிறது.

தமிழ் மொழியின் தொன்மையான பாடல்கள் வாய்மொழிப் பாடல்களாக இருந்துள்ளன. கி.பி.1871 ஆம் ஆண்டு சார்லஸ் ஈகோவர் என்ற ஆங்கில வரலாற்றாசிரியர் தென்னிந்திய நாட்டார் பாடல்கள் என்ற நூலை எழுதி வெளியிட்டுள்ளார். கி.பி.1896 ஆம் ஆண்டு க்யூநெவில் என்ற அறிஞர் தி தாப்ரோபேனியன் என்ற நூலை எழுதி வெளியிட்டுள்ளார்.

இந்நூலின் மூலமாகத் தமிழ் மொழியின் தொன்மையையும் ஏடுகளில் எழுதப்படுவதற்கு முன்பு இருந்த வாய்மொழிப் பாடல் நிலையையும் அறிய முடிகின்றது.

## முதல் இலக்கண நூல்

தமிழின் தொன்மையான நூலாகவும் முழுமையாகக் கிடைத்துள்ள முதல் நூலாகவும் விளங்குவது தொல்காப்பியம். இந்த இலக்கண நூலில் பழைய மரபுகளையும் நெறிமுறைகளையும் நூற்பாக்களின் மூலமாகத் தொல்காப்பியர் உணர்த்தியுள்ளார். இவற்றின்மூலம் தமிழ் மொழியின் தோற்றம், வளர்ச்சி என்ற அடிப்படை நிலையிலேயே மிகமிகத் தொன்மை வாய்ந்தது என்பதை உணர முடிகின்றது. யாப்பருங்கல விருத்தியில்,

**‘‘தொல்லியன் மருங்கின் மரீஇய மரபே’’**[29]

**‘‘தொன்னெறி மரபின தோன்றலாறே’’**[30]

**‘‘தொன்னெறி மரபிற் கற்பிற் குரியர்’’**[31]

**‘‘தோலென மொழிப தொன்னெறிப் புலவர்’’**[32]

என நான்கு இடங்களில் தொன்மையைக் குறிக்கும் நேரடியான சொற்கள் இடம் பெற்றுள்ளன. தொல்மரபு, தொல்நெறி என்பன இடம் பெற்றிருப்பதனால் மனித இனம் தோன்றிய காலம் தொட்டே தமிழ் மொழி பேச்சு மொழியாகக் கையாளப்பட்டு வந்துள்ளது என்பதை அறிய முடிகின்றது.

ஆதித் தமிழர் தொடங்கி அடுத்தடுத்த சந்ததியினரும் நிலம் மற்றும் நிலம் சார்ந்த பகுதிகளை நான்காகப் பிரித்துப் பயன்படுத்தி வந்ததைப் பற்றி,

**‘‘முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையான் சொல்லவும் படுமே’’**[33]

என்ற தொல்காப்பிய நூற்பாவின் மூலமாக வழி அறிய முடிகின்றது. இதில் ‘‘சொல்லிய முறையால்’’ என்ற குறிப்பின்மூலம் மிக நீண்ட காலம், பல நூற்றாண்டுகள் ஐந்து திணைகள் பற்றிய கருத்துக்கள் மக்களால் வழங்கப்பட்டு வந்துள்ளன என்பதை அறிய முடிகின்றது.

## முதல் கலைக்களஞ்சியம்

தமிழில் முதன்முதலில் தோன்றிய கலைக்களஞ்சியம் அபிதான கோசம் ஆகும். இதனை எழுதியவர் ஆ.முத்துத்தம்பிப் பிள்ளை ஆவார். இந்நூல் 1912 இல்

அச்சிடப்பட்டுள்ளது. இதில் 6000 பெயர் சொற்களுக்கானச் சிறப்பு விபரம் அகர வரிசைப்படித் தொகுத்து அச்சிடப்பட்டுள்ளது.

**“வடமொழி தென்மொழி ஆகியவற்றில் எழுதப்பட்ட வேதம், புராணம், இதிகாசம், தரும நூல்கள் போன்றவற்றில் கூறப்பட்டுள்ள தெய்வங்கள், தேவர்கள், இருடிகள், முனிவர்கள், அசுரர் போன்றவர்களின் வரலாறுகளும் புண்ணியத் தலங்கள், ஆறுகள், குளங்கள், மரங்கள் ஆகியவற்றின் வரலாறுகளும் தமிழகத்தின் பண்டைய மன்னர்கள், புலவர்கள், புரவலர்கள் பற்றிய வரலாறுகளும் தொகுத்து எழுதப்பட்டுள்ளது”[34].**

## தமிழ் எழுத்து வரலாறு

தமிழின் எழுத்துக்கள் தோன்றிய காலமானது கணக்கிட முடியாத அளவிற்குத் தொன்மை உடையது. **“வடிவங்களை ஓவியமாக அமைத்து எழுதுதல் இன்ன காலத்துத்தான் இத்தமிழ் நாட்டில் தோன்றிற்றென்று அளந்து கூற முடியாது”[35]** என இரா.இராகவ அய்யங்கார் குறிப்பிட்டுள்ளார்.

‘எழுதப் படுதலின் எழுத்தே’ என்பதனால் எழுதுதல் என்ற வினையை அடிப்படையாகக் கொண்டு ‘எழுத்து’ என்ற சொல் ஆதிகாலத்தில் பிறந்துள்ளது என்பதை அறிய முடிகின்றது. ஓவியம் வரைதலையும் குறிப்பதனால் பரிபாடலில் சித்திர மண்டபத்தைப் பற்றிக் குறிப்பிடும்போது எழுத்துநிலையை

**“மணலில் எழுதிய பாவை”[36]**

எனக் கடற்கரை மணலில் பாவை வரைதலைப் பற்றி பாடப்பட்டுள்ளது. கண்ணில் மை தீட்டுதலைத் திருவள்ளுவர்,

**“எழுதுங்கால் கோல் காணாக் கண்ணே போல்”[37]**

எனக் குறிப்பிட்டுள்ளார். தொல்காப்பியத்தில்,

**“அந்தரத் தெழுதிய எழுத்தின் மான”[38]**

என இருவர் பேசும் இரகசிய மொழியைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

எழுத்துக்கள் தோன்றிய பிறகு பனுவல் (நூல்) புலன் (துறை, உட்பிரிவுகள்) என்பன தோற்றம் பெற்றதென்பதை,

**“புலலென மொழிப் புலனுணர்ந்தோரே”[39]**

**“புலம் தொழுத்தோனே போக்கறு பனுவல்”[40]**

**“புலன் நன்குணர்ந்த புலமை யோரே”[41]**

**“வனப்பிலறானே வகுக்குங் காலைச்**

**சின்மென் மொழியாற் றாய பனுவலோ**

**தம்மை தானே அடி நிமிர் பின்றே”[42]**

என்ற செய்யுளியல் நூற்பாவிலும் புலன், பனுவல் என்ற சொற்கள் இடம் பெற்றுள்ளன. புலம் என்பது துறை என்ற பொருளைக் குறிக்கும் சொல்லாகவும் பல உட்பிரிவுகள் என்பதைக் குறிக்கும் சொல்லாகவும் விளங்குகின்றது.

தமிழ் எழுத்துக்கள் **1.** ஓவிய எழுத்து, **2.** ஒலி வடிவ எழுத்து, **3.** வரி வடிவ எழுத்து என மூன்று நிலைகளில் தோன்றி வளர்ந்துள்ளன என்பது அறிஞர்களின் கூற்றாகும். பிறகு நான்கு வகையாக உருவ எழுத்து, உணர்வு எழுத்து, ஒலி எழுத்து, தன்மை எழுத்து என்றிருந்ததை,

**“உருவே உணர்வே ஒலியே தன்மையென**

**இருவகையெழுத்தும் ஈரிரண்டாகும்”[43]**

என்பதன்மூலம் அறிய முடிகிறது.

## உருவ எழுத்து

**“காணப்பட்ட உருவம் எல்லாம்**

**மாணக் காட்டும் வகைமை நாடி**

**வழுவில் ஓவியன் கைவினை போல**

**எழுதப் படுவது உருவெழுத்தாகும்”[44]**

என யாப்பருங்கல விருத்தி நூற்பா உணர்த்தியுள்ளது. இதனால் பண்டைய காலத்தில் ஒவ்வொரு உருவத்தைக் குறிப்பதற்கும் உருவ எழுத்துக்களைப் பயன்படுத்தியுள்ளதன் மூலம் ஆதிகாலத்திலிருந்த எழுத்தின் நிலைப்பாட்டை அறிய முடிகின்றது.

## உணர்வெழுத்து

ஆதிகாலத்தில் தமிழ் மொழியின் எழுத்துக்கள் மனிதன் உணர்வுகளைப் பிரதிபலிப்பனவாக அமைந்ததை,

**“கொண்டவோர் குறியால் கொண்டவதனை**

**உண்டென்றும் உணர்த்துவது உணர்வெழுத்தாகும்”[45]**

என்பதன்மூலம் அறிய முடிகின்றது.

## ஒலி எழுத்து

மனிதன் எழுப்பிய ஒலியை ஆதாரமாகக் கொண்ட எழுத்துக்களை,

**“இசைபடு புள்ளின் எழாஅல் போலச்**

**செவிப்புலனாவது ஒலி எழுத்தாகும்”[46]**

என உணர்த்துவதன்மூலம் ஒலியும் எழுத்துக்களை உண்டாக்கும் மூலாதாரமாக விளங்கியுள்ளதை அறிய முடிகின்றது.

## தன்மை எழுத்து

தன்மை என்பது இயல்பைக் குறிப்பதாகும்.

**“முதற்காரணமும் துணைக் காரணமும்**

**துணைக் காரணத்தொடு தொடருவுணர்வும்**

**அவற்றொடு புணர்ந்த அகத்தெழு வளியின்**

**மிடற்றுப் பிறந்திசைப்பது தன்மை எழுத்து”[47]**

என்பதன்மூலம் உடலில் காற்று இயங்கும் தன்மையைக் கொண்டு இந்த எழுத்துக்கள் உண்டானவை என உணர முடிகின்றது.

## தமிழ் – சொற்பொருள் விளக்கம்

தொன்மை வாய்ந்த தமிழ் மொழி பல பொருளுடைய சொல்லாகச் சங்க இலக்கியத்தில் பல இடங்களிலும் குறிப்பாகப் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளது. தமிழானது மொழி, நாடு, மக்கள் என்ற பொருளில் வழங்கப்பட்டுள்ளது என அறிஞர்கள் கூறுவர்.

## தமிழ்மொழி என்ற பொருள்

மொழி என்ற பொருளில், புறநானூற்றில் இரண்டு இடங்களில் வழங்கப் பட்டிருப்பதை,

**“தமிழ் கெழு கூடல் தண்கோல் வேத்தே”[48]**

**“அதுஉஞ்சாலும் நற்றமிழ் முழுதறிதல்**

**அதனொடு மமையாதனுக வந்துநின்”[49]**

என்ற பாடலடிகளின் மூலம் அறிய முடிகின்றது.

**“தமிழ் வையை தண்ணம் புனல்”[50]**

என்பதிலும் வையை ஆறு பாய்ந்து வளம் செழிக்கும் தமிழ் மொழியுடைய பகுதி எனச் சுட்டப்பட்டுள்ளது. மேலும்

**“கண்ணார் கண்ணிக் கடுந்தேர்ச் செழியன்**

**தமிழ் நிலை பெற்ற தாங்கரு மரபின்**

**மகிழ்நனை மறுகின் மறுமையும் வரிதே”[51]**

என்ற பாடலடியிலும் தமிழ் எனும் சொல் மொழி என்ற பொருளில் உணர்த்தப்பட்டு உள்ளதை அறிய முடிகின்றது.

## தமிழ்நாடு என்ற பொருள்

தமிழ் என்றால் தமிழ் நிலம், தமிழ் நாடு என மக்கள் வாழும் வாழிடப் பகுதியைக் குறிக்கும் என்பதை,

**“தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன் போரெதிர்ந்து”[52]**

**“மண்டிணி இடக்கைத் தண்டமிழ் இடழ்வர்”[53]**

**“வையக வரைப்பிற் தமிழகம் கேட்ப”[54]**

**“தண்டமிழ் வையகங் கொண்டியாக”[55]**

**“நோயிலாக நங்காதவர் வாய்வாள்**

**தமிழகப்படுத்த இமிழிசை முரசின்”[56]**

என்ற சங்க இலக்கிய பாடலடிகள் உணர்த்துகின்றன.

தமிழ் என்றால் அம்மொழியைக் கற்ற மக்களைக் குறிக்கும் என்பதையும் சங்க இலக்கியங்கள் உணர்த்தியுள்ளன.

**“தமிழ் தலை மயங்கிய தலையானங் கானத்து”[57]**

என்பதில் தமிழ்தலை = தமிழ்ப்படை என்ற பொருள் இடம் பெற்றுள்ளது.

தமிழைப் பேசும் மக்கள், தமிழ் நிலத்தில் வாழும் மக்கள் எனப் பழமையும் மொழிப்பற்றும் ஒன்றாகக் கலந்ததினால் தமிழ் என்ற சொல் மக்களையும் குறிக்கும் பொருள் உண்டானதென்பதை அறிய முடிகின்றது.

**“கொண்டி மிகைபடத் தண்தமிழ் செறித்து”[58]**

என்பதில் தண்தமிழ் மறவர்களாகிய போர்வீரரான மக்கள் படையை நடத்திச் சென்று – என்ற பொருள் இடம் பெற்றிருப்பதனால் தமிழ் என்ற சொல் மக்கள் என்ற பொருளில் ஆளப்பட்டிருப்பதனை அறிய முடிகின்றது.

## தமிழின் தொன்மை – அறிஞர்கள் கருத்து

தமிழ் மொழியின் தொன்மையை இலக்கண, இலக்கிய நூல்களின் கருத்துக்களையும், சொல் அமைப்புகளையும் அடிப்படையாகக் கொண்டு அறிஞர்கள் விளக்கியுள்ளனர். கலைக் களஞ்சியம், அகராதிகள், நிகண்டுகள் போன்றனவும் விளக்கியுள்ளன. அறிஞர்கள் கருத்துக்களை அவர்கள் எழுதிய நூல்களின் மூலமாகப் பின்வருமாறு அறிய முடிகின்றது.

## திராவிடப் பிரகாசிகை

சபாபதி நாவலர் (கி.பி.1844–1903) எழுதிய நூல் ஆகும். திருவாவடுதுறை ஆதீனம் சுப்பிமணிய தேசிகரால் 'நாவலர்' என்ற பட்டம் சூட்டப்பட்டவர். திராவிடம், தமிழ் மொழி, பிரகாசிகை விளக்கம் என்ற பொருளையுடைய நூலாகும். இந்த நூலை 'தமிழ் வரலாறு' என்றும் குறிப்பிட்டுள்ளார். இதனை,

**"திராவிடப் பிரகாசிகை என்னும் தன்னை**
**நேர்தரும் தமிழ் வரலாறு சாற்றுவதனால**
**தமிழ் வரலாறு கதை பெற**
**எடுத்தீண்டு அமைவறக் கூறுவதற்கமர்ந்து"**[59]

என்ற பாயிரத்தின் அடிகளினால் அறிய முடிகிறது. இந்நூல்

1. தமிழின் தெய்வப் பழமை மரபியல்,
2. இலக்கண மரபியல்,
3. இலக்கிய மரபியல்,
4. சாத்திர மரபியல்,
5. ஒழிபியல்

எனும் ஐந்து பகுதிகளையுடையது. இந்நூலின் முதற்பதிப்பு கி.பி.1899 ஆம் ஆண்டில் ஆசிரியர் வாழ்ந்தபோதே வெளியிட்டுள்ளார். இந்நூலில் தமிழின் பழமை பற்றிய குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன.

## கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி

கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி 'தென்னிந்திய இலக்கியங்கள்' எனும் நூலில் தமிழிலக்கியங்களில் தலையாயதான சங்க இலக்கியங்களைப் பற்றி விளக்கும் போது, **"சங்க இலக்கியங்களின் காலம் கி.பி.100 – கி.பி.300 என்றும், சங்க இலக்கியம் தனி**

**இயல்புகளை உடையது என்றும், அது உருவாகிய காலமும் வரலாற்றில் தனி இயல்புகளையுடைய ஒரு புதுக்காலமாக இருக்கிறது”**[60] என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## பி.டி.சீனிவாச அய்யங்கார்

வரலாற்றறிஞர் P.T.சீனிவாச ஐயங்கார் **(1868–1931)** தென்னிந்தியாவைப் பற்றியும் தென்னிந்திய இலக்கியங்கள் குறித்தும் ஆய்ந்துள்ளார். இவர் **1929** ஆம் ஆண்டு History of The Tamils - Trow The Earliest Times to 600 A.D. என்ற ஆங்கில நூலை எழுதியுள்ளார். இதனை பி.இராமநாதன் தமிழில் ‘தமிழர் வரலாறு கி.பி.**600** வரை’ என மொழி பெயர்த்துள்ளார். இந்நூலில் சங்க இலக்கியங்களைப் பற்றி விளக்கும் P.T.சீனிவாச அய்யங்கார், **“பண்டையத் தமிழிலக்கிய மரபின் கடைசிப் படைப்பான கலித்தொகைப் பாடல்கள் யாவும் கி.பி.6 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை”**[61] என்ற கருத்தை முன் வைத்துள்ளார். இதனைப் போல் சங்க இலக்கியம் தொடர்பான பல கருத்துக்களையும் குறிப்பிட்டுள்ளார்.

## அறிஞர் வி.கனகசபைப் பிள்ளை

வி.கனகசபைப்பிள்ளை எழுதிய ‘**1800** ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்’ என்ற ஆங்கில நூலைப் பன்மொழிப் புலவர் கா.அப்பாத்துரையார் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

இந்நூலில் தலைப்புகள் பொருளடக்கத்தில் இடம் பெற்றுள்ளதில் பிரிவு–**2**, தமிழகத்தின் நில இயல் பிரிவுகள், பிரிவு–**13** இல் தமிழ்க் கவிஞர்களும் கவிதைகளும் என்பனவற்றில் சங்க இலக்கியங்களின் பாடல்கள், சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள மன்னர்கள், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு போன்றன பற்றிய கருத்துக்களை ஆய்வு செய்து கால அடைவுடன் விளக்கி உள்ளதைக் காண முடிகின்றது.

புறநானூற்றில் குறிப்பிடப்பட்டுள்ள போர்முறைகள், பண்பாட்டுக் கூறுகளைப் பற்றியும், சமூக வாழ்வியல் பற்றியும் தமிழின் தொன்மையைப் பற்றியும் விளக்கியுள்ளார்.

## டாக்டர் கே.கே.பிள்ளை

டாக்டர் கே.கே.பிள்ளை (கே.கணபதி பிள்ளை) சென்னைப் பல்கலைக் கழகத்தின் வரலாற்றுத் துறையில் பேராசிரியராக விளங்கியுள்ளார். இவரது ‘தமிழக வரலாறும் மக்களும் பண்பாடும்’ என்ற நூலை சென்னை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் **2002** ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளது. இதில் சங்க இலக்கியம், பண்டைத் தமிழரின்

வாழ்க்கை மற்றும் மொழியின் தொன்மை என்பனவற்றைப் பற்றிய கருத்துக்களை வரலாற்றுப் பூர்வமான ஆதாரங்களோடும் ஆண்டுகளோடும் கே.கே.பிள்ளை விளக்கியுள்ளார்.

## வி.ஆர்.இராமச்சந்திர தீட்சிதர்

V.R.இராமச்சந்திர தீட்சிதர் 1908 இல் Studies in Tamil Literature and History என்ற நூலை ஆங்கிலத்தில் எழுதி தமிழின் பழமையை வெளியிட்டுள்ளார்.

## முனைவர் வா.செ.குழந்தைசாமி

"இந்திய நாகரிகம், பண்பாடு பற்றி டாக்டர் C.P.இராமசாமி ஐயர் புனே பல்கலைக்கழகத்தில் 1953 ஆம் ஆண்டு நிகழ்த்திய பட்டமளிப்பு விழா உரையில் **"இந்திய கலாச்சாரத்தின் இரண்டு பெரிய அங்கங்கள் வடமொழியும் திராவிடமுமாகும்"**[62] என்று கூறியுள்ளார்.

## மாகறல் கார்த்திகேய முதலியார்

மாகறல் கார்த்திகேய முதலியார் 1913 ஆம் ஆண்டில் 'மொழி நூல்' என்ற தலைப்பில் பாயிரவியல், இலக்கணவியல், முதனிலையியல் என்ற மூன்றும் அடங்கிய நூலை எழுதியுள்ளார். இதில் சங்க இலக்கியங்களில் எட்டுத் தொகையிலிருந்து ஐங்குறுநூறு, புறநானூறு ஆகிய இரண்டையும், பத்துப்பாட்டில் இருந்து பொருநராற்றுப்படை, குறிஞ்சிப்பாட்டு ஆகிய இரண்டு நூல்களில் இருந்தும் மேற்கோள்களைக் கையாண்டுள்ளார்.

## சென்னைப் பல்கலைக்கழக ஆவணம்

இந்திய வரலாற்றையும் குறிப்பாகத் தென்னிந்திய வரலாற்றையும், தமிழரின் தொன்மை, பண்டைய கால வாழ்க்கை முறை சமூக ஏற்றத் தாழ்வுகள், மகளிர் நிலை, பண்பாடு, கலை, கலாச்சாரம், நாகரிகம் போன்ற மானிட வாழ்வியல் அலகுகளைப் பற்றிய மேனாட்டார் கருத்துக்களைச் சென்னைப் பல்கலைக்கழகம் Foreign Notices of South India என்ற தலைப்பில் வெளியிட்டுள்ளது. இதற்கு மூலாதாரமாகவும், தொன்மையை உணர்த்தும் ஆவணமாகவும் புறநானூற்றுப் பாடல்கள் விளங்கியுள்ளன. பண்டைய மன்னர், குடிமக்கள், நாடு, நகரம், மொழி, கலை கலாச்சாரம் எனப் பன்முகத் தன்மை கொண்ட வாழ்வியலின் தொன்மைக் கூறுகளைப் புலவர்கள் புறப்பாடல்களில் எழுதி வைத்ததனால் பழமையையும், அதற்கும் முந்தையத் தொன்மையையும் சேர,

சோழ, பாண்டிய நாடுகள் அடங்கிய தென்னிந்தியாவின் வரலாற்றையும் அறிய முடிகின்றது.

## கல்வெட்டுக்கள்

தமிழின் தொன்மையைக் காட்டும் சான்றுகளில் கல்வெட்டுக்கள் என்பன முதன்மையுடையவனாக விளங்குகின்றன. கல்வெட்டில் காணப்பட்ட எழுத்துக்களே பல திருத்தங்களுடன் இன்று வழக்கில் இருக்கின்றன.

மதுரைக்கு அருகிலுள்ள மருகால்தலைக் குன்றில் வெட்டப்பட்டுள்ள ஓவியங்களும் எழுத்துக்களும் கோடுகளும் கீறல்களும் தமிழின் தொன்மையையும் ஆதி காலத்திலேயே மொழிப்பயிற்சி மேலோங்கி இருந்ததைக் காட்டுகின்றன.

## மொழிஞாயிறு ஞா.தேவநேயப் பாவாணர்

'மேலையுலகில் (ஏறத்தாழ கி.மு.5000) முதன்முதலாக நாகரிகமடைந்த எகிப்து நாட்டு மொழியில், ஒரு சொல் இரு சொல் அல்ல, பல சொற்கள், அவையும் அடிப்படைச் சொற்கள் தமிழாயிருந்ததே தமிழின் தொன்மைக்குத் தலைசிறந்த இலக்கியச் சான்றாகும். மேலும் முதலில் தோன்றிய பகுதி (அ) கண்டம் லெமூரியா, அதில் முதல் மனிதன் தமிழன், உலகில் தோன்றிய முதல் மொழி தமிழ், கேட்பொலியின் செழுமையும் சுட்டொலியின் பயனும் இணைந்தபோது அழுத்தமான சைகைகள் வாயிலாக உணர்வுகளை வெளிப்படுத்தி இருக்கலாம். கேட்பொலி, சுட்டொலி, சைகைகளுக்குப் பின் ஒரேவிதமான ஓசை நயம் அச்சமூகத்தில் பகிர்ந்திடும்போது ஓசைகள் ஒரு வடிவாகி ஒரு மொழியாய்த் தோன்றியது. தமிழும் இவ்வாறுதான் தோன்றியது. இந்தியாவில் மட்டுமன்று, உலகத்திலேயே முதன்முதல் நெடுங்கணக்கு வகுத்ததும் அதற்கு முறை அமைத்ததும் தமிழரே. வடமொழி வண்ணமாலை தமிழ் நெடுங்கணக்கு முறையை முற்றிலும் தழுவியது' எனத் தேவநேயப் பாவாணர் குறிப்பிட்டுள்ளார்.

## தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாதையர்

பண்டைத் தமிழர் பொருள்களின் தன்மைகளைத் துருவி ஆராயும் ஆற்றலைப் பெரிதும் படைத்திருந்தனர். மக்களின் இயல்பும் அவர்கள் செய்யும் தொழில்களும் அவர்கள் வாழும் நிலத்தையே ஒத்திருந்தது. முற்காலத்துப் புலவர்கள் பாடிய பாடல்கள் இன்றும் தம் சிறப்பிற்குன்றாது கொண்டாடப்படுவதற்கு அப்புலவர்களின்

இயற்கையறிவும் உண்மை நிலையினின்று வழுவாத தன்மையுமே காரணங்களாகும் என உ.வே.சா. குறிப்பிட்டுள்ளார்.

## பா.வே.மாணிக்க நாயக்கர்

தமிழ் தொல்பெருந் தனிமொழி, இவ்வுலகிலேயே தன்னிகரற்றுத் தனித்தியங்கும் பண்டைய மொழி. ஹா, ஹ என்ற மூச்சைப் பிரிக்காமல் மூச்சுச் செட்டுடன் இயங்குவது தமிழ் ஒன்றே என்று குறிப்பிட்டுள்ளார்.

## சி.இலக்குவனார்

**“ஆரியர்கள் இந்நாட்டுக்கு வருவதற்கு முன்னர் இமயம் முதல் குமரி வரை வழக்கில் இருந்த மொழி தமிழ்தான் என்பது நடுநிலை தவறாத ஆராய்ச்சியாளர் நூல்களால் அறியப்படும் உண்மையாகும். தொல்காப்பியம் இலக்கண நூல்தான் என்றாலும் ஏனைய மொழிகளில் உள்ள இலக்கண நூல் போன்றதன்று. அண்மை நூற்றாண்டில் தோன்றி வளர்ந்து வரும் மொழி ஆராய்ச்சியும் மேலை நாட்டவரால் விரும்பிப் போற்றப்பட்டு வரும் இலக்கிய ஆராய்ச்சியும் பண்பாட்டுக் கலைகளாம் உயிரியல், உளவியல் முதலியனவும் தன்னகத்தே கொண்டு அந்நூல் விளங்குகின்றது. உயர்கலைக்கெல்லாம் பிறப்பிடமாகக் கிரேக்க நாட்டையே கூறுவர். ஆனால் தொல்காப்பியத்தை ஆராய்ந்து கற்போர் அவ்வாறு கூறார். பல உயர்கலைகளுக்குப் பிறப்பிடம் தமிழகமே என்று தலைநிமிர்ந்து சாற்றுவர்”**[63] என்ற சி.இலக்குவனாரின் கூற்றால் மொழிப் பழமையை அறிய முடிகின்றது.

## தமிழ்க்குடி

தமிழரின் வாழ்வியல் சார்ந்த அமைப்பு தமிழ்க்குடி என்ற பொதுச் சொல்லால் வழங்கப்பட்டு வருகின்றது. உலகம் தோன்றிய ஆதிகாலம் தொட்டே தமிழர்க்குடி தோன்றி வளர்ந்து வந்துள்ளது என்பதை,

**“கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு**
**முன் தோன்றிய மூத்தகுடி”**[64]

எனப் புறப்பொருள் வெண்பா மாலை கூறுகின்றது. பன்னெடுங்காலமாகத் தமிழ் மன்னர்கள் குடிமக்களைப் போற்றி காத்து வந்துள்ளனர் என்பதைத் தொல்காப்பியர்,

**“வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்”**[65]

எனச் சுட்டியுள்ளார்.

## தனித்தன்மை

- ★ எந்தவொரு மொழியிலும் மொழிக்காக முற்காலத்தில் சங்கங்கள் (குழுக்கள், புணர், கூட்டு) அமைத்து மொழியின் சிறப்புகளைப் பேணியிருக்கவில்லை. தமிழ் மொழியே மொழிக்கென்று பெரும்புலவர் குழுக்களைக் கொண்டு மொழியை ஆராய்ந்தது.
- ★ தொன்மை காலத்திலேயே எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்திலக்கணத்தைப் பெற்று சிறப்புப் பெற்று விளங்கியது தமிழ்மொழி.
- ★ முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற பாகுபாடு உலகிலேயே தமிழ் இலக்கியப் பாடல்களுக்கு மட்டுமே உரியதாகும்.
- ★ இயல், இசை, நாடகம் என்ற முற்பாகுபாடுகளையும் உடையது.
- ★ தமிழ் இலக்கியம் மானிட வாழ்க்கையை அகம், புறம் என பிரித்துக் கூறித் தனித்தன்மை பெற்று விளங்குகின்றது.

வடமொழியின் தாக்கம் தோன்றுவதற்கு முன்பாகவே சங்க இலக்கிய, இலக்கணம் தோன்றியது என்பதை,

**“இந்நாட்டில் தமிழ் இலக்கிய மரபு ஒன்றுதான் வடமொழி சாராதது வடமொழியைப் புறந்தள்ளித் தனித்தன்மையுடன் திகழ்வது. வடமொழியின் தாக்கம் தோன்றுவதற்கு முன்பே சங்க இலக்கியமும் இலக்கணங்களும் உருப்பெற்றுவிட்டன என்னும் வரலாற்று உண்மையைக் கருத்தில் கொள்க”**[66] என்று மணவை முஸ்தபா கூறுகின்றார்.

தமிழ் மொழியானது தனித்தன்மை பெற்று விளங்குவதை அகத்தியலிங்கம் அவர்கள்,

**“எந்தவொரு செவ்வியல் இலக்கியமும் பிற சிறந்த இலக்கியங்களிலிருந்து மாறுபட்டு தனித்தன்மை கொண்டு விளங்க வேண்டும் என்றும் உலக இலக்கியங்களில் சங்க இலக்கியத்திற்கென தனியொரு இடமுண்டு. பல்வேறு கோணங்களிலிருந்து இவ்விலக்கியத்தைப் பார்க்கும்போது ஒவ்வொரு பார்வையிலும் இதற்கெனத் தனிப்பண்புகள் இருக்கக் காணலாம்”**[67] என எடுத்துரைக்கிறார்.

தன் தலைவன்மீது கொண்ட அன்பானது நிலம், கடல் (நீர்), வானம் (ஆகாயம்) என்னும் இவற்றைக் காட்டிலும் மிகவும் சிறந்தது என்று தலைவி தன் தோழியிடம் கூறுவதை அம்மூவனார்,

**"நிலத்தினும் பெரிதே, வானினும் உயர்ந்தன்று**
**நீரினும் ஆரளவு இன்றே – சாரல்**
**கருங்கோல் குறிஞ்சிப்பூக் கொண்டு**
**பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"[68]**

என தலைவி தன் கருத்தை எளிதில் உணர்த்தும் திறன் வேறு எந்த மொழிகளிலும் இல்லாத தனித்தன்மையைப் பெற்று விளங்குவதை உணர முடிகின்றது.

தேவியின் பிரிவுத் துயரை அறிந்தவராய் அவளது எண்ணத்தை நிறைவேற்றும் விதமாக மன்னனைப் பாசறைவிட்டே அந்தப்புரம் செல்லுமாறு இளஞ்சேரல் இரும்பொறையை பெருங்குன்றூர்கிழார் வேண்டி நின்றார் என்பதை,

**"மாண் இழை அரிவை காணிய ஒருநாள்,**
**பூண்க மாள, நின் புரவி நெடுந்தேர் !"[69]**

என்று பாடியுள்ளார். மேலும்

**"பாலும் கொளாலும் வல்லோய் ! நின்**
**சாயல் மார்பு நனி அலைத்தன்றே ?"[70]**

என்று குமட்டூர் கண்ணனார் மனைவியிடம் விரைந்து செல்லுமாறு நெடுஞ்சேரலாதனை ஏவியதாகக் கூறப்படுகின்றது.

தன் கணவரின் பிரிவுத் துயரை தாங்காத மகளிர் சுவரில் பிரிந்த நாட்களைக் கோடிட்டு குறித்தனர். இயல்பாகவே சிவந்திருக்கும் மகளிர் விரல்கள் எழுதி எழுதி மேலும் சிவந்தன என கபிலர் தன் பாடலில்,

**"பாயல் இன்மையின் பாசிழை நெகிழ**
**நெடுமண் இஞ்சி நீள் நகர் வரைப்பின்**
**ஓவு உறழ் நெடுஞ்சுவர் நாள் பல எழுதிச்**
**செவ்விரல் சிவந்த அவ்வரிக் குடைச்சூல்"[71]**

குறிப்பிடுவதை காணமுடிகின்றது. அக வாழ்வில் ஏற்படும் தன்மையை வெளிப்படையாக எடுத்துக்காட்டும் தன்மை தமிழ்மொழிக்கு உரிய தனித்தன்மை ஆகும்.

ஒரு குழந்தை நல்லவனாவதும் தீயவனாவதும் அன்னையின் வளர்ப்பில் உள்ளது என்பர். அதேபோல் அக்கால கட்டங்களில் ஒரு குழந்தையை வீரனாக்குவது என்பது சமுதாயக் கடமையாகப் பேணப்பட்டு வந்துள்ளமையை,

**"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே ;**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே ;**
**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே ;**
**தன்னடை நல் கல்வேந்தற்குக் கடனே ;"[72]**

என்ற பொன்முடியார் பாடல்வழி அறியலாம்.

சங்ககால பெண்களும் வீரமிக்கவர்களாகவும் துணிச்சல் உடையவர்களாகவும் விளங்கியுள்ளனர். முன்னாளில் நடந்த போரில் ஒரு பெண்ணின் தந்தை யானையைக் கொன்று தானும் இறந்தார். மறுநாள் நடந்த போரில் அவளது கணவன் ஆநிரைகளைக் கவரச் சென்றவர்களைத் தடுத்து மடிந்தார். அதற்கெல்லாம் மனம் கலங்காது இன்றும் போர் முரசு ஒலிக்கிறதை கேட்டு மகிழ்ந்து தெருவில் விளையாடிக் கொண்டிருந்த தன் ஒரே மகனை அழைத்தாள். தலையை சீர் செய்து, வெண்ணிற ஆடை உடுத்தி கையில் வேலை எடுத்துக் கொடுத்து 'போர்க்களம் சென்று வா என் மகனே' என்று கூறி அனுப்பி வைத்தாள் என்ற செய்தியை,

**"மேல்நாள் உற்ற செருவிற் இவள் தன்னை,**
**யானை எறிந்து, களத்து ஒழிந் தனனே ;**
**நெடுநல் உற்ற செருவிற் இவள் கொழுநன்**
**பெருநிரை விலக்கி, ஆண்டுப்பட்ட னனே ;**
**இன்றும் செருப்பறை கேட்டு விரும்புற்று மயங்கி,**
**வேல்கைக் கொடுத்து, வெளிது விரித்து உடீஇல்,**
**பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி,**
**ஒருமகன் அல்லது இல் லோள்,**
**'செருமுக நோக்கிச் செல்க' என விடுமே !"[73]**

என ஒக்கூர் மாசாத்தியாரின் பாடல் உணர்த்துகிறது. இப்படிப்பட்ட வீரச் செய்திகளைக் கூறும் தமிழ்மொழி தனித்தன்மை கொண்டதாகவே காணப்படுகின்றது. இதைப் போலவே வரலாற்றுச் செய்திகளை வெளிப்படுத்துவதிலும் தமிழ் இலக்கியங்கள் முதன்மை பெற்றுத் தனித்தன்மையுடன் விளங்குகின்றது.

புறா ஒன்று குறுநடை போட்டு நடந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்த பருந்து ஒன்று அதை தனக்கு இரையாக்கிக் கொள்ள எண்ணி, அப்புறாவைத் தன் கூரிய நகக் கால்களால் பற்ற வந்தது. அதை உணர்ந்த புறா தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள சிபி அரசனின் வீட்டிற்குள் புகுந்து கொண்டது. அப்புறாவைப் பார்த்த சிபி மன்னன் புறாவை வெளியில் எடுத்து வந்து பறக்க விடப் பார்த்தார். அப்புறாவை உணவாக்கிக் கொள்ள வெளியில் பருந்தானது வட்டமிட்டுக் கொண்டிருப்பதையும் பார்த்தார். இப்புறாவையும் காப்பாற்ற வேண்டும். பருந்திற்கு இரையும் வேண்டும் என எண்ணிப் பார்த்தார். உடனே புறாவின் எடைக்கு எடை தன் உடலிலிருந்து பருந்துக்கு உணவு தரத் தீர்மானித்தார். தராசின் ஒரு தட்டில் புறாவையும் மறுதட்டில் தன்னையும் நிறுத்திக் காட்டி தன்னை பருந்துக்கு அளித்தார் என்ற செய்தி தமிழின் தனித் தன்மையைக் கூறுகின்றது. இதனை,

**“கூர் உகிப் பருந்தின் ஏறுகுறித்து ஒரீ இத்**
**தன்னகம் புகுக்க குறுநடைப் புறவின்**
**தபுதி அஞ்சின் சீரை புக்க**
**வரையா ஈகை வரவோன் மருக”**[74]

புறநானூற்று பாடல் வழி அறிய முடிகின்றது. ஒரே சமயத்தில் பருந்துக்கும் உணவளித்துப் புறாவையும் காத்த சிபிச் சக்கரவர்த்தியின் பண்பு நம்மை சிலிர்க்க வைக்கிறது. தமிழின் தனித்தன்மையை உணர்த்த இப்பாடல் சிறந்த சான்றாக அமைகின்றது.

## பொதுமைப் பண்பு

பொதுமைப் பண்பு என்பது உலகத்தில் உள்ள அனைவருக்கும் ஒத்ததாய் அமைவது. தனிப்பட்ட ஒருவருக்கென அமையாது. உலகத்தில் உள்ள மக்கள் அனைவருக்கும் எல்லா காலங்களிலும் பொருந்தும் வகையில் கருத்தினை வெளிப்படுத்துவது ஆகும்.

கணியன் பூங்குன்றனார்,

**“யாதும் ஊரே ; யாவரும் கேளிர் ;**
**தீதும் நன்றும் பிறர்தர வாரா ;**
**நோதலும் தணிதலும் அவற்றோ அன்ன ;”**[75]

எனும் புறநானூற்றுப் பாடலில், எல்லா ஊர்களும் நம் ஊரே, ஊரில் உள்ள அனைவரும் நம் உறவினர்களே. தீமை என்பது எப்பொழுதும் நாம் நடந்து கொள்ளும் விதத்திலேயே வரும், பிறரால் வராது. துன்பம் வருவதைக் கண்டு வருந்தக் கூடாது. அதை தீர்க்கும் வழிகள் நம்மிடமே இருக்கும். நாம் கருவில் உருவாகும் போதே நமக்கு இறப்பு என்ற ஒன்று உண்டு. அது புதியது கிடையாது. வாழ்க்கை இனிமையானது என எண்ணி மகிழ்ந்து வாழ்தலும் இல்லை. துன்பம் வரும்பொழுது கொடுமையானது என நினைத்து இகழ்தலும் இல்லை. மழையின் காரணமாக பெருகியோடும் வெள்ளம் ஆற்றில் சேர்வது போல உயிர்கள் ஊழின்வழியே அவற்றுக்கு ஏற்ற நிலையை அடையும் என்பதை எக்கால மக்களுக்கும் பொருந்தும்படியாகக் கூறியுள்ளார்.

**“பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல் நூலோர்**

**தொகுத் தவற்றுள்எல்லாம் தலை”[76]**

தான் தேடிய செல்வத்தைப் பலருக்கும் பகுத்துக் கொடுத்துத் தானும் உண்ண வேண்டும். வருந்தும் உயிர்களைக் காப்பாற்ற வேண்டும் என்று திருக்குறள் கூறுகின்றது. மேலும் நார்முடிச் சேரலை, பகுத்தூண் தொகுத்த ஆண்மைப் பிறர்கென வாழ்பவன்’ எனக் காப்பியனார் போற்றியுள்ளார். பொருளைத் தொகுத்தலும், தொகுத்தவற்றைப் பகுத்துண்டலும் பிறர்கென வாழ்பவர் ஆவார். இவையே அவர்களின் நல்லியல்பாகும் என்கின்றனர். இதனை,

**“பகுத்தூண் தொகுத்த ஆண்மை,**

**பிறர்க்கு என வாழ் தி நீ ஆகன்மாறே”[77]**

தனக்கென வாழாது பிறர்க்காக வாழும் தன்மையை இப்பாடல் விளக்குகின்றது.

தம்மிடம் செல்வம் இருந்தால் பிறருக்கு அச் செல்வத்தை கொடுத்து உதவ வேண்டும். இல்லையேல் அச் செல்வமானது நம்மிடம் தங்காது என்று கூறி செல்வத்தின் பயன் ஈதல் ஆகும். ஆதலால் பிறருக்குக் கொடுக்கும் போதுதான் செல்வம் வளரும் தன்மை உடையதாகிறது. ஆதலால் பிறருக்குப் பொருளைக் கொடுக்கும் ஈகைப் பண்பை மேற்கொள்ள வேண்டும் என்பதை,

**“செல்வத்துப் பயனே ஈதல் ;**

**துய்ப்பேம் எனினே, தப்புந பலவே”[78]**

இப்பாடல் உணர்த்துகின்றது. மேலும்

**"இன்னோர்க்கு என்னாது என்னோடும் சூழாது**

**வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்**

**எல்லோர்க்கும் கொடுமதி மனை கிழவோயே**

**பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்**

**திருந்துவேல் குமணன் நல்கியவளனே"[79]**

மக்கள் எப்பொழுதும் தன் நலனை மட்டும் கருதாது, பிறர் நலத்தையும் மனதில் கொண்டு வாழ்ந்தனர். சங்ககாலப் புலவர்கள் தான் பாடிப் பரிசு பெற்ற பொருளைத் தனக்கென்று வைத்துக் கொள்ளாமல் தன் மனைவியிடம் கொடுத்து தன்னை நாடி வரும் இரவலர்க்கும் உறவினர்களுக்கும் தன்பால் அன்பு செலுத்துபவருக்கும் கொடுத்து மகிழ்ந்துள்ளார். இவ்வாறாக பொதுமைப் பண்புகள் புறம் சார்ந்த நூல்களில் இடம் பெற்றுள்ளதை உணர முடிகின்றது.

**"நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது**

**அன்றே மறப்பது நன்று"[80]**

என திருவள்ளுவர் கூறுவது போலவே சங்ககால மக்களும் நன்றிவுணர்வோடு விளங்கியுள்ளனர்.

**"புலர்ந்த சாந்தின் புலரா ஈகை**

**மலர்ந்த மார்பின், மாவன் பாரி"[81]**

என்ற அடிகளில் செல்வக் கடுங்கோ வாழியாதனைப் புகழ்ந்து பாடி, பரிசு பெற வந்த கபிலர் பாரியைப் பற்றி முதல் பத்து அடிகளில் புகழ்ந்து பாடிய பின்புதான் வாழியாதனைப் பாடுகின்றார். இச்செயலானது அவர் பாரியினிடத்து கொண்ட நன்றி உணர்வையும் அன்பையும் உணர்த்துகிறது. மேலும் எக்காலத்திற்கும் பொருந்தும் வகையில் பொதுப்பண்புடன் விளங்குகின்றது.

அமிழ்தமே கிடைத்தாலும் சான்றோர்கள் தனித்து உண்ண மாட்டார்கள். எப்பொழுதும் யாரையும் வெறுக்க மாட்டார்கள். துன்பப்பட வேண்டியதற்குத் தாமும் துன்பப்படுவர். எப்பொழுதும் சுறுசுறுப்புடன் செயல்படுவர், புகழை விரும்பி ஏற்றுக் கொள்வர். பழிச் செயலக்காக உலகமே கிடைத்தாலும் அதை ஏற்க மறுப்பர். தன்னலம் கருதாது பிறர் நலனுக்காகவே அழைக்கும் மாண்பு கொண்டவர்களாகவும், தன் கொள்கையில் உறுதி உள்ளவர்களாகவும் சான்றோர்கள் விளங்கினர் என்பதை,

**“உண்டால் அம்ம, இவ்வுலகம், இந்திரர் ;**

**அமிழ்தம் இயைய தாயினும், இனிதுஎனத்**

**தமியர் உண்டலும் இலரே ; முனிவிலர் ;**

**துஞ்சலும் இலர் ; பிறர் அஞ்சுவது அஞ்சிப்**

**புகழ் எனின் உயிருங் கொடுக்குவர், பழியெனின்**

**உலகுடன் பெறினும், கொள்ளலார் ; அயர்விலர் ;**

**அன்னமாட்சி அனைய ராகித்,**

**தமக்கென முயலா நோன்தாள்,**

**பிறர்க்கென முயலுநர் உண்மையானே”[82]**

இப் புறநானூறு பாடல் உலகில் உள்ள மக்கள் அனைவரும் பழிச் செயலுக்கு அஞ்ச வேண்டும் என பொதுமைப் பண்புடன் அமைந்துள்ளது.

வாழியாதன் எப்பொழுதும் எந்த சூழ்நிலையிலும் பொய்பேசாதவன் விளையாட்டாகக் கூட அவன் ஒருபொழுதும் பொய் கூறியது கிடையாது எனக் கபிலர்,

**“நகையினும் பொய்யா வாய்மை, பகைவர்**

**புறஞ்சொல் கேளாப் புரைதீர் ஒண்மை”[83]**

இவ்வாறு கூறுகிறார். இப் பதிற்றுப் பத்து பாடல் உண்மையை எப்பொழுதும் எக்கால மக்களும் கடைபிடிக்க வேண்டும் என்பதைப் பொதுப்பண்பாகக் கூறுகின்றது. இக்கருத்துக்கள்மூலம் பொதுமைப் பண்புகள் நிறைந்த செவ்வியல் மொழி தமிழ் என்பது தெளிவாகிறது. பொதுமைப் பண்புகளைப் போலவே நடுநிலைமை கொண்ட மொழியாகவும் தமிழ் விளங்குகிறது.

## நடு நிலைமை

நீதி வழங்கும் நிலையில் உள்ளவர் இருபாலருடைய கருத்தையும் கேட்டு வேண்டியவர், பகைவர் என்று பாராமல் உண்மைக் கருத்து யாருடைய பக்கத்தில் இருக்கிறதோ அவருக்கு நீதி வழங்குதலே நடுநிலை ஆகும்.

**“நமரெனக் கோல் கோடாது**

**பிறர் எனக்குணம் கொல்லாது”[84]**

நீதி வழங்கக் கூடியவர் இருபாலருடைய கருத்துகளையும் ஆய்ந்து உறவினர், அயலவர் என்று பாரபட்சம் பார்க்காமல் நீதி வழங்குதலே நடுநிலை என்று புறநானூறு பாடல் எடுத்தியம்புகிறது.

முறையான நடுவுநிலை மிக்க ஆட்சியும் போரில் பகைவரை வெல்லும் திறனும் மன்னனின் அடிப்படை தகுதிகளாகச் சங்க காலத்தில் கருதப்பட்டன. அரசன் நடுநிலை இழந்து ஆட்சி புரிதல் என்பது அவருக்கும் அவரது மரபிற்கும் இழுக்காகக் கருதப்பட்டது என்பதை,

**"அறனிலை திரியா அன்பின் அவையத்துத்**
**திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து**
**மெலிகோல் செய்தேன் ஆகுக"[85]**

என புறநானூறு பாடல் சான்று பகர்கிறது.

முரஞ்சியூர் முடிநாகராயர் சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதனைச் சிறப்பித்து,

**"ஈரைம் பதின்மரும் பொருது களத்து ஒழியப்**
**பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தாய்"[86]**

பாரதப் போரின்போது (பஞ்ச பாண்டவர்களுக்கும், கௌரவர்களுக்கும்) இருபடை வீரர்களுக்கும் போர்க்களத்தில் போர் முடியும்வரை ஒரு சாரார்க்கு மட்டும் உணவு கொடுக்காமல் நடுநிலையோடு இருவருக்கும் உணவிட்டனர் என்ற செய்தி இதன்மூலம் தெளிவாகிறது.

ஒரு குடியில் பிறந்த நலங்கிள்ளியும், நெடுங்கிள்ளியும் சண்டையிட்டுக் கொள்கின்றனர். அவர்களை நடுவு நிலையோடு நின்று கோவூர்கிழார் இருவரையும் சமாதானம் செய்கின்றார்.

**"ஒருவீர் தோற்பினும், தோற்பறும் குடியே ;**
**இருவீர் வேறல் இயற்கையும் அன்றே"[87]**

ஒரே குடியில் பிறந்த இருவரும் சண்டையிட்டுக் கொண்டனர். ஒருவர் தோற்பதும், மற்றொருவர் வெல்வதும் இயல்வே. இதில் சண்டையிட்டால் ஒருவர் தோற்றாலும் அது உம் குடிக்கே இழுக்கு என்று கூறிச் சமாதானம் செய்கின்றார்.

கரிகாற் சோழன் இளம் வயதிலேயே அரசு கட்டில் ஏறினான். அப்பொழுது ஒரு வழக்கு அவைக்கு வந்தது. வழக்கின் பொருட்டு வந்தோர் இளம்வயதில் இருந்த

அரசரைப் பார்த்து நமக்கு சரியான தீர்ப்பு கிடைக்குமோ என எண்ணிப் பின்வாங்கினர். அதைப் பார்த்த கரிகாலன் நாளை உங்களுக்கு ஏற்ற ஒருவரால் நல்ல தீர்ப்பு கிடைக்கும் எனக் கூறிச் சென்றார்.

மறுநாள் அவ்விடத்திற்கு நரைத்த முடியுடனும், தாடியுடனும் ஒரு வயதான கிழவர் வந்து நீதி கூற காத்திருந்தார். அவரைப் பார்த்தவுடன் வழக்கிற்காக வந்தவர்கள் முகம் மகிழ்ந்தது. வழக்கு தொடர்ந்தது. ஒரு குழந்தைக்கு தாயார் இருவர் சொந்தம் கொண்டாடினர். அதைக் கவனித்த முதியவர் அவர்களிடம் குழந்தையை இருவரும் பிடித்து இழுக்க வேண்டும். இதில் யார் வெற்றி பெறுகின்றார்களோ அவர்களுக்கு இக்குழந்தை சொந்தம் என்று கூறுகின்றார். பின்னர் இருவரும் குழந்தையைப் பிடித்து இழுத்தனர். குழந்தை வலி பொறுக்காமல் கதறியது. அது கண்டு ஒரு பெண் அழுது கொண்டே குழந்தையை இழுப்பதை நிறுத்திக் கொண்டாள். மற்றவளோ அக்குழந்தையை இழுப்பதிலேயே குறியாக இருந்தாள்.

இதைப் பார்த்த வயது முதிர்ந்த கிழவன் நீதி கூறினார். தனக்கு குழந்தை கிடைக்காவிட்டாலும் பரவாயில்லை, தன் குழந்தை துன்பப்பட கூடாது என நினைத்த இவளே உண்மைத் தாய். மற்றொருத்தியோ இக்குழந்தையைக் கவர வந்தவள் என தீர்ப்பு கூறி தான் முதியவராக அணிந்திருந்த வேடத்தினைக் களைந்தார் கரிகாற்சோழன் எனும் கருத்தை,

**"இளையோர் வண்டல் அயரவும், முதியோர்**
**அவைபுகு பொழுதில் தம்பகை முரண் செலவும்"[88]**

பொருநராற்றுப் படை கூறுகின்றது. இதன்மூலம் கரிகாற்சோழனின் நரை முடித்து முறை செய்த வரலாறு தெள்ளிதின் புலனாகிறது.

## பல மொழிகளுக்குத் தாயாம் தன்மை

உலக மொழிகள் பலவற்றிலும் எண்ணிலடங்காத தமிழ்ச் சொற்கள் இருக்கின்றன. அத்துணை அருமையுடையதாய் தமிழானது விளங்குகிறது. உலகம் முழுவதும் தமிழின் சொற்கள் ஏடுகளிலும் மக்கள் நாவுகளிலும் புரண்டு வருகின்றது எனலாம். **"கி.மு.1000 ஆண்டுகட்குமுன் எபிரேயத்தில் எழுதப்பட்ட யூத அரசர் வரலாற்றிலும் நாட்பொத்தகத்திலும் (Chroicles) உள்ள துகி (தோகை) என்னும்**

**சொல்லை தமிழின் தொன்மையைக் குறிக்கும் முதல் இலக்கியச் சான்றாகக் கால்டுவெல் குறிப்பிடுகிறார்.**

**கி.மு.1200 ஆண்டுகட்கு முன் இயற்றப்பட்ட ஆரிய வேதத்தில் நூற்றுக்கணக்கான தென்சொற்கள் உள்ளமையே, தமிழகத் தொன்மைக்கு அதனினும் சிறந்த இலக்கியச் சான்றாகும்''[89]** என்கிறார் மொழியியலறிஞர் தேவநேயப் பாவாணர் அவர்கள்.

தேவநேயப் பாவாணர் எடுத்துக்காட்டும் உலக தொன்மொழிச் சொற்கள் பல தமிழிலிருந்து மற்ற மொழிகளுக்குச் சென்று அம்மொழி வடிவைக் கொண்டே வழங்கி வருகின்றன. சான்றாக இங்கு அரபு, பாபிலோனிய, எபிரேயி, எகிப்தியச் சொற்கள் மட்டும் எடுத்துக்காட்டப் பெறுகின்றன.

## அரபுச் சொற்கள்

| தமிழ் | அரபு |
|---|---|
| அப்பன் | ஆப் |
| அம்மை | உம் |
| அரிசி | ருஸ் (z) |
| ஆவி | ஹவா (காற்று) |
| கடி | கட் |
| கதம் (சினம்) | கடப் |
| காழகம் (துணி) | காம் |
| குப்பா | ஜீப்பா |
| குயின் (முகில்) | கைம் |
| கூலி | கூலி |
| சருக்கரை | சக்கா |
| ஞாலம் | ஆலம் |
| துத்தம் | துத்திய |
| நிலம் | நீலா |
| நெருப்பு | நார் |

இவைகள் தமிழ் அரபுச் சொற்களாகும்.

## தமிழ் பாபிலோனியச் சொற்கள்

| தமிழ் | பாபிலோனியம் |
|---|---|
| அப்பன் | அப்பா (b) |
| அல் (பகை) | லா |
| இலது | லேத் |
| இரு | அர் |
| சின | செனே |
| வா | பா (b) |
| ஊர் | ஊர் (நகர்) |

தமிழ்ச் சொற்கள் பாபிலோனியாவின் அதே பொருளில் வழங்குவதைக் காணலாம்.

## எபிரேயச் சொற்கள்

| தமிழ் | எபிரேயம் |
|---|---|
| அப்பன் | ஆப் (b) |
| அம்மை | ஏம் |
| ஆறு | யோர் (river) |
| இல் | லோ |
| அவா | அவ்வாஹ் |
| இரங்கு | யாரத் (d) |
| ஊரு | ஊர் (நெருப்பு) |
| எருமை | ரேம் |
| ஊர் | ரூம் |
| ஒள – ஒளி | ஓர் |
| சாய் | ஷா |
| சீறு | ஷாரக் |
| சும | சாமக் |
| சுவர் | ஷீர் |

| | |
|---|---|
| நட்டு – நாட்டு | நாத்தா |
| நோக்கி | நோக்கஹ் |
| பழம் | பெரி |
| பழு | பாராஹ் |

என்பன எபிரேயத்தில் (ஹீப்ரு) வழங்கும் சொற்களாகும்.

பழைய எகிப்திய மொழியிலுள்ள தமிழ்ச் சொற்களுக்கு எடுத்துக்காட்டு வருமாறு :

| **தமிழ்** | **எகிப்தியம்** |
|---|---|
| அது, அந்த | தெ |
| இரு | அர் |
| இறைவன் | எர்ப்ப |
| உமட்டு | எமெத் |
| சப்பு | சௌ (குழ) |
| நவ்வி (இளமை) | நொவ்வெர் (f) |
| மழ – மரி | மெர் |
| மன் (நிலை பெறு) | ரூம் |
| செம்மை | சென்ட் (b) |
| தா | து |
| மனை | மென் |
| மாத்திரை | மெத்தெர் |
| மாது | முத் (தாய்) |
| வாரி | மெர் (கடல்) |

போன்ற சொற்கள் எகிப்திய மொழியின்கண் வழங்குகின்றன. இவ்வாறு உலகின் எண்ணற்ற மொழிகளில் தமிழ்ச் சொற்கள் வழங்குகின்றன என்பதும் தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு போன்ற மொழிகளுக்குத் தாயாக உள்ளது தமிழ் என்பதும் இதன்மூலம் தெளிவாகிறது.

கி.பி.ஏழாம் நூற்றாண்டிலேயே குமரிலபட்டர் ஆந்திர திராவிட பாஷா என்று தெலுங்கைத் தமிழின்று பிரித்துக் கூறிவிட்டார். கன்னடமும், மலையாளமும் அதன்பின்பே தமிழினின்று பிரிந்தன. தமிழ்நாடு, ஆந்திரா, மைசூர், கேரளமாகிய

முத்திராவிட நாடுகளும் அண்மையில்தான் பிரிந்து போயின. அவை மீளவும் ஒன்று சேரும் நிலைமையிருப்பின் முன்னர்ப் பிரிந்தே போயிரா. மேலும்,

**"கன்னடமும் களிதெலுங்குங் கவின்மலையா ளமுந்துளுவும்**
**உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல வாயினும்"[90]**

என்று பேரா.ஆற்றம்பிள்ளை கூறுகிறார்.

## பண்பாடு, கலை, பட்டறிவு, வெளிப்பாடு

பண்படுத்துதல் பண்பாடு எனப்படும். நாடோடியாத் திரிந்த மனிதன், நிலையாக ஓரிடத்தில் தங்கியிருந்து நிலத்தைப் பண்படுத்தத் தெரிந்து கொண்டது அனைத்துப் பண்பாடுகளுக்கும் ஊற்றாக இருந்தது. நிலத்தைப் பண்படுத்தத் தெரிந்து கொண்டபின் வேளாண் உழவியல் என்னும் புதியதொரு எல்லையைத் தமிழர்கள் தொட்டனர்.

நிலத்தைப் பண்படுத்தி உழவுத் தொழிலில் வல்லோராக நம் சங்கச் சான்றோர் திகழ்ந்தமையையும் வேளாண் தொழில் தொடர்பாக தமிழில் வழங்கும் சொல்லாடல்களே தமிழர் தம் பண்பாட்டுத் தொன்மைக்குச் சான்றுகளாக விளங்குகின்றன எனலாம்.

## உழவுத் தொழில்

உழவுத் தொழிலில் உயர்ந்து விளங்கும் நாடானது எப்பொழுதும் பஞ்சத்தில் வீழாது. அந்நாடானது செல்வ செழிப்போடு இன்புற்று விளங்கும் என்பதனை,

**"கருவி வானம் தண் தளி சொரிந்தென,**
**பல்விதை உழவின் சில்லேராளர்**
**பனித் துறைப் பகன்றைப் பாங்குடைத் தெரியல்,**
**கழுவுறு கலிங்கம் கடுப்ப சூடி,**
**இலங்கு கதிர்த் திருமணி பெறூஉம்**
**அகன் கண் வைப்பின் நாடு கிழவோயே !"[91]**

என்று பதிற்றுப் பத்து கூறுகின்றது.

இடி இடித்து மின்னல் மின்னித் திசைகளில் எல்லாம் மழை பொழிந்ததால் உழவர்கள் விதைகளை விதைத்தலாகிய உழுதலைச் செய்தனர். விதைத்தலைத் தொடங்கும் உழவர் குடியினுள் சிலர் மட்டும் ஏர்களை வைத்திருந்தனர். அவர்கள் நீர்த்துறையில் பூத்திருந்த பகன்றைப் பூக்களைத் தொடுத்து மாலையாக

அணிந்திருந்தனர். இவ்வாறு உழவுத் தொழிலில் ஈடுபட்டிருந்த உழவர்கள் விளைந்து நிற்கின்ற கதிர்களிலிருந்து அழகிய தானிய மணிகளைப் பெற்றனர் என்பதன்மூலம் அக்காலத்தில் ஊரும் ஊரில் உள்ளவர்களும் உழவுத் தொழிலாகிய பண்பாட்டில் சிறந்து விளங்கினர் என்பதை அறிய முடிகின்றது.

## கலப்பை நூல்

வேளாண் வழிமுறைகளைப் பற்றிய நுட்பத்தினை எடுத்துரைக்கும் கலப்பை நூல் என்னும் நூல் ஒன்று இருந்தது எனும் இச்செய்தியினை,

**"நன்புலத்து வையடக்கி, நாளும்மா டோபோற்றிப்**
**புன்புலத்தைச் செய்து எருப்போற்றியபின் – இன்புலத்தின்**
**பண்கலப்பை என்றிவை பாற்படுப்பான் உழவோன்**
**நுண்கலப்பை நூல் ஓது வார்"[92]**

சிறுபஞ்சமூலம் சிறப்புடன் எடுத்துரைக்கின்றது.

ஏர் உழுவதைக் காட்டிலும் எருவிடுதல் நன்று ; பயிர்களைக் களையெடுத்த பின், களையெடுத்தாகி ஆயிற்று, நீர் பாய்ச்சினால் போதும் இனி கவலை இல்லை என இருத்தல் கூடாது ; களையெடுத்த பின் நீரைப் பாய்ச்சும் செயல்முறையைவிடப் பயிர்களுக்குள் மீண்டும் களைகள் வளராமலும், பூச்சிகள் முதலான நோய்கள் தொற்றாமலும் பயிர்களைக் காவல் புரிய வேண்டும். இத்தகு வேளாண் உண்மைகளை

**"ஏரினும் நன்றால் எருவிடுதல் கட்டபின்**
**நீரினும் நன்றதன் காப்பு"[93]**

என்னும் திருக்குறள் திறம்பட உரைக்கின்றது.

வேளாண்மை என்றாலே பிறர்க்கு உதவி செய்தல், விருந்தோம்பல் என்று பொருள். இதனை,

**"வேளாளன் என்பவன் விருந்திருக்க உண்ணாதான்"[94]**

என்று திரிகடுகம் எடுத்துரைக்கின்றது.

## விருந்தோம்பல்

விருந்தோம்பல் என்பது தமிழர்களின் தலைசிறந்த பண்பாடுகளுள் ஒன்றாகும். உற்றார் உறவினர் என்று பாராமல் அனைவருக்கும் உணவளித்து வந்தனர். விருந்தினரை ஒம்பும் முறையைப் பொருநராற்றுப்படை விரித்துக் கூறுகின்றது.

விருந்தினரிடம் நண்பனைப் போல உறவு கொண்டு இனிய சொற்களைக் கூறிக் கண்ணில் காணும்படி கன்று ஈன்ற பசு கன்றிடம் காட்டும் அன்பு போல விருந்தினரிடம் அன்பு காட்டி அவர்களை அன்பால் குளிரச் செய்ய வேண்டும் என்பதை,

**“கண்ணில் காண நண்ணுவழி இரீஇ**

**பருகு அன்ன அருகா நோக்கமொடு”[95]**

என பொருநராற்றுப்படை கூறுகின்றது. விருந்தினரை இன்முகத்தோடு வரவேற்று பலவகையான உணவினை விண்மீன்கள் போல கிண்ணத்தில் பரப்பி விருந்தினர் விரும்பியதைக் குறிப்பறிந்து ஓம்ப வேண்டும் என்பதை,

**“மின்பூத் தன்ன வின்கலம் பரப்பி**

**மகமுறை நோக்கி முகனமர்ந்து**

**ஆனா விருப்பின் தானின்று ஊட்டி”[96]**

என்ற பொருநராற்றுப்படை அடிகள் வழி அறியலாம். இப்பாடலில் இடம் பெற்றுள்ள ‘தானின்று’ என்ற சொல் விருந்து படைப்பவரே அருகில் இருந்து விருந்தினர் விரும்பும் உணவை வழங்க வேண்டும் என்பதை உணர்த்துகின்றது.

ஒருவர், பிறர்க்கு அறம் செய்ய விழையின் மற்றர் பசியினைப் போக்குதல் வேண்டும். இதுவே, செய்யும் அறங்களுள் தலையாயது என்று எடுத்துரைக்கின்றார் வள்ளுவர். இதனை,

**“ஆற்றுவார் ஆற்றல் பசி ஆற்றல்”[97]**

என்று தெளிவுபடுத்துகின்றார். இவ்வாறு விருந்தோம்பல் பண்பாடு சங்க காலங்களில் சிறப்புற்று இருத்தலை அறிய முடிகிறது.

## நம்பிக்கை

சங்க காலத் தமிழர்களிடையே தவத்திலே நம்பிக்கை உண்டு. முற்பிறவியில் தவம் செய்தவர்களே இப்பிறப்பில் செல்வத்தில் சிறந்து வாழ்கின்றனர் என்ற நம்பிக்கை தமிழர்களிடையே பரவியிருந்தது. இதனை,

**“வண்மையும், மாண்பும், வளமும், எச்சமும்,**

**தெய்வமும், யாவதும், தவம் உடையோர்க்கு”[98]**

எனும் எட்டாம் பத்தில் அரிசில் கிழார் கூறுகின்றார். கொடைத் தன்மை, நல்ல குணங்கள், செல்வம், குழந்தைப் பேறு, தெய்வ உணர்வு போன்றவை எல்லாம் தவம்

உடையவர்க்கே கிடைக்கும் என்று பண்டைய மக்கள் தவத்தின்மீது நம்பிக்கை வைத்திருந்தனர் என்பது இப்பாடல் வழி தெளிவாகிறது.

**உடை**

சங்க காலத்தில் மக்கள் தழைகளையும் மரப்பட்டைகளையும் விலங்குகளின் தோல்களையுமே உடையாகப் பயன்படுத்தினர். பின்னர் நெசவுத் தொழிலைக் கண்டறிந்த பின்னே பருத்தி ஆடைகளையும் பட்டாடைகளையும் நெய்யத் தொடங்கினர்.

மதுரை நகரச் செல்வர்கள் பொழுதைக் கழிக்க மாலை நேரத்தில் வண்டியில் ஏறிச் சென்றனர். அப்பொழுது அவர்கள் சூரியன் போன்று சிவந்த நிறத்தை ஒத்த கண்களை மயக்கும் பூவேலைப்பாடு உடைய ஆடையை அணிந்திருந்தனர் என்பதை,

**“வெயிற்கதிர் மழுங்கிய படர்கூர் ஞாயிற்றுச்**
**செக்க ரன்ன சிவந்து நுணங்குருவிற்**
**கண்பொரு புகூஉம் உண்பூங் கலிங்கம்**
**பொன்புனை வாளொடு பொலியக் கட்டி”**[99]

என மதுரைக் காஞ்சி விளக்குகின்றது. இவ்வாறாக மிகுந்த வேலைப்பாடு உடைய ஆடைகளை சங்ககால மக்கள் அணிந்திருந்தனர் என்பது தெளிவாகிறது.

**கலை**

ஆய கலைகள் அறுபத்து நான்கு என்பர். சங்கச் சான்றோர்கள் கலைகளில் சிறந்தவர்களாக விளங்கினர். ஓவியக்கலை, ஆடற்கலை, சிற்பக்கலை, கட்டிடக் கலை, இசைக் கலை ஆகிய ஐந்து கலைகளையும் ‘நுண்கலை’ என்பர்.

## இசைக் கலை

இசை, நடனம், நாடகம் இவைகளை உயர் வாழ்க்கைக்குரிய தகுதிகளாகக் கருதினர். தான் பெற்ற கலையையும் அவ்வின்பத்தையும் மற்றவரிடம் கூறி உலகறியச் செய்தனர். சங்க கால மகளிர் இசையில் நுண்ணிய அறிவும் இனிய குரல் வளமும் உடையவர்களாகத் திகழ்ந்தனர் என்பதை,

**“தொல் இமைச நிறீஇய உரைசால் பாண்மகன்**
**எண்ணுமுறை நிறுத்த பண்ணினுள்ளும்”**[100]

என்ற அகநானூறு பாடல்வழி அறிய முடிகின்றது.

யாழ், தண்ணும்மை, துடி, தூம்பு, முரசு, முழவம், தெண்கிணை, குழல் போன்ற இசைக்கருவிகள் இலக்கியத்தில் காணப்படுகின்றன.

நிலத்தினைக் குத்தும் கூரிய கொம்புகள் கொண்ட இரண்டு காளைகளைச் சண்டையிடச் செய்து, அதில் வென்ற காளையின் தோலை மயிர் சீவாது போர்த்தி உறுதியாய் கட்டப்பட்ட போர் முரசைச் செய்தனர்,

**“நல்ஏறு இரண்டு உடன்படுத்து**

**வென்றதன் பச்சை சீவாது போர்த்த**

**திண்முரசம்”[101]**

என்று புறநானூறு சுட்டுகின்றது. இசைக்கலையைப் போலவே சங்க காலத்தில் நாடகக் கலையும் சிறப்புப் பெற்று விளங்கியது.

## நாடகக் கலை

சங்க இலக்கியத்தில் இருபதிற்கும் மேற்பட்ட கூத்து வகைகளைக் காண முடிகின்றது. வெறியாட்டு, குரவை, துணங்கை ஆகிய மூன்று கூத்துகள் காணப்படுகின்றது.

பெண்கள் காலில் இருந்த அணிகலன்களை அகற்றாமல் இரவும் பகலும் குரவை ஆடி மகிழ்ந்தனர் என்பதை,

**“இரவும் பகலும் பாசிழை களையார்**

**குறும்பல் யாணர்க் குரவை அயரும்”[102]**

என பதிற்றுப்பத்து கூறுகிறது. பசும்பொன் அணிகளை அணிந்துள்ள மருதநில மகளிர் இரவும் பகலும் குரவைக் கூத்தாடியவாராக இன்புற்றிருந்தினர்.

**“அழியா விழவின் இழியாத் திவவின்**

**வயிரிய மாக்கள் பண்மைத் தெழீஇ**

**மன்றம் நண்ணி மறுகுசிறை பாடும்”[103]**

என்றும் கூறுகிறது பதிற்றுப் பத்து.

துணங்கை என்பது ஒருவகை கூத்து. இவ்வாட்டத்தில் இளம் பெண்கள் வளையல்கள் அணிந்து தலையில் அழகிய ஆம்பல் மலர்களைச் சூடி ஆடினர் என்பதை,

**“கலிகெழு துணங்கை ஆடிய மருங்கின்**

**வளை தலை மூதா ஆம்பல் ஆர்நவும்”[104]**

என்று பதிற்றுப் பத்து கூறுகின்றது.

இதன்மூலம் அக்காலத்தில் விழாக்கள் உரிய காலத்தே தவறாது நடைபெற்றுள்ளது. அப்போது சுருதி இறங்காத நரம்புக் கட்டினையுடைய யாழினைக் கையிலே ஏந்திய கூத்தர்கள் பண்கள் நன்றாகப் பொருந்தும்படி இசை எழுப்பியவராக ஊர்மன்றங்களிலும் தெருக்களிலும் பாடியபடி சென்றுள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

## பட்டறிவு வெளிப்பாடு

பட்டறிவு என்பது அனுபவத்தைக் குறிக்கும். சேர நாட்டு மக்கள் செவ்வாயும் வெள்ளியும் சேர்ந்தவிடத்து மழை பெய்யாது என்கிறார் குமட்டூர் கண்ணனார். இதனை,

**“அழல் சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது”**[105]

**“வயங்குகதிர் விரிந்து வானகம் சுடர்வர**
**வறிது வடக்கு இறைஞ்சிய சீர்சால் வெள்ளி**
**பயங்கெழு பொழுதோடு ஆநியம் நிற்ப”**[106]

என்று கூறுகின்றார். செவ்வாய் விண்மீன் சென்ற பக்கத்தே வெள்ளிமீன் செல்லாததால் மழை தேவைப்படும் காலங்களில் மழை பெய்விக்கும் என்று கூறுகின்றார்.

## தனித்தியங்கும் தன்மை

பிறமொழி தாக்கம் இல்லாத மொழி என்பதுதான் தமிழின் தனிப்பெரும் தன்மை. தமிழ் மொழியானது தனக்கென இலக்கிய, இலக்கண கோட்பாடுகளைக் கொண்டு இயங்கி வருகின்றது. இதனாலேயே தமிழ் மொழிக்கு வேறு எந்த மொழியின் உதவியும் தேவைப்படுவது இல்லை. தமிழ் மொழியானது தனித்தியங்கும் தகுதி பெற்றது. பிற மொழி துணையின்றி வளரும் ஆற்றல் பெற்றது ஆகும்.

தனித்தே செல்வதால் தமிழென்றும் வழங்குவர். ‘தமியளாய்ச் சென்றாள்’ என்றால் தனியே சென்றாள் என்பதாகும். வேறு எம்மொழியின் சொற்துணை கடுகளவு வேண்டாது பேசும் எழுதும் மொழியென்று ஒன்று இருந்தால் அது உலகினில் தமிழ்மொழி ஒன்று மட்டுமே ஆகும் என்று உறுதியாகச் சொல்லிவிடலாம் என்பர். பிற மொழிகளெல்லாம் நெடுங்காலமாகவே இன்னொரு மொழிச் சொற்களை ஏற்று வாழ்பவை. வடமொழி தமிழின்றி வாழ முடியாது. ஆங்கிலமோ உலகின் யாவும் சேர்ந்த ஒரு கூட்டுக்கலவை கொண்ட மொழியாகும். எம்மொழியும் இன்றி பிறமொழிக்

கலப்பின்றி இயங்க வல்லது தமிழே ஆகும். **“உலக மொழிகள் மூவாயிரத்துள்ளும் வேர்ச்சொல் காண்பதற்கு எளிதாகவும், மிகுதியாகவும் இடந்தரும் மொழி தமிழ் ஒன்றே. அஃது இயன்மொழியாதலால், பெரும்பாற் சொற்களின் வேர்வடிவை அல்லது வேருறுப்பை இன்னுள் தாங்கி நிற்கின்றது. இதனாலேயே ‘எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே’ என்று தொல்காப்பியம் வீறுகொண்டு முழங்குகின்றது. இங்ஙனம் கூறும் நிலை வேறு எம்மொழிக்கும் இல்லை. அதனால் வடமொழியாளர் ஒருபாற் சொற்களை இடுகுறி என்கின்றனர். மக்களைப் போன்றே சொற்களும் குடும்பங் குடும்பமாகவும் குலங்குலமாகவும் இனம் இனமாகவும் கொடிவழி (பநநேயடடிபைஉயட) முறையில் வேர் அடி முதனிலை என்னும் வகையீடும் ஆணி வேர், பக்க வேர், கிளை வேர் என்னும் வகையீடும் ஒன்றே எனக் கொள்ள வேண்டும்”**[107] என்று தேவநேயப் பாவாணர் அவர்கள் வேர்ச்சொற் கட்டுரைகள் எனும் நூலில் கூறியுள்ளார்.

இன்று தமிழில் எத்தனையோ பிற மொழிச் சொற்கள் கலந்துள்ளன. அதை எளிதாக நீக்கிவிட இயலும்.

**“பலகணி, சாளரம், காலதர், காற்றுவாரி என்னும் நான்கு பழந்தமிழ்ச்சொற்கள் இருப்பவும் அவை வழக்கொழிந்து அவற்றிற்குப் மாறாக ’ஜன்னல்’ என்னும் போர்த்துகீசியச் சொல்லே வழங்கி வருகின்றது”**[108] எதை நீக்கினாலும் தமிழ் தனித்து நிற்கும்.

| **தமிழ்** | **வடசொல்** |
|---|---|
| சிற்றூர், பட்டி | கிராமம் |
| துன் | ஆணை |
| தகுதி | யோக்கியம் |
| பண் | ராகம் |
| முதுசொம் | பிதுரார்ஜிதம் |

| **தமிழ்** | **உருது** |
|---|---|
| அரங்கு | கச்சேரி |
| அறைகூவல் | சவால் |
| கெடு | வாய்தா |
| தளுக்கு | ஷோக்கு |

| தமிழ் | ஆங்கிலம் |
|---|---|
| அறமன்றம் | கோர்ட்டு |
| கலங்கரை விளக்கம் | லைட் ஹவுஸ் |
| சாலை | ரோடு |
| தாள் | பேப்பர் |
| தூவல் | பேனா |

பிறமொழிச் சொற்களைக் களைந்திடின் உலகில் தனித்தன்மை கொண்டு வாழும் மொழி தமிழேயாகும் என்பதனை இப்பட்டியல்கள் வழி உணர முடிகிறது.

## இலக்கிய வளம்

உலகத்தில் உள்ளஅனைத்து மொழிகளைக் காட்டிலும் தலைசிறந்த மொழியாகத் திகழ்வது தமிழ்மொழியே ஆகும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மனித வாழ்வை அகம் (காதல்) புறம் (வீரம்) என பிரித்துக் கூறினர்.

இலக்கு+இயம் = இலக்கியம் ஒரு குறிக்கோளை நோக்கி மக்கள் செல்வதே ஆகும். இலக்கியம் என்ற சொல் பிறமொழிகளில்,

**“ஆங்கிலம் முதலான மொழிகளில் இலக்கியத்திற்கு உரிய சொல் ‘லிட்டரேசர்’ என்பதாகும். இதற்கு எழுத்து என்பதே பொருள். இலக்கியம் என்பதை எழுத்துத் தொகுதி என்கின்றனர். பிரெஞ்சு மொழியில் ‘பெலிசு–லெட்டர்சு’ என்பர். நல்ல சொற்களின் தொகுதி என்பது இதன்பொருள். இலக்கியங்கள் எப்படி இருக்க வேண்டும் என்பதற்குத் தமிழ் காட்டும் பெயர், அதன் பொருள் அளவிற்கு உயர்ந்த நிலையில் வேறு எந்த மொழியும் இல்லை என்பதே உண்மை”[109]** என்று இலக்கியச் சொல்லாட்சியுடன் ஒப்பிட்டு கூறுகின்றார் பொன்முகிலன்.

உயிரெழுத்துக்கள் எனக் கூறப்படுவது உந்தியிலிருந்து தோன்றும் காற்றானது உடம்பை தொடாது அங்காந்து பிறப்பதாலும், இதழ் குவிதலாலும், பிறக்கின்ற உயிரெழுத்துக்கள் வேறு எந்த மொழியிலும் இல்லை. இதுவே இவ்விலக்கியத்தின் வளமை ஆகும். மெய்யெழுத்துக்கள் என்பது உடம்பினைத் தீண்டி பிறப்பதனால் மெய்யெழுத்துகள் என்பர். இதுபோன்று உயிரும் மெய்யும் சேர்ந்து பிறக்கும் எழுத்துகள்

உயிர்மெய் எழுத்துகள் என்பர். உயிர் எழுத்து, மெய் எழுத்து, ஆய்த எழுத்து என மூன்றாகப் பிரித்து கூறும் திறன் வேறு எந்த மொழிகளிலும் இல்லை.

சங்க இலக்கியங்களை பதினெண்மேற்கணக்கு நூல்கள், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு எனவும் சங்கம் மருவிய இலக்கியங்களை பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் நீதி நூல்கள் (அற இலக்கியம்) எனவும் பக்தி இலக்கியங்களை சைவ இலக்கியம், பன்னிரு திருமுறைகள், வைணவ இலக்கியம், நாலாயிர திவ்விய பிரபந்தம் எனவும் முறையே பிரித்து கூறுவதிலும் சிறந்த மொழிவளம் பெற்று விளங்குகிறது. தமிழ் என்பதில் ஐயமில்லை.

தொண்ணூற்றாறு வகைச் சிற்றிலக்கியங்கள் தமிழ் மொழியில் உள்ளன. பரணி, உலா, தூது, கலம்பகம், அந்தாதி உட்பட அனைத்துச் சிற்றிலக்கியங்களும் தமிழுக்குப் பெருமை சேர்க்கின்றன. சங்க காலத்திற்கு முன்பாகவே வானவியல் சாத்திர நூல்களும், கோள்கலைப் பற்றிய நூல்களும், இசையைப் பற்றிய நூல்களும், இசை நுணுக்கத்தை பற்றிய நூல்களும் இருந்தமை தமிழ் மொழிக்குச் சிறப்பினை சேர்க்கின்றது. இவ்வாறு பதினெண்கீழ்க்கணக்கு, பதினெண் மேற்கணக்கு, பக்தி இலக்கியம், சிற்றிலக்கியம், சாத்திர இலக்கியம், உரைநடை, கவிதை, கட்டுரை உள்பட உலகின் எந்த ஒரு மொழியினும் இல்லாத பல துறைகளில் பல வகையான நூல்கள் தமிழில் படைக்கப்பட்டு உள்ளதால் தமிழ் மொழியில் இருக்கக் கூடிய இலக்கியங்களைப் போன்று வேறு எந்த மொழிகளிலும் சிறப்புற்று காணப்படவில்லை என்று கூறலாம். எழுதக்கூடிய எழுத்து முறைகளிலும், படிக்கக் கூடிய சொற்களிலும் இனிமையான சொற்களையும், எளிமையான சொற்களையும், சொல் நடைகளையும் புகுத்தி மனதில் இருக்கக் கூடிய உணர்வுகளை எளிமையாகத் தொட்டு உணர வைக்கக் கூடிய இலக்கிய வளம் பெற்ற மொழி நம் தமிழ்மொழி மட்டுமே எனக் கூறலாம்.

எழுதக்கூடிய எழுத்துமுறைகளிலும் படிக்கக் கூடிய சொற்களிலும் உணர்வுப் பூர்வமான சொற்களும் இனிமையான சொற்களையும் எளிமையான சொற்களையும் சொல்நடைகளையும் புகுத்தி மனதில் இருக்கக் கூடிய உணர்வுகளை எளிமையாகத் தொட்டு உணர வைக்கக் கூடிய இலக்கிய வளம் பெற்ற மொழி நம் தமிழ் மொழி மட்டுமே எனக் கூறலாம்.

## கலை, இலக்கியத் தன்மை வெளிப்பாடு

உலக மொழிகளில் எத்தனையோ இலக்கியங்கள் உள்ளன. தமிழ்மொழியில் மட்டுமே அவை நாடகம், புதினம், சிறுகதை, இலக்கியம், இலக்கணம், காப்பியம் என பல வகையான இலக்கிய வகைமைகள் உள்ளன. இயல், இசை, நாடகம் என முத்தமிழையும் கலைகளின் வெளிப்பாடான, ஓவியக்கலை, கட்டிடக் கலை, சிற்பக்கலை போன்ற அறுபத்து நான்கு கலைகளையும் ஒருங்கே பெற்றுத் திகழ்வது தமிழ்மொழியே எனலாம். இசைக்கருவிகளைத் தோற்கருவி, துளைக் கருவி, நரம்புக் கருவி மற்றும் கஞ்சக்கருவி என்றும் யாழின் உறுப்புகளைச் செறிதுணை, வறுவாய், நரம்புக்கோடு எனவும் சிறப்பிக்கும் திறன் தமிழுக்கே உரியதாகும்.

## கலைத்தன்மை வெளிப்பாடு

மத்தளமும், சிறுபறையும், நன்றாக உருக்கி தகடாகத் தட்டிய வெண்கலத்தால் அமைந்த தாளமும், மயிற்பீலியால் கட்டப்பெற்ற ஊது கொம்பும், இடையிடையே துளையமைத்த தூம்பு என்னும் இசைக்கருவியும், பாட்டின் சுருதியை குன்றாமல் ஒலிக்கச் செய்யும். குழலும், கரடியும், தாளத்தைக் கைக்கொண்டு ஒலிக்கும், வலிமையான வாயையுடைய சல்லியும், பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, குடமுழா, தக்கை, தமருகம், தண்ணுமை போன்று பல இசைக் கருவிகளைக் கூத்தர்கள் தன் பையில் கொண்டு சென்றதாக மலைபடுகடாம் கூறுகின்றது. இதனை,

**“திண்வார் விசித்தமுடிவொடு ஆகுளி**
**நுண்ணுருக்கு உற்ற விளங்கு அடர்ப்பாண்டில்**
**மின்னிரும் பீலி அணித்தழைக் கோட்டொடு**
**கண்ணிடை விடுத்த களிற்றுயிர்த் தும்பின்**
**இளிப்பயிர் இமிரும்குறும்பரந் தூம்பொடு,**
**விளிப்பது கவரும் தீம்குழல் துதைஇ,**
**நடுவுநின்று இசைக்கும் அலிக்குரல் தட்டை,**
**கடிகவர்பு ஒலிக்கும் வல்வாய் எல்லரி**
**நெடிதரு பாணிய பதலையும் பிறவும்**
**கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப**
**நேர்சீர் சுருக்கிக் காய கலப்பையிர்”[110]**

எடுத்தியம்புகின்றது. கலைத்தன்மையைப் போலவே இலக்கியத் தன்மையும் தமிழில் சிறப்புற இடம் பெற்றிருக்கிறது.

தமிழ் இலக்கியங்கள் எத்தகு கட்டமைப்பின் அடிப்படையில் அமைந்திருந்தன ; அமைக்க வேண்டும் என்னும் விரிவுகளைத் தொல்காப்பியர் தெளிவாக விளக்கியுள்ளார். தொல்காப்பியம் என்னும் சங்க மக்கள் வாழ்வியல் பெட்டகம் நமக்கு முழுமையாகக் கிடைத்திருப்பதால் இலக்கியக் தன்மை பற்றி வெளிப்பாட்டுக் கோட்பாடுகள் ஒரே இடத்தில் நமக்குக் கிடைத்துவிடுகின்றன. தமிழ் இலக்கியத் தன்மை வெளிப்பாடுகள்

1. முன்னம்
2. மரபு
3. உவமை
4. உள்ளுறை
5. இறைச்சி
6. மெய்ப்பாடு
7. வண்ணம்
8. நோக்கு
9. வனப்பு
10. யாப்பு

என்னும் கோட்பாடுகளை அடித்தளமாகக் கொண்டுள்ளன. இவ்வாறாகத் தமிழ் மொழி கலைத் தன்மையினை வெளிப்படுத்துவதிலும் இலக்கியத் தன்மையினை வெளிப்படுத்துவதிலும் சிறப்புப் பெற்று விளங்கியதை உணர முடிகிறது.

## உயர் சிந்தனை

மனிதன் தன் வாழ்க்கையில் பின்பற்றி வாழ வேண்டிய கருத்துகளை இலக்கியம் இயம்புகிறது. தனி மனிதனையும் சமுதாயத்தையும் மாற்றக்கூடிய உயரிய கருத்துகளைக் கூறுவதாக அமைந்துள்ளது தமிழிலக்கியம்.

மன்னன் பிறநாட்டின்மீது போர்த்தொடுக்கும் போது தனது வெற்றியை மட்டும் எண்ணி ஊரிலுள்ள பசுக்கள், பார்ப்பார், பெண்கள், பிணிவுடையவர், வயதானவர்கள், அனைவரையும் போரில் ஈடுபடுத்தாமல் இருப்பதோடு இவர்கள் அனைவரும்

போரின்போது துன்பப்படாமல் இருக்க, பாதுகாப்பான இடத்திற்குச் செல்லுமாறு அறிவுறுத்தினர் என்பதை,

**“ஆவும் ஆனியல் பார்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**
**பொன்போல் புதல்வர்ப் பெறாஅ தீரும்**
**எம் அம்பு கடிவிடுதும் நும் அரண் சேர்மின் என**
**அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்**
**கொல்களிற்று மீமிசைக் கொடி விசும்பு நிழற்றும்**
**எங்கோ வாழிய குடுமி”[111]**

எனும் இப் பாடலின் வழியாக உயர்சிந்தனைக் கருத்தை வெளிப்படுத்துகின்றனர்.

சான்றோர்கள் உயர்வாகக் கருதக்கூடியது தன் மானம். புகழ் கிடைப்பதாகு மானால் தன் உயிரைக் கொடுக்கும் அளவிற்குச் செயல்படுவர். அதுவே பழி உண்டாகக் கூடிய காரியமாக இருந்தால் இந்த உலகையே அவருக்கு பரிசாகக் கொடுத்தாலும் கூட ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்ற செய்தி உயர் சிந்தனையை கூறுகின்றது. இதனை

**“பிறர் அஞ்சுவது அஞ்சிப்**
**புகழ் எனின், உயிருங் கொடுக்குவர், பழியெனின்**
**உலகுடன் பெறினும், கொள்ளலர்”[112]**

புறநானூறு தெளிவாக்குகின்றது.

நாம் வாழும் நாட்களில் மற்றவர்களுக்கு நன்மை தரக்கூடிய செயல்களை செய்யவில்லை என்றாலும் பரவாயில்லை தீமை தரக்கூடிய செயல்களை ஒருபோதும் செய்யாமல் இருப்பது சிறந்தது. இதனை

**“நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்**
**அல்லது செய்தல் ஓம்புமின் ; அதுதான்**
**எல்லாரும் உவப்பது ; அன்றியும்,**
**நல்லாற்றுப் படூஉம் நெறியுமார் அதுவே”[113]**

என்ற புறநானூற்று பாடல் மற்றவர்களுக்கு எப்பொழுதும் எக்காலத்தும் தீமை செய்யக் கூடாது என்ற உயர்ந்த சிந்தனையைக் கூறுகின்றது.

## மொழிக் கோட்பாடு

மொழிக் கோட்பாடு குறித்தும் அதன் சிறப்புக் குறித்துப் பலவாறு விளக்கி பலநூறு கருத்துக்களை காரணம் காட்டலாமெனினும் இயற்கை மொழியானது, பலவகைகளிலும் பல வகைப்பட்ட மாற்றங்களுக்கும், ஏற்றங்களுக்கும் தக்கவாறு சிறக்கும் என்பது மொழியியல் அறிஞர் கோட்பாடு. **“இயற்கை மொழியானது உணர்ச்சி, ஒலிகள், விளியொலிகள், ஒப்பொலிகள், குறிப்பொலிகள், வாய்ச் செய்கை ஒலிகள், குழவி வளர்ப்பொலிகள், சுட்டொலிகள் கொண்டு சிறக்கும். மேலும் அவை தோன்றுதல், முன்மை, முன்செல்லுதல், நெருங்குதல் (செறிதல், கூடுதல்) பொருந்துதல், வளைதல், துளைத்தல், துருவுதல் என்கின்ற மாற்றங்களும், அறுவகைத் திரிபுகளும், ஈறுகளும், வலிதலும், இரட்டலும், ஒலியமைப்புகளும், வண்ணங்களும் கொண்டதாகவும், தமிழ் மொழியானது எண்ணல், அளவை உலகிற்குத் தந்ததாகவும், வினைகள், வேற்றுமைகள், மரபை கடைப்பிடித்தலும்”**[114] என தமிழின் மொழிக் கோட்பாடுகளை ஒவ்வொன்றாக ஆராயின் மிகப் பலவாகும். அனைத்துச் செவ்வியல் தன்மைகளும் வாய்க்கப் பெற்ற ஒரே மொழி தமிழே ஆகும் என்கின்ற தேவநேயப் பாவாணரின் கருத்துக்கள் மொழிக்கே இலக்கணமாகவும், கோட்பாடுகளாகவும் திகழ்கின்றன என்று சொன்னால் அது மிகையல்ல.

# தொகுப்புரை

சங்க கால மக்களின் வாழ்க்கை முறைகளையும் அவர்களுடைய பண்பாடுகளையும் பொழுதுபோக்கு, விருந்தோம்பல் போன்ற கூறுகளை உள்ளடக்கி பிறந்தது சங்க இலக்கியம் ஆகும். சங்ககால மக்களின் வரலாறுகளையும், ஆட்சி ஆண்ட மன்னர்களையும் அம்மன்னர்கள் ஆண்ட ஆட்சி முறைகளையும் வெளிக் கொணர்வதே சங்கப் புறவிலக்கியம் ஆகும்.

இப்புற இலக்கியங்களில் வெளிப்படுத்தும் கருத்துகளே தற்கால சமுதாய மக்களுக்கு அத்தியாவசிய தேவையாகிறது. அரசியல், ஆட்சிமுறை, சமூக அமைதி, மக்களின் வாழ்க்கை முறை, நட்பு பாராட்டல், ஒழுக்கம், கட்டுப்பாடுகள், நல்வழிப்படுத்தும் முறைகள் உட்பட பல கூறுகளை சங்கப்புற இலக்கியங்களில் இருந்தே பெறுகின்றோம் என்பதை இவ்வியல் வழி தெள்ளிதின் புலனாகிறது.

புறம் என்ற சொல்லின் தோற்றமும் வளர்ச்சியும், புறத்திணைகளின் நோக்கம், வழிமுறை, செவ்வியல் கூறுகளான தொன்மை, தனித்தன்மை, பொதுவுடைமை, மக்களை நல்வழிப்படுத்தும் நடுநிலைமை, பிற மொழிகளுடன் ஒப்புமைபடுத்த முடியாத தன்னிகரற்ற தனித்தன்மை, அக்கால மக்களின் பண்பாடு, கலை, பட்டறிவு, பிற மொழிச் சொற்களற்ற தனித்தியங்கும் தன்மை, இலக்கியங்களின் வளமை ஆகிய செவ்வியல் கூறுகள் முழுமையாக ஆராயப்பட்டன.

## அடிக்குறிப்புகள்

1. தொல் பொருள் இளம் – அகத்திணையியல் முன்னுரை
2. கலைக்களஞ்சியம் தொகுதி ஏழு, ப.521
3. தொல் – பொருள் நூற் – 1002
4. கு.வெ.பாலசுப்பிரமணியன், சங்க இலக்கியத்தில் புறப்பொருள், பக்.253–254
5. மேலது, ப.19
6. கா.கோ.வேங்கடராமன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.50
7. மேலது, ப.68
8. தொல்காப்பியம் சொல்லதிகாரம், நூ.14–16
9. ச.வே.சுப்பிரமணியன், தமிழிலக்கிய வரலாறு, ப.12
10. கலித், ப.104
11. சிலம்பு, பா : 17–22
12. புறம், பா.72
13. சிறுபாண், பா.66–69
14. முனைவர் கா.கோ.வேங்கடராமன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.11
15. மாணிக்கவாசகர், திருக்கோவையார், 7 12
16. தொல், நூல் மரபு, நூ.14
17. மேலது, நூ.15
18. மேலது, நூ.16
19. சுவாமிநாத தேசிகர், இலக்கணக் கொத்து, நூ.43
20. ச.வே.சுப்பிரமணியன், தமிழிலக்கிய வரலாறு, ப.13
21. மேலது, ப.13:14

22. தொல், மொழி மரபு, நூ.20

23. ச.வே.சுப்பிரமணியன், தமிழிலக்கிய வரலாறு, ப.15

24. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறும் பண்பாடும், ப.73

25. மேலது, ப.73

26. அ.மு.பரமசிவானந்தம், வரலாற்றுக்கு முன் வடக்கும் தெற்கும், ப.11

27. மேலது, ப.11

28. மேலது, ப.18

29. தொல். புள்ளி மயங்கியல், நூ.60

30. தொல். வேற்றுமை இயல், நூ.27

31. தொல். செய்யுளியல், நூ.100

32. மேலது, நூ.236 : 3

33. தொல். அகத்திணையியல், நூ.5

34. கலைக்களஞ்சியம், தொகுதி–10, ப.15

35. இரா.இராகவையங்கார், தமிழ்மொழி வரலாறு, ப.284

36. யாப்பெருங்கல விருத்தி, ப.8

37. திருக்குறள், பா.1285

38. தொல். பொருளதிகாரம், நூ.146

39. தொல். செய்யுளியல், நூ.241

40. தொல். பாயிரம், அடி.9

41. தொல். அகத்திணையியல், நூ.12

42. மேலது, நூ.235

43. யாப்பெருங்கலம், நூ.9

44. இரா.ரெங்கசாமி, தமிழ்மொழி வரலாறும் ஒப்பிலக்கணமும், ப.56
45. யாப்பெருங்கல விருத்தி, நூ.6
46. மேலது, நூ.13
47. மேலது, நூ.7
48. புறம், பா.58
49. மேலது, பா.58
50. மேலது, பா.51
51. மேலது, பா.35
52. மேலது, பா.168
53. மேலது, பா.195
54. அகம், பா.227
55. மேலது, பா.36
56. மேலது, ப.43
57. புறம், பா.19
58. பதிற்று, பா.63
59. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி–10, ப.291
60. மேலது, தொகுதி–2, ப.87
61. பி.ராமநாதன் (மொ) பி.டி.சீனிவாச ஐயங்கார், தமிழ் வரலாறு முன்னுரை, ப.2
62. வா.செ.குழந்தைசாமி, ஞான சம்பந்தம் மாத இதழ், 10.01.2006, ப.75
63. ஜெ.முத்துச்செல்வன், (க.ஆ.) அரிமா நோக்கு, காலாண்டு இதழ்.4, சனவரி 2014, ப.39
64. புறப்பொருள் வெண்பாமாலை, கொளு.7

65. தொல்.செய்யுளியல் நூ.75 : 3

66. மணவை முஸ்தபா, உயர்தனிச் செம்மொழி தாய்மொழியும் மூளையும், ப.6

67. அகத்தியலிங்கம்.ச., சங்க இலக்கியங்கள் செவ்வியல் பார்வை, ப.27, 28.

68. குறுந்தொகை, பா.3

69. பதிற்று, பா.81

70. மேலது, பா.16

71. பதிற்று, பா.16

72. புறம். பா.312

73. மேலது, பா.279

74. மேலது, பா.43

75. மேலது, பா.192

76. குறள், பா.322

77. பதிற்று, பா.38

78. புறம், பா.189

79. மேலது, பா.163

80. குறள், பா.108

81. பதிற்று, பா.61

82. புறம், பா.182

83. பதிற்று, பா.70

84. புறம், பா.70

85. மேலது, பா.71

86. மேலது, பா.2

87. புறம், பா.45

88. பொருநர், பா.187, 188

89. தேவநேயப் பாவாணர், தேவநேயம், ப.63

90. தேவநேயப் பாவாணர், தமிழ் வரலாறு, ப.38

91. பதிற்று, பா.76

92. சிறுபஞ்ச. பா.58

93. குறள், பா.1038

94. திரிகடுகம், பா.12

95. பொருநர், பா.வரிகள்.76, 77

96. பெரும், பா.475

97. குறள், பா.225

98. பதிற்று, பா.74

99. மதுரை, பா.430

100. அகம், பா.352 (வரி.14, 15)

101. புறம், பா.288

102. பதிற்று, பா.73

103. மேலது, பா.29

104. மேலது, பா.13

105. மேலது, பா.24

106. மேலது, பா.24

107. ஞா.தேவநேயப் பாவாணர், வேர்ச்சொற் கட்டுரைகள், ப.xxxiii

108. ஞா.தேவநேயப் பாவாணர், இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும் ? ப.131

109. பொன்.முகிலன், செம்மொழித் தமிழின் செவ்வியல் தன்மைகள், ப.84

110. மலை. பா.வரிகள்.3–13.

111. புறம், பா.9

112. மேலது, பா.182 (வரி 3–5)

113. மேலது, பா.195

114. ஞா.தேவநேயப் பாவாணர், பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.74

*******

# இயல் – மூன்று

# சங்கப்புற இலக்கியங்களில் ஆடவரின் செவ்வியல் கூறுகள்

சங்க இலக்கியங்களில் சிறப்பிக்கப்படுவதும் வரலாறுகளில் இடம் பெறுவதும் புற இலக்கியங்களே ஆகும். ஒருநாடும் சமுதாயமும் நன்கு வளர்ச்சி பெறுவதற்கு ஆட்சித் திறமே மிக முக்கியமாக அமைகிறது. சங்க காலத்தில் ஆட்சித் திறனைச் செம்மையானவையாகப் பெற்றுத் தரும் ஆற்றல் மிக்கவர் ஆண் மக்களாகவே இருந்தனர் என்பதில் ஐயமில்லை. பெருநிலப்பரப்பை ஆளக்கூடிய பெருவேந்தனாக உலா வருவது அனைத்து மன்னர்களாலும் விரும்பப்பட்டன. அதனால் அவர்கள் போர்க்கலைகளைக் கற்று தன்னை எதிர்க்க எவருமே இல்லை எனும் அளவிற்கு வெண்கொற்றக் குடையின் கீழ் ஆட்சி செய்தனர். ஆண் மக்களின் ஆட்சித்திறம் அவர்கள் செய்த புறம் கொடா போர், மன்னர்களின் தகுதி, கடமை ஆட்சித் திறத்தில் அவர்கள் பெற்ற பெயர்கள், பட்டங்கள் மன்னர்களின் கல்விச் சிறப்பு, அவர்களின் கடமைகள், வீரம், புகழ், கொடைச் சிறப்பு, பண்பாடு, கலாச்சாரம், ஈடு இணையற்ற ஆட்சித் திறம், புலவர்களின் சிறப்புகள் மேன்மைகள், தன்மான உணர்வு, நட்புத்திறம் போன்ற சிறந்த ஆண்மகன்களுக்கே உரிய செவ்வியல் பண்புகளைத் தெளிவாக ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## புறநூல்களில் ஆடவரின் செவ்வியல் கூறுகள்

புற இலக்கியங்கள் என்றாலே வரலாறுகளை உள்ளடக்கியது ஆகும். சங்க காலத்து வரலாறுகள் ஆண்களைச் சார்ந்ததாகவே இருந்தது. ஆட்சி, அரசு, உரிமை, பட்டம், பதவி, குடும்பம் அனைத்திலும் ஆண் மக்களே பெரும்பான்மையும் முதன்மை பெற்றுள்ளனர். பெண்கள் இவர்களைச் சார்ந்தே வாழ்ந்தாலும் கல்வியிலும் போர்த்திறத்திலும் அரசியல் நுணுக்கங்களையும் கற்றுத் திறம்பட வாழ்ந்தனர். அரசன் வெண்கொற்றக் குடையின்கீழ் ஆட்சி செய்யும் சிறப்பு, கொடைத்தன்மை, போர்த் திறம், பெற்ற பட்டங்கள் கல்விச் சிறப்பு, புலமை, உட்பட சங்கப்புற இலக்கியங்களில் ஆடவர்களின் ஆட்சியும் ஆளுமைத் திறமுமே நிரம்பி இருந்தது என்பதில் ஐயமில்லை.

## ஆட்சியமைப்புத் தோற்றம்

சங்ககால மக்கள் வாழ்ந்த இடம், அவர்களின் ஒழுக்கங்களை அடிப்படையாகக் கொண்டு நிலங்களை ஐந்து வகையாக பிரித்துள்ளனர். ஒவ்வொரு நில மக்களும்

பொருள் அடிப்படையிலும் பகைமையின் காரணமாகவும் மற்றும் பல காரணங்களினாலும் பிற நில மக்களோடு போரிட வேண்டிய நிலை ஏற்பட்டது. அதனால் அங்குள்ள மக்கள் திறமையாலும் அறிவாலும் சிறந்து விளங்கியவனைத் தலைவனாகத் தேர்ந்தெடுத்து அவன் சொற்படி கேட்டு நடந்தனர். இத்தகைய தலைமைப் பண்பே பின்னாளில் அரசாக வளர்ந்தது என அறிஞர்கள் குறிப்பிடுவர்.

குறிஞ்சி நில மக்கள் மலைப்பகுதியில் வாழ்ந்ததால் அங்கு விளைச்சல் என்பது அதிகம் இல்லாத காரணத்தினால் வளம் குறைந்து இருந்தது. அதனால் பிற நிலத்தவர் இங்கு எளிதில் வருவது இயலாத ஒன்றாகியது. பாலை நில மக்கள் மணல் சார்ந்த பகுதியில் வாழ்ந்தனர். அவர்களே அன்றாட வாழ்க்கையை வாழத் துன்பப்பட்டனர். அதனால் அங்கும் நிலத்தில் வளம் இல்லை, நெய்தல் நில மக்கள் கடல் சார்ந்த பகுதியில் வாழ்ந்தவர். அவர்களது முக்கியத் தொழில் மீன் பிடித்தல். மீன் விற்றலின் மூலம் கிடைப்பதே அவர்களுடைய வருமானமாக இருந்தது. இங்கும் செல்வ வளம் குறைந்தே காணப்பட்டது. எனவே இம்மூன்று இடங்களிலும் தலைமையானது தோன்றி இருக்கலாமே தவிர நிலையான அரசு தேவைப்படவில்லை என்று இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார்.

தமிழ் மக்களுடைய பண்பாட்டு வளர்ச்சியில் முல்லை நில மக்கள் முன்னேற்றம் அடைந்து இருந்தனர். இவர்கள் காடு சார்ந்த பகுதியில் வாழ்ந்ததால் அங்கு ஆடு, மாடுகளை மேய்த்து அவற்றில் இருந்து கிடைக்கும் பொருள்களான பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் இவற்றை விற்றுப் பொருளை ஈட்டிச் செல்வ சிறப்போடு வாழ்ந்தனர். அதனால் தன்னிடம் உள்ள செல்வத்தையோ, ஆநிரைகளையோ பகைவர்கள் கவர்ந்து செல்லாதிருக்க இந்நில மக்களுக்குத் தலைமையானது தேவைப்பட்டது. எனவே அவர்களுள் வலிமையும் திறமையும் வளமையும் கொண்ட ஒருவரைத் தலைவனாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர்.

கால்நடைகளை அதிகமாக வைத்திருந்த குடும்பத் தலைவனே அக்காலத்தில் செல்வச் சிறப்பால் முதன்மை பெற்று விளங்கினான். அத்தலைவனைத் தான் முதன்முதலில் ‘கோன்’ என அழைத்து வந்தனர் மக்கள். கோன் என்று இடையரைக் குறித்த சொல்லே அரசனையும் குறித்துள்ளது என்பதை,

**“கொற்றவர்தம் கோன் ஆகுவை”[1]**

என மதுரைக்காஞ்சி கூறுகின்றது. எனவே முல்லை நில மக்களிடமே முதன்முதலில் தலைமைப் பண்பு தோன்றியிருக்க முடியும் என்பது தெளிவாகிறது. இதனையே

**“நாட்டிற்குத் தலைவனாய் இருக்கும் அரசனின் தலைமை முல்லை நிலத் தலைவனிடமே தோன்றி இருத்தல் வேண்டும்”[2]** என்று வித்தியானந்தம் கூறுகின்றார்.

முல்லை நில மக்களைப் போலவே மருதநில மக்களிடம் செல்வச் செழிப்பு மிகுந்து காணப்பட்டது. வயல் சார்ந்த பகுதியில் இவர்கள் வாழ்ந்ததால், வயலில் விளையக்கூடிய தானியங்களையும் பயிர்களையும் விலங்குகளிடம் இருந்தும் பிற நில மக்களிடம் இருந்தும் பாதுகாக்க அங்கு ஒரு தலைவர் தேவைப்பட்டார். அதனால் தம்மில் அதிக நிலம் உடையவர்களையே தலைவனாகத் தேர்ந்தெடுத்தனர். அத்தலைவர்களை ‘வேள்’ என அழைத்தனர் என்று தெரிகின்றது.

**“முல்லை நிலத்தை விட மருத நிலத்திற்குப் பாதுகாப்பு மிகுதியாகத் தேவைப்பட்டது. எனவே, மருத நிலத்தில் நிலையான அரசு ஏற்பட்டது”[3]** என்கிறார் இராசமாணிக்கனார்.

மக்கள் தங்களையும் உடைமைகளையும் பாதுகாப்பதற்கே தலைவனைத் தேர்ந்தெடுத்துள்ளனர். இத்தகைய தலைவர்களே பின்னாளில் தங்களின் நிர்வாகத் திறமையாலும் புகழாலும் கொடையாலும் வலிமையாலும் மக்கள் மனதில் நீங்கா இடம் பிடித்து மன்னர்களாக ஆட்சி செய்துள்ளனர் என்பது புலனாகிறது.

## ஆட்சியாளரின் அரசுரிமை

சங்க காலத்தில் அரசு உரிமை என்பது வழிவழியாக வந்ததாக அமைகின்றது. தேர்தல் முறை இருந்ததாக தெரியவில்லை. ஆட்சியில் இருக்கும் அரசனுடைய மூத்த மகன், அவருக்குப் பின் மன்னன் ஆவது அன்றைய மரபாக இருந்தது. அரசனின் முதுமை காரணமாகவும் அல்லது இறப்பின் காரணமாகவும் அரச பதவியைத் தன் மகன் பெறுகிறான் என்பதை,

**“மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்**
**பால்தர வந்த பழவிறல் தாயம்”[4]**

என்ற இப்புறநானூற்று பாடல் விளக்குகிறது. ஆட்சியுரிமையானது ‘தாயம்’ எனப்பட்டது. கரிகாலன் தாய் வயிற்றில் இருக்கும்போதே தந்தை இறந்துவிட்டதால் அரசு உரிமையைப் பெற்றான் என்பதை,

**“தாய் வயிற்றிருந்து தாயம் எய்தி”[5]**

எனப் பொருநர் ஆற்றுப்படை கூறுகின்றது.

தமிழர்களின் பழக்கவழக்கத்தைக் கூறும் தொல்காப்பியர், ‘தாயத்தின் அடையா’ என்று கூறுகின்றார். இதற்கு நச்சினார்க்கினியர் தந்தையிடம் இருந்து மக்கள் பெரும் சொத்து என்று பொருள் கூறுகின்றார்.

**“சால்பும் செம்மையும் உளப்படப் பிறவும்**
**காவற்கு அமைந்த அரசுதுறை போகிய**
**வீறுசால் புதல்வற் பெற்றனை”[7]**

தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை தனக்குப் பின் அரசாள்வதற்குரிய தகுதிகளைக் கொண்ட மகனைப் பெற்றார் என்று அரிசில்கிழார் பதிற்றுப் பத்து பாடல் வரிகளில் எடுத்துக் கூறுவதைக் காண முடிகின்றது. மேலும்

**“வாழ்தல் ஈயா வளன் அறு பைதிரம்”[8]**

எனும் பதிற்றுப் பத்து பாடல் வரியில் ‘பைதிரம்’ என்பது பித்ருவிடம் (தந்தையிடம்) இருந்து மகன் பெரும் ஆட்சியுரிமையைக் குறிக்கின்றது. ஆகவே அக்கால மக்களின் அரசுரிமை என்பது தந்தையின் வழியாக மகன்களுக்குக் கிடைத்தது. அக்காலத்தில் அரச பதவி என்பது இன்ன வயதில்தான் கிடைக்க வேண்டும் என்றில்லாமல் சிறு வயதிலே கூட அரசனாக இருந்த செய்தி புலப்படுகின்றது.

## மன்னனின் தகுதியும் கடமையும்

அரசனாவதற்குரியவன் இளமையிலேயே பல கலைகளையும் கற்றுத் தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். பல வகையான படைப் பயிற்சிகளையும் போர்ப் பயிற்சிகளையும் பெற்றிருக்க வேண்டும். வேட்டையாடுவதிலும் வல்லமை உடையவராக விளங்க வேண்டும். அறிவு, ஆற்றல், ஈகை, அன்பு, கொடை, மறம் முதலிய நற்குணங்களைத் பெற்றுத் திகழ வேண்டும். பல நற்செயல்களைச் செய்து மக்களின் மனதைக் கவர்ந்தவராய் இருத்தல் வேண்டும்.

**“ஓர் அரசனுக்குப் பின் அரியணை ஏறத் தகுதி உடையவன் அவ்வரசனுடைய மூத்த மகனாவான். மூத்த மகன் இறந்துவிடின் இளைய மகனும் ஆண் மக்களே இல்லாதபோது மகள் வழிப் பேரன்மாருள் மூப்புடையவனும் பேரன்மாரும் இல்லாதபோது பிற நெருங்கிய உறவினருள் தகுதிமிக்கவனும் அரியணை ஏறத் தகுதியுடையோர்”[9]** என்கிறார் ஞா.தேவநேயப் பாவாணர்.

குடிமக்களின் பொருளாதார வளர்ச்சியில் பங்கெடுத்தல் அரசனது கடமையாகும். பயிர்த்தொழில், கைத்தொழில், வாணிபம் இம்மூன்றையும் மன்னர்கள் ஆதரித்தனர். கரிகாலன் காடுகளை அழித்தும் நாட்டின் வளத்தைப் பெருக்கியும் நீர் நிலைகளை மேம்படுத்தியும் நாட்டின் வளத்தை உயர்த்தினான் என்பதை,

**“காடுகொன்று நாடு ஆக்கிக்**
**குளம் தொட்டு வளம் பெருக்கி”[10]**

எனப் புலவர் உருத்திரங்கண்ணனார் பாடியிருப்பது குறிப்பிடத்தக்கது. மன்னர்கள் மக்களுக்குத் தாய் போல இருந்து, மக்களாகிய குழந்தைகளின் துன்பத்தைப் போக்கக் கூடியவர்களாக இருந்தனர் என்பதை,

**“நாயகன் அல்லன் ; நம்மை**
**நனிபயந்து எடுத்து நல்கும்**
**தாய் என இனிது போணித்**
**தாங்குதி தாங்குவோரை”[11]**

என்று கம்பராமாயணம் கூறுகிறது. ஒரு தாய் தன் குழந்தையை எப்படி பார்த்துக் கொள்வாளோ அதேபோல மன்னன் மக்களைப் பாதுகாக்க வேண்டும் என்பதை இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

### பெயர்களும் பட்டங்களும்

அரசர்களின் பெயர்களை இயற்பெயர், குடிப்பெயர், பட்டப் பெயர், சிறப்புப் பெயர், விருதுப் பெயர், உயர்வுப் பெயர், வரிசைப் பெயர், திணை நிலைப் பெயர், இயனிலைப் பெயர் என வகைப்படுத்தினர்.

மூவேந்தர் குடிப் பெயர்களில் முதன்மையானவை சேரன், சோழன், பாண்டியன் என்பனவாகும். பிற குடிப் பெயர்கள் சேரனுக்கு மலையன், வானவன், வில்லவன் எனவும் சோழனுக்குச் சென்னி, கிள்ளி, செம்பியன் எனவும் பாண்டியனுக்கு செழியன், மாறன், வழுதி எனவும் இருந்தமை சான்றுகள் வழி தெரிகிறது.

**“இயற்பெயர் என்பது பெற்றோர் இட்ட பிள்ளைப் பெயராகும். பட்டப் பெயராவது அரசன் முடி சூடும்போது புனைந்து கொள்ளும் பெயர். விருதுப் பெயராவது அரசன் தன் பகைவரை வென்றபோது சூடிக் கொள்ளும் கொற்றப் பெயராகும். தலையாலங்கானத்து செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியன் என்பது போரின் வெற்றியால் விளைந்த விருதுப் பெயரே. சிறப்புப் பெயர் என்பது நல்ல வகையிலோ, தீய வகையிலோ ஏதேனும் ஒரு சிறப்பு பற்றி மக்கள் அரசர்க்கு இட்டு வழங்கும் பெயராகும். முதற்குலோத்துங்கச் சோழனுக்கு வழங்கிய ‘சுங்கந்தவிர்த்த சோழன்’ என்பது சிறப்புப் பெயரே”[12]** என்று ஞா.தேவநேயப் பாவாணர் கூறுகிறார்.

மக்கள் அரசர்களை இறைவன், அடிகள், தேவர் என கண்ணியமாக அழைப்பது உயர்வுப் பெயராகும். அரசனின் தரத்தைக் குறிக்கும் வேள், மன்னன், வேந்தன் என்பது வரிசைப் பெயர் ஆகும். வெற்பன், கானக நாடன், ஊரன், துறைவன், விடலை முதலியவை ஐந்திணை பற்றி அழைக்கும் திணை நிலைப் பெயராகும். செம்மல், வள்ளல் என்பவை ஏதேனும் ஓர் இயல்பு பற்றி வழங்கும் இயனிலைப் பெயர் எனப்படும்.

மேற்கண்ட பெயர்கள் அனைத்தும் மக்கள் மன்னர்களுக்கு இட்டு அழைத்தவையாகும். அரசர்கள் தமக்கு கீழ் பணியாற்றும் அலுவலர்களுக்கும் நாட்டில் ஏதேனும் ஒரு துறையில் சிறந்து விளங்கியவர்களுக்கு செய்யும் சிறப்புப் பட்டங்கள் ஆகும். இப்பட்டங்களை தொல்காப்பியம் ‘மாராயம்’ என்கின்றது. இத்தகைய **“மாராயமானது எட்டி, காவிதி, ஏனாதி எனப்படுகின்றது. எட்டியும் காவிதியும் சாதாரணமாக கவுரவப் பட்டங்கள்”[13]** என்கிறார் நச்சினார்க்கினியர்.

எட்டிப் பட்டம் வணிகரில் தலைசிறந்தவர்களுக்கு அளிக்கப் பெற்றுள்ளது. காவிதிப் பட்டம் மன்னர்களுக்கு அறிவுரை வழங்கும் நல் அமைச்சர்களுக்கு வழங்கினார்கள் என்பதை,

**“ஆவுதி மண்ணி அவிர்துகில் முடித்து**
**மாவிசும்பு வழங்கும் பெரியோர்போல**
**நன்றும் தீதும் கண்டாய்ந்து அடக்கி**
**அன்பும் அறனும் ஒழியாது காத்து**
**பழிஒரீஇ உயர்ந்து பாய்புகழ் நிறைந்த**
**செம்மை சான்ற காவிதி”[14]**

என மதுரைக் காஞ்சி கூறுகின்றது. ‘எட்டிப் பட்டமும் காவிதிப் பட்டமும் மலரால் செய்யப்பட்டவை’ என கூறுகின்றது. ஏனாதிப் பட்டம் என்பது சிறந்த போர் வீரர்களுக்கு அளிக்கப்பட்டுள்ளது. ஏனாதிப் பட்டம் பெற்ற ஒருவன் வைரம் பதித்த தங்க மோதிரத்தை கவுரவச் சிறப்பின் அடையாளமாக கையில் அணிந்திருந்ததை மதுரைக் காஞ்சி **(719)** கூறுகின்றது.

## கல்விச் சிறப்பு

ஒரு மாணவன் ஆசிரியரிடம் பணிந்து கல்வி கற்க வேண்டும். நமக்கு கல்வி புகட்டும் குருவிற்குப் பல வகையில் உதவி செய்ய வேண்டும். அவரின் தேவை அறிந்து செயல்பட வேண்டும். கல்வி கற்கும்போது வெறுப்பின்றி பணிவுடன் கற்க வேண்டும். தன் வயிற்றில் பிறந்த பலருள், தாய் கல்வி கற்றவனையே சிறப்பாக எண்ணுவாள். எல்லோரிடமும் ஒருவிதமாக அன்பு காட்டும் தாய்கூட சற்று அதிகமாகக் கல்வி கற்றவர்மீது அதிக அன்பு காட்டுவாள். ஒரே குடியில் பல பிள்ளைகள் இருந்தாலும்கூட அவர்களில் யார் கல்வி அறிவு உடையவராக இருக்கின்றார்களோ, அவர்களையே (கற்காத மூத்தவனை அரசன் மதிக்க மாட்டான், கல்வி கற்ற இளையவனையே அரசன் மதிப்பான்) அரசன் மதிப்பார். வேறுபாடுடைய நான்கு வருணத்துள், கீழ் வருணத்தான் கல்வி பெற்றிருப்பின் அவனை மேல் வருணத்தினரும் போற்றி மதிப்பர் என்பதை,

**“உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும்,**
**பிற்றை நிலை முனியாது, கற்றல் நன்றே !**
**பிறப்பு ஓர் அன்ன உடன் வயிற்று உள்ளும்**
**சிறப்பின் பாலால், தாயும் மனம் திரியும்**
**ஒரு குடிப்பிறந்த பல்லோ ருள்ளும்**
**‘மூத்தோன் வருக’ என்னாது, அவருள்**
**அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும் ;**
**வேற்றுமை தெரிந்த நாற்பால் உள்ளும்**
**கீழ்ப்பால் ஒருவன் கற்பின்,**
**மேற்பால் ஒருவனும் அவன்கண் படுமே”**[15]

புறநானூற்று பாடல்வழி அறிய முடிகிறது.

கல்வி அறிவு உடைய அரசன் அறநெறிகளை அறிந்து வரி பெறுவான். அதனால் அவனுடைய நாட்டில் செல்வ வளம் பெருகும் நாடும் சிறப்புற்று இருக்கும். அரசனும் உயர்வான். ஆனால், மன்னன் அறிவற்றவனாக இருந்தால் நெற்பயிர்கள் விளைந்த வயலில் யானை புகுந்தது போல தானும் அனுபவிக்க முடியாமல் மக்களையும் அனுபவிக்க விடாமல் நாட்டைக் கெடுப்பான் என்பதை,

**“அறிவுடை வேந்தன் நெறியறிந்து கொளினே,**

**கோடியாத்து, நாடு பெரிது நந்தும்”[16]**

என்று இப் புறநானூறு பாடல் கல்வி அறிவுடையவர்களே சிறப்பாக ஆட்சி நடத்த முடியும் என்பதைக் கூறுகிறது. ஆகவே நாட்டை ஆளும் அரசன் கல்வியில் சிறந்து விளங்க வேண்மென்பதைப் பிசிராந்தையார், பாண்டியன் அறிவுடை நம்பியிடம் கூறுவதாக இப்பாடல் அமைகிறது. ‘கற்றோருக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு’ எனக் கூறும் பழமொழிக்கு ஏற்றாற் போல கற்றறிந்தவர் எந்த நாட்டிற்குச் சென்றாலும் உணவுப் பொருட்களைக் கொண்டு செல்ல வேண்டியது இல்லை, எந்தப் பொருளையும் எடுத்துச் செல்ல வேண்டியது இல்லை, தான் பெற்ற கல்வியால் அவர்களுக்கு அனைத்தும் கிடைக்கும். மரம் வெட்டும் தச்சன் கைத்தொழில் வல்ல மகன்கள் காட்டுக்குள் சென்றால் அவர்களுக்கு மரம் கிடைக்காமல் போகாது, அதுபோலவே கல்வி கற்றவர்கள் எங்குச் சென்றாலும் அவர்களுக்கு மதிப்பும் வருவாயும் கிடைக்கும் என்பதை ஔவையார்

**“எத்திசை செலினும், அத்திசைச் சோறே!”[17]**

எனும் புறநானூறு பாடல் வழி உணர்த்தியுள்ளார். இதன்மூலம் கல்வியின் சிறப்பை உணரமுடிகிறது.

குழந்தையைப பெற்றெடுத்தல் என்பது ஒரு தாயின் கடமையாகும். அக்குழந்தைக்கு நல் அறிவு, ஒழுக்கம், கல்வி எனக் கற்றுக் கொடுத்து அறிவில் சிறந்த சான்றோனாக ஆக்குவது ஒரு தந்தையின் கடமை ஆகும். இதனைப் புறநானூறு பாடல்

**“சான்றோ ஆக்குதல் தந்தைக்கு கடனே”[18]**

எனக் கூறுகின்றது. ஒருவர் வாழ்வில் நல்ல பண்புகளையும் ஒழுக்கத்தினையும் கடைபிடித்து வாழ்க்கை நடத்த ‘கல்வியே’ முதன்மையாக விளங்கியது. அக்கல்வியைக் கற்ற ஆடவர்கள் அனைவரும் தனித்தன்மை பெற்று விளங்கியதைக் காண முடிகின்றது.

## போர்

சங்க காலங்களில் தமிழ் நிலம் மூன்று பேரரசர்களாலும் பல குறுநில மன்னர்களாலும் ஆளப்பட்டது. அவர்களுக்கிடையே போர்கள் ஓயாது நிகழ்ந்த வண்ணமிருந்தது. இல்வாழ்க்கையில் போராட்டம் என்பது தன்னைத் தற்காத்துக் கொள்வதற்காக முதலில் ஏற்பட்டது. அதுவே காலத்தின் மாற்றத்தால் மக்களிடையே உணவு, உடை, உறையுள், பொன், புகழ், மண், பெண், வேட்கை காரணமாகப் போராட்டம் நிகழ்ந்தது. ஒருவரை ஒருவர் தாக்குதலும் அதனால் அழிந்துபடுவதும் புதியது அன்று. இது உலகத்து இயற்கை ஆகும் என்பர். இதை,

**“ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்**
**புதுவதன்று இவ் உலகத்து இயற்கை”**[19]

இப் புறநானூற்றுப் பாடல் விளக்குகின்றது.

போர் செய்தல் என்பது சங்க காலத்தில் ஒரு கலையாகவே இருந்திருக்கிறது என்றும் போரிடுதல் என்பது சங்க காலத்திற்கு மட்டுமின்றி போர் என்பது எக்காலத்திற்கும் பொருந்துவதாக அமைகிறது என்பதை,

**“பகையும் போரும் எக்காலத்தும் உண்டு”**[20]

என்று சேதுப்பிள்ளை கூறுகிறார்.

ஆண்கள் இருவரில் வலிமை பெற்றவர் யார் என்பதை உறுதி செய்யவும் வீரத்தில் சிறந்தவர்கள் யார் என்பதை உணரவும் இப் போர் முறையானது தேவைப்பட்டது.

அரசர்கள் பொதுவாகப் போர் வேட்கை உடையவராகவே இருந்தனர். ஆதலால் போர்களும் அடிக்கடி நடைபெற்றன. அவர்கள் போரின் வீரத்தை பேரறம் என மதித்தனர். குழுவாக மக்கள் வாழ்கின்ற இடங்களில் எல்லாம் போர்முறைகள் நடந்தன என்பதை **“குழுக்குழுவாக மக்கள் வாழ்கின்ற வாய்ப்புடைய இடங்களில் எல்லாம் போர் என்பது தவிர்க்க முடியாததாகவே இருந்திருக்கின்றது”**[21] என்று கந்தையா பிள்ளை கூறுகின்றார்.

அக்காலங்களில் போர் என்பது **“வாழ்வின் ஒரு பகுதியாகவும் சிலருக்குப் போரே வாழ்வாகவும் அமைந்தது”**[22] என்றும் கூறுகின்றார்.

வீரர்கள் போருக்கான முடிவொலியைக் கேட்ட உடனேயே போர்க்களம் சென்றனர் என்பதை,

**"பேரமர் உழந்த வெருவெரு பறந்தலை"[23]**

எனப் புறநானூறு கூறுகின்றது. மேலும் மன்றில் தொங்கும் முழவின் மேல் காற்றுபட்டு ஓசை கிளம்பினால் அது போர்ப் பறையே எனக் கருதி உடனே மனம் மகிழ்ந்தது கிளம்பும் வீரர்கள் உளர் என்பதை

**"பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை**
**வளிபொரு தெண்கண் கேட்பின்**
**அது போர் என்னும் என்ஐயும் உளனே"[24]**

இப் புறநானூற்று பாடல் சான்று பகர்கின்றது.

## போருக்கான காரணங்கள்

ஆநிரைகளைக் கவர்தலும் அதை மீட்டு வருதலும் போருக்கு உரிய முதன்மைக் காரணமாகத் தொடக்க காலத்தில் இருந்தன. அவ்வாறு கவர்ந்து வந்த ஆநிரைகளைத் தமக்கென வைத்துக் கொள்ளாது அனைவருக்கும் பகுத்துக் கொடுக்கும் பண்புடையவர்களாக அவ்வீரர்கள் திகழ்ந்தனர் என்பதை,

**"மிகப்பல ஆயினும், என்னாம் எனைத்தும்**
**வெண்கோள் தோன்றாக் குழிசியொடு,**
**நாள் உறை மத்தொலி கேளா தோனே ?"[25]**

தன் கைவில்லால் பகைவரை வீழ்த்தி ஆநிரைகளைக் கவர்ந்து வந்து உடனே மற்றவர்களுக்குக் கொடுத்து விட்டான் என்று கூறுகின்றது.

சிக்மண்ட் பிராய்டு என்ற உளவியல் அறிஞர் "**தன்னைத் தானே காத்துக் கொள்ள வேண்டும் என்ற மன இயல்பே போருக்குக் காரணம்**"[26] எனக் கூறுகின்றார்.

**"போர் இயற்கையானது, போரிடுவது மனிதர்களின் தொன்மையான பண்புகளில் ஒன்று"[27]** என்று அரிஸ்டாட்டில் கூறுகின்றார்.

போருக்குரிய காரணமாக பல கருத்துக்கள் கூறுகின்றனர். போர் ஆசை, பாதுகாப்பு, பகை, தண்டனை, மறம், அருள் என்னும் ஆறுவகைக் காரணங்களால் நிகழ்த்தப் பெற்றிருக்கின்றது. ஆசையானது மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை, புகழாசை, விண்ணாசை என ஐவகைப்படும். தற்காப்பு, நாட்டுக் காப்பு, மதக்காப்பு எனப் பாதுகாப்பு மூவகைப்படும். பகை என்பது பழி தீர்ப்பு, பழம்பகை, பொறாமை என மூவகைப்படும். பிறவரசனின் இகழ்ச்சி பற்றியதும் பொருள் கொடுக்காமை பற்றியதும்

படையெடுப்பு பற்றியதும் எனத் தண்டனை மூவகைப்படும். மறம் ஒன்றே. அருள் தன் குடிகள்மீது கொண்டதும் பிறர் குடிகள்மீது கொண்டதும் என இருவகைப்படும் எனக் கூறுகின்றனர்.

நாட்டின் நிலப்பரப்பினை விரிவுபடுத்த வேண்டும் என்ற காரணத்திற்காகப் போர் செய்தனர் என்பதை,

**"எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்**
**அஞ்சு தகத் தலைச் சென்று அடல் குறித்தன்றே"[28]**

என்ற தொல்காப்பிய பொருளதிகாரம் கூறுகிறது.

**"வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்**
**போகம் வேண்டிப் பொதுச் சொற் பொறாஅ**
**இடம் சிறிது என்னும் ஊக்கம் துரப்ப"[29]**

என்ற புறநானூறு பாடல் பிற நாடுகளைக் காக்கும் மன்னர்கள் தத்தம் நாடு தமக்குரியது எனும் பொதுச்சொல்லை பொறாதவர்கள் என்றும் ; தன்னை எதிர்த்து நிற்பவருடன் போரிட்டு வென்று நாட்டைக் கைப்பற்றி தன் நாட்டை விரிவுபடுத்துபவர்கள் என்றும் கூறுகிறது. ஆண்மகன்கள் தன் நாட்டை விரிவுபடுத்துவதற்காக போரிட்டனர் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது. தன் புகழ் பேச வேண்டும் என்ற காரணத்திற்காகவும் சங்க காலத்தில் போரிட்டனர் என்பதை,

**"சிறப்புடை மரபில் பொருளும் இன்பமும்**
**அறத்து வழிப்படூ உந் தோற்றம் போல**
**இருகுடை பின்பட ஓங்கிய ஒரு குடை**
**உருகெழு மதியின் நிவந்து சேண் விளங்க**
**நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்**
**பாசறை அல்லது நீ ஒல்லாயே;"[30]**

எனக் கோவூர்கிழார் பாடுகிறார். சோழன் நலங்கிள்ளி அறத்தையே முதன்மையாகக் கருதுபவன். பொருளையும் இன்பத்தையும் பெரிதாக எண்ணாதவன். அதுபோலவே நலங்கிள்ளி வெண்கொற்றக் குடைக்குப் பின்னதாகவே சேர, பாண்டியர் குடை தோன்றும் (வென்ற அரசர்களின் குடைக்குப் பின் தோற்ற அரசர்களின் குடை பிடித்தல் மரபு) இவ்வுலகிற்கு நிலவானது வெளிச்சத்தினை தருவது போல நலங்கிள்ளியின்

புகழானது எல்லா இடங்களிலும் பரவிக் காணப்படுகின்றது என புறநானூறு சான்று பகர்கின்றது.

அரசர்கள் தங்கள் உரிமையைக் காத்துக் கொள்வதற்குப் போரிட்டனர். சோழர் குடியில் தோன்றிய நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் ஒரே குடியில் தோன்றிய போதிலும்கூட அரசு உரிமையின் காரணமாகத் தங்களுக்குள் பகை கொண்டு போர் செய்தனர். அது மட்டுமின்றி அரச உரிமைக்காகத் தந்தையை எதிர்த்தும் போரிட முனைந்தனர் என்பதை,

**“மண்டு அமர் அட்ட மதனுடைய நோன்தாள்**
**வெண்குடை விளக்கும், விறல்கெழு வேந்தே !**
**விதும்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே”[31]**

என வரும் புறநானூற்றுப் பாடலானது கோப்பெருஞ் சோழனிடம் புல்லாற்றூர் எயிற்றியனார் அரச உரிமைக்காக உன்னிடம் போர் செய்ய வந்தவர்கள் சேரரோ, பாண்டியரோ அல்லர். அவர்களுக்கு நீ பகைவனும் அல்ல. நற்பேரையும் புகழையும் இவ்வுலகில் நிலைநிறுத்தி உள்ள உனது ஆட்சி, உனக்குப் பின் அவர்களுக்குச் சொந்தமானது. அதனை நீயும் நன்கு அறிவாய் என்று கூறி உன்னிடம் போரிட வந்தவர்கள் உன் மகன்களே தமக்கு முறையே வரும் மன்னன் பதவியைத் துறந்து அளிப்பதற்கு முன்னே அரசுரிமையை பெறுவதற்காகப் போர் புரிந்துள்ளனர் என்பதைக் காண முடிகின்றது.

பெண் கேட்டு வந்த மன்னர்க்குத் தன் மகளை மணமுடித்துக் கொடுக்க மறுத்ததன் காரணமாகவும் பல போர்கள் நிகழ்ந்துள்ளன என்பதை,

**“தண்பனைக் கிழவன் இவன் தந்தையும் ; வேந்தரும்**
**பெறாஅ மையின் பேரமர் செய்தலின்”[32]**

இப் புறநானூறு பாடல் கூறுகின்றது. இத்தகைய போர்கள் புறத்திணை இலக்கியத்தில் மகட்பாற்காஞ்சி என அழைக்கப்படுகிறது. சங்க கால அரசர்கள் தன்னையும் தம் மானத்தையும் தம் புகழையும் காப்பதன் பொருட்டும் தாம் விரும்பும் பெண்ணை மணம் முடிக்க வேண்டும் என்ற காரணத்திற்காகவும் போர் செய்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

போரில் வீரமரணம் அடைவதற்காகவும் போர் செய்துள்ளனர் என்பதை,

**"பேரமர் வழந்த வெருவெரு பறந்தலை**

**விழுநவி பாய்ந்த மரத்தின்,**

**வாண் மிசைக் கிடந்த ஆண்மையோன் திறத்தே"[33]**

எனும் இப்புறநானூற்றுப் பாடல் யாரும் தன்னை நெருங்க முடியாத போர் வலிமையுடையவன் என்றும் போரின் முழவொலி கேட்டவுடன் வெற்றி வேட்கையுடன் போர்க் களத்திற்கு சென்றான் என்றும் போரிடும்போது அப் போர்க்களத்தில் பெரிய கோடாரியால் வெட்டுண்டு வீரமரணம் அடைந்தான் என்றும் கூறுகிறது.

காழ்ப்புணர்ச்சியின் காரணமாகவும் போர் தொடுத்தனர். பாரியின் வளத்தினை கண்டு பொறாமையின் காரணமாக அவர்மீது படையெடுத்தனர். அதைக் கண்ட கபிலர் நீங்கள் பாரியை வெற்றி கொள்ள நினைத்தீர்கள். ஆனால் அவருடன் போரிட்டு வெற்றி பெற முடியாது. அவரை புகழ்ந்து பாடியும் ஆடியும் ஒரு பரிசிலரைப் போல சென்றால் அவர் நாட்டையும் மலையையும் மனம் உவந்து தருவார் என்று கூறுகிறார். இதனைப் பாடும்போது,

**"கடந்தடு தானை மூவரும் கூடி**

**உடன்றனிர் ஆயினும் பறம்புகொளற்கு அரிதே"[34]**

என்கிறார். இவ்வாறு கபிலர் பாடுவதன்மூலம் பாரி யாராலும் வெற்றி பெற முடியாதவன் என்பது தெளிவாகிறது.

## வீரம்

சங்க காலத்தில் ஆடவர்கள் வீரத்தின் சிறப்பிடமாக விளங்கினர். அவர்களுடைய பழக்க வழக்கம் தொழில் விளையாட்டு முதலியவை போருக்குரிய காரணங்களாக விளங்கியது. வாள், வில், சக்கரம், சங்கு, கதை போன்ற ஐந்து படைக்களங்களின் உருவங்கள் அமைந்த ஐம்படைத்தாலியை பிள்ளைகளுக்கு அணிவித்தனர் என்பதை,

**"தாலி களைந்தன்றும் இலனே பால்விட்டு**

**அயினியும் இன்று அயின் நனனே"[35]**

இப்புறநானூறு பாடல் வழியாக அறிந்து கொள்ள முடிகிறது. மேலும்,

**"புலிபற் றாலிப் புன்றலைச் சிறா அர்"[36]**

எனும் புறநானூற்றுப் பாடல் வீரர்கள் வேட்டையாடிய புலியின் பற்களைக் கோர்த்து செய்த தாலியைக் கழுத்தில் சிறுவர்களுக்கு அணிவித்து அவர்களுக்குச் சிறுவயதிலேயே வீரத்தின் வலிமையினையும் சிறப்பினையும் உணர்த்தியுள்ளனர் என்பதை உணர்த்துகிறது.

சென்னியர் பெருமானாகிய சோழ அரசனுடைய நல்ல மரங்கள் நிறைந்த நாடுகள் பலவற்றையும் எனக்குத் தந்து பொன்னால் ஆகிய அணிகலன்கள் அணிந்தவரும் தன் கட்டளைக்கு அடிபணியாத கொள்கையுடைய சோழனை என்முன் கொண்டு வந்து சேர்க என இளஞ்சேரல் இரும்பொறை தன் படைத்தலைவரை ஏவினான். சேரன் படைத் தலைவரோடு போரிட்டு வெற்றி பெற்றான். அப்போர்க்களத்தில் சோழனின் படை வீரர்கள் களத்தே விட்டுச் சென்ற வேல்களின் அளவு, கபிலர் பரிசிலாகப் பெற்ற ஊர்களின் அளவைவிட அதிகமானது.

**“ஒன்னாப் பூட்கைச் சென்னியர் பெருமான்**
**இட்ட வெள்வேல் முத்தைத் தம் மென**
**நனவில் பாடிய நல்லிசைக்**
**கபிலன் பெற்ற ஊரினும் பலவே”**[37]

என்று பதிற்றுப் பத்து கூறுகின்றது.

வீரர்கள் பகைவரைக் கொன்று அவர் முரசங்களை கைக்கொள்ளுவர். இறந்த வீரர்களின் தலையைக் கொய்து அடுப்பாக்கி குருதி நீரை உலையில் ஊற்றி தசை, மூளை முதலியவற்றை உலையில் பெய்து, தோள்களை துடுப்பாக்கி, சமைத்து கள வேள்வி செய்தான் பாண்டிய நெடுஞ்செழியன் என மாங்குடிக்கிழார் பாடுகிறார். இதன்மூலம் பாண்டியன் வீரத்தன்மை உடையவன் என்று கூறுவது தெளிவாகிறது. தொண்டைமான் இளந்திரையன் போர் செய்யும் போர்க்களமானது பாரதப் போர்க்களம் போன்று காட்சியளித்தது. துரியோதனாதியர் நூற்றுவர், பாண்டவர் ஐவரோடு போர் செய்த இடம் போன்று தோன்றியது. அப்போர்க்களத்தில் இரத்தமானது ஆறுபோல ஓடியது, அந்த இரத்தமானது சிவந்த வானம் போல காட்சியளித்தது. அதில் யானையின் பிணங்கள் அசைந்து கொண்டிருப்பது மேகம் அசைவது போல காட்சியளித்தது. அவ் யானையின் தந்தம் சிவந்த வானத்தில் தோன்றும் பிறை போன்று இருந்தன. இவ்வாறு தொண்டைமான் போர் செய்த போர்க்களம் காட்சி அளித்தது. இதனை,

**“ஈர் ஐம்பதின் மரும், பொருது, களத்து அவிய,**
**பேர் அமர்க்கடந்த கொடுஞ்சி நெடுந்தேர்**
**ஆராச் செருவின் ஐவர் போல,**
**அடங்காத் தானையோடு உடன்றுமேல் வந்த**
**ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்து ஆர்த்து,**
**கச்சியோனே, கைவண் தோன்றல்”[38]**

என பெரும்பாணாற்றுப் படை கூறுகின்றது. தொண்டைமானுடன் போர் செய்த பகைவர்களும் வெற்றி பெற்றவர்களே ஆவர். அவனோடு போர் செய்த காரணத்தால் வீரமரணம் எய்திப் புகழ் பெற்றவர்களாக விளங்குகின்றார்கள் என்கிறார் மருதனார். இதனை,

**“ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை**
**நான்மறை முதல்வர் சுற்ற மாக**
**மன்னர் ஏவல் செய்ய மன்னிய**
**வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே !**
**நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு**
**மாற்றார் என்னும் பெயர் பெற்று**
**ஆற்றார் ஆயினும் ஆண்டு வாழ்வாரே”[39]**

உன்னால் பலர் போரில் வீரமரணம் அடைந்தனர் என்று குறிப்பால் உணர்த்தி பாண்டிய மன்னனின் வீரத்தைப் போற்றிக் கூறுகின்றார்.

இவ்வாறு ஒரு ஆண்மகனின் வீரப் பண்பினை எடுத்துக் கூறி அவ்வீரமகனின் பொதுமைப் பண்பும் பண்பாடும் எடுத்தியம்பப்பட்டது. இதன்மூலம் சங்ககால ஆடவரின் வீரப்பண்புகளை உணர்ந்து கொள்ள முடிகிறது.

**புகழ்**

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் பெரும் வள்ளல் என கேள்விப்பட்டு அவனைக் காண வந்த நச்செள்ளையார் அவரைப் புகழ்ந்து கூறுகிறார். விறலியர்கள் பாட அதனைக் கேட்டு இரவலர்களின் வறுமை நீங்கும்படி நாள்தோறும் பெருமைமிக்க அணிகலன்களை வழங்கும் தன்மை உடையாய், மற்றவர்களுக்கு நீ உதவும் குணமுடையதால் இவ்வுலகத்தில் இருந்து விண்ணுலகத்திற்கு செல்லாமல் இவ் நிலவுலகத்திலே நீண்ட காலம் வாழ்வாயாக எனப் புகழ்ந்து கூறுகின்றார். இதனை,

**“வள்ளியை என்றலின், காண்கு வந்திசினே ;**

**உள்ளியது முடித்தி ; வாழ்க, நின் கண்ணி,**

**ஒல்லார் யானை காணின்,**

**நில்லாத் தானை இறைகிழ வோயே !”[40]**

என பதிற்றுப்பத்து கூறுகின்றது. இவ்வாறு புலவர் பாடுவதன்மூலம் சேரனின் புகழை உணர முடிகிறது.

பிடரி மயிராலே அழகுபெற்று விளங்கும் கழுத்தினையும் நெடியதும் கூரியதுமான கால் நகங்களையும் உடைய சிங்கங்கள் இருக்கும் மலைச் சாரலில் கூட்டம் கூட்டமாக வாழும் மற்ற விலங்குகள் எல்லாம் பயந்து காட்டுக்குள் மறைந்து வாழுவதைப் போல முரசுகள் முழங்கும். பெரிய நகரங்களில் அரண்மனைக்குள் இருந்தாலும் நெடுஞ்சேரலாதனாகிய உன்னை எதிர்த்து எத்திசையில் உள்ள பகை மன்னர்களும் அமைதியாகப் பஞ்சனையில் படுத்தும் துயில் கொள்ளாது பயத்தால் நடுங்கி கொண்டிருந்தனர். அதற்குக் காரணம் உனது வீரம் செறிந்த வெற்றிப் புகழேயாகும் என்று கூறினார். இதனை,

**“தாரணி எருத்தின் வாரள வள்ளுகிர்**

**அரிமான் வழங்கும் சாரல் பிறமான்**

**தோடுகொள் இனநிரை நெஞ்சதிர்ந் தாங்கு**

**முரசமுழங்கு நெடுநகர் அரசுதுயில் ஈயாது**

**மாதிரம் பணிக்கும் மறம் வீங்குபல் புகழ்”[41]**

எனும் இப்பாடல் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வீரம் நிறைந்த புகழை எடுத்துரைக்கும் வண்ணம் அமைந்துள்ளது.

## கொடை

தன்னை நாடி வந்த பொருநருக்குக் கரிகாலன் மெய்யன்பு உடையவனாகவும் இன்முகத்தோடும் காணப்பட்டான். வறுமையில் வாடிய பொருநனை அழுக்கடைந்த ஆடையை நீக்கிப் பட்டாடை அணியச் செய்தான். அருகில் அமர வைத்து அறுசுவை உணவு வகைகளை உண்ணுமாறு கூறி விருந்தோம்பல் செய்தான். இதனை,

**“கொட்டைக் கரைய பட்டுஉடைநல்கிப்**

**பெறல் அருங்கலத்தில் பெட்டாங்கு உண்கஎனப்”[42]**

எனப் பொருநராற்றுப் படை கூறுகின்றது.

திரையன் தன்னை நாடி வந்த பாணர், புலவர் முதலியோரை வரவேற்று அவர்கள் அணிந்திருந்த கந்தை ஆடைகளை அகற்றி, பாலாவியைப் போன்ற நூலாற் செய்த வெண் துகில்களை அணியும்படி வழங்கினான். அரண்மனைச் சமையற்காரன் சமைத்த இறைச்சி உணவுகளையும் உயர்ந்த நெற்சோற்றையும் சர்க்கரை கலந்த உணவுப் பண்டங்களையும் வெள்ளிக் கலங்களில் படைத்தான். பாணர் முதலியோருடைய பிள்ளைகளுக்குச் சிறிய வெள்ளிக் கலங்களில் படைத்தான். தான் நின்று கொண்டே அவர்களை உபசரித்தான். அதன்பின்னர் பாணனுக்குப் பொற்பூவையும் விறலிக்குப் பொன்னாலான மாலையையும் வழங்கிச் சிறப்பித்தான். அவர்கள் குடும்பத்தாருடன் ஊருக்குச் செல்ல நான்கு குதிரைகள் பூட்டிய தேரினைப் பரிசாக வழங்கினான். பகைவர்கள் போர்க்களத்தில் விட்டுச் சென்ற குதிரைகளையும் அணிகலன்களையும் பரிசாகக் கொடுப்பான். இவை மட்டுமின்றி வேறு பரிசில்களையும் தருவான் என்பதை,

**“வளைகண் டன்ன வாலுளைப் புரவி**
**துணைபுணர் தொழில் நால்குடன் பூட்டி**
**அரித்தேர் நல்கியும் அமையான், செருத்தொலைத்து**
**ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்து ஒழித்த**
**விசும்புசெல் இவுளியொடு பசும்படைதரீஇ**
**அன்றே விடுக்கும் அவன் பரிசில்”[43]**

பெரும்பாணாற்றுப் படை உணர்த்துகிறது.

இளஞ்சேரல் தன்னை நாடி இரந்து பாடி வருவோர்க்குப் பொருள்களை அள்ளிப் பரிசாகக் கொடுக்கும் குணம் உடையவன். குறையாத செல்வம் உடையவன் என பெருங்குன்றூர்கிழார் இவனது கொடைத் திறனைப் பற்றிக் கூறுகின்றார். இதனை,

**“பாடிக் காண்கு வந்திசின் பெரும !**
**பாடுநர், கொளக்கொளக் குறையாச் செல்வத்துச் செற்றோர்”[44]**

என பதிற்றுப்பத்து பாடல் விளக்குகின்றது. இவ்வாறு புலவர்கள் பாடுவதன்மூலம் அரசர்களின் கொடைச்சிறப்பு தெள்ளிதின் புலனாகிறது.

## கடையெழு வள்ளல்களின் கொடைச் சிறப்பு

கடையெழு வள்ளல்கள் என அழைக்கப்படுபவர்கள்

1. பாரி,
2. திருமுடிக்காரி,
3. வல்வில் ஓரி,
4. பேகன்,
5. நள்ளி,
6. ஆய்,
7. அதியமான் போன்றோர் ஆவர்.

குறுநில மன்னர்களும் தானம் செய்வதில் தலை சிறந்தவர்களாக விளங்கினர் என்பதை சங்க இலக்கியப் பாடல்கள் உணர்த்துகின்றது. தன்னை நாடி வந்த இரவலர்க்கு உணவு, உடை, அணிகலன், யானை, குதிரை, தேர், நாடு போன்றவற்றைக் கொடுத்து மகிழ்வித்துள்ளனர்.

**"எழுவர் மாய்ந்த பின்றை அழிவரப்**
**பாடி வருநரும் பிறகும் கூடி**
**இரந்தோர் அற்றம் தீர்க்கென விரைந்திவண்**
**உள்ளி வந்தனென்"**[45]

என்னும் புறநானூற்று பாடலில் பெருஞ்சித்திரனார் வள்ளல்களின் இறப்பிற்கு பின்னர் குறுநில மன்னரையே நாடிச் செல்லும் இரவலர்களின் இயல்பைப் பாடியுள்ளார்.

### பாரி

பாரி முந்நூறு ஊர்களையுடைய 'பறம்பு' மலைக்கும் பறம்பு நாட்டிற்கும் தலைவனாக விளங்கினான். தன் கொடைத் திறத்தால் சிறந்து விளங்கினான் என்பதை,

**"முந்நூறு ஊர்த்தே தண் பறம்பு நல்நாடு"**[46]

இப் புறநானூறு பாடல் கூறுகின்றது.

பாரி தன் மலைப்பகுதியில் வேட்டைக்குச் சென்று திரும்பிய போது வழியில் அழகாகப் பூத்துக் குலுங்கிய ஒரு முல்லைக்கொடி படர்வதற்கு ஏற்ற கொம்புகள் இல்லாமல் காற்றால் அசைந்த கொடியைக் கண்டான். தன் தேர்மீது பட்டு அசையாது

இருந்ததைக் கண்ட அவன் அக்கொடி படருவதற்காகத் தன் தேரை அங்கேயே நிறுத்திச் சென்றான் என்பதை,

**“சிறுவீமுல்லைக்குப் பெருந்தேர் நல்கிய**

**பிறங்குவெள் ளருவி வீழஞ் சாரற்**

**பறம்பின் கோமான் பாரி”[47]**

என சிறுபாணாற்றுப் படை சிறப்பிக்கின்றது.

பாரி மாரியைப் போல கைமாறு கருதாது கொடுக்கும் கொடைத்தன்மை உடையவன் என்று பாரியிடம் பரிசு பெற்றவர்கள் அவனைச் சிறப்பித்தனர் என்பதை,

**“பாரி பாரி என்று பல ஏத்தி**

**ஒருவற் புகழ்வர், செந்நாப் புலவர்**

**பாரி ஒருவனும் அல்லன்,**

**மாரியும் உண்டு, ஈண்டு உலகு புரப்பதுவே”[48]**

என புறநானூறு கூறுகின்றது.

மூவேந்தர்களே நீங்கள் மூவரும் படையோடு வந்து போர் செய்தால்கூட பாரி நாட்டை கைப்பற்றல் முடியாது. ஏனெனில் குளிர்ச்சி பொருந்திய நன்னாடாகிய பறம்பு நாடு முந்நூறு ஊர்களையும் உடையது. அம்முந்நூறு ஊர்களையும் பரிசிலரே தானமாகப் பெற்றனர். எஞ்சி இருப்பது யாமும் பாரியும் உள்ளோம். அது மட்டுமின்றி பறம்பு மலையும் உண்டு என்கிறார் கபிலர்.

**“கடந்தடு தானை மூவிரும் கூடி**

**உடன்றனிர் ஆயினும் பறம்புகொளற்கு அரிதே**

**முந்நூறு ஊர்த்தே தண்பறம்பு நல்நாடு**

**முந்நூறு ஊரும் பரிசிலர் பெற்றனர் ;**

**யாமும் பாரியும் உளமே ;**

**குன்றும் உண்டு ; நீர் பாடினிர் செலினே”[49]**

பாரியின் கொடைச் சிறப்பினை இப் புறநானூற்றின் வாயிலாக எடுத்தியம்புகின்றார். இதன்மூலம் பாரியின் கொடைத் தன்மையை உணர முடிகிறது.

## காரி

மலையமான் திருமுடிக்காரி எனவும் மலையமான் எனவும் அழைக்கப் பெற்றவன் காரி. வீரக்கழலினையும் தொடியினையும் அணிந்தவன். வெண்மையான பிடரி மயிரினை உடைய குதிரைகளையும் தன் நாட்டையும் இவ்வுலகினர் வியக்கும்படி நன்மொழிகளைப் பேசிய இரவலர்க்குத் தானமாகக் கொடுத்தவன். நெருப்பு திகழ்ந்து ஒளிவிடும் அச்சம் தோன்றுகின்ற நீண்ட வேலினையும் போருக்கு எப்பொழுதும் தயாராக இருக்கும் வீரக்கழலையும் அணிந்திருப்பவன் ஆவான் என்று,

**“………… கறங்குமணி**
**வாலுளைப் புரவியொடு வையகம் மருள**
**ஈர நன்மொழி இரவலர்க்கு ஈந்த**
**அழல்திகழ்ந்து இமைக்கும் அஞ்சுவரு நெடுவேல்**
**கழல்தெடித் தடக்கைக் காரியும்”[50]**

என காரியின் சிறப்பைப் புகழ்கின்றது.

வள்ளல் குணம் படைத்த காரி இரவலர்களுக்குப் பொன் அணிகலன் அணிந்த நெடுந்தேரினைக் கொடையாக வழங்கினான். அவ்வாறு வழங்கிய தேர்கள் பயன் பொருந்திய முள்ளூர் மலை உச்சியின் கண் பெய்த மழைத்துளியின் அளவைவிட பலவாகும் என்பதை,

**“நாட்கள் உண்டு நாள்மகிழ் மகிழின்**
**யார்க்கும் எளிதே ; தேர் ஈதல்லே ;**
**தொலையா நல்லிசை விளங்கு மலையன்**
**மகிழாது ஈத்த இழையணி நெடுந்தேர்**
**பயன்கெழு முள்ளூர் மீமிசைப்**
**பட்ட மாரி உறையினும் பலவே”[51]**

இப் புறநானூறு பாடல்வழி அறிய முடிகின்றது. காரியின் கொடைச்சிறப்பை இப்பாடல் வரிகள் வழி அறிய இயலுகிறது.

## வல்வில் ஓரி

கொல்லி மலைக்கு அரசனாகத் திகழ்ந்தவன் ஓரி மன்னன். அம்மலையைச் சுற்றி அமைந்த சிறுநாட்டை ஆண்டு வந்தான். வில்லாற்றலில் சிறந்தவதன். இவன் எய்தும் அம்பானது யானையைக் கொன்று வீழ்த்தி, புலியின் அகன்ற வாயில் ஊடுருவிச் சென்று இறக்கச் செய்து, பின் துளை பொருந்திய கொம்பையுடைய புள்ளிமானையும் வீழ்த்தும் தன்மை உடையது. அதுமட்டுமன்று உரல் போலும் தலைமையுடைய பன்றியை வீழ்த்தி அதன் பக்கத்தில் உள்ள புற்றில் உள்ள உடும்பையும் வீழ்த்தியது என்று ஓரியின் வில் சிறப்பை

**“வேழம் வீழ்த்த விழுத் தொடைப் பகழி**
**பேழ்வாய் உழுவையைப் பெரும் பிறிது உறீஇப்**
**புழல்தலைப் புகர்க்கலை உருட்டி, உரல்தலைக்**
**கேழற் பன்றி வீழ, அயலது**
**அழற் புற்றத்து உடும்பில் செற்றும்**
**வல்வில் வேட்டம் வலம்படுத்திருந்தோன்”[52]**

இப் புறநானூறு பாடல் கூறுகின்றது.

பூக்கள் நிறைந்த சுரபுன்னை மரங்களும் சிறு மலைகளையும் உடைய நல்ல நாட்டினைக் கூத்தாடுவோர்க்குக் கொடுத்தவன் ஓரி என்பதை,

**“குறும் பொறை நன்னாடு கோடியர்க்கு ஈந்த**
**காரிக்குதிரைக் காரியொடு மலைந்த”[53]**

இச்சிறுபாணாற்றுப் படை கூறுகின்றது.

ஓரியின் சிறப்புகளை வன்பரணர்,

**“மழையணி குன்றத்துக் கிழவன், நாளும்,**
**இழையணி யானை இரப்போர்க்கு ஈயும்**
**சுடர்விடு பசும்பூண், சூர்ப்பு அமை முன்கை**
**அடுபோர் ஆனா, ஆதன் ஓரி**
**மாரி வண்கொடை காணிய நன்றும்**
**சென்றது மன்எம் கண்ணுளங் கடும்பே ;**
**பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை**

**வால்நார்த் தொடுத்த கண்ணியும், கலனும்,**

**யானை இனத்தொடு பெற்றனர் ; நீங்கிப்**

**பசியார் ஆகல்மாறுகொல் ; விசிபிணிக்**

**கூடுகொள் இன்னியம் கறங்க,**

**ஆடலும் ஒல்லார், தம் பாடலும் மறந்தே"[54]**

எனப் புறநானூற்றில் குறிப்பிட்டுள்ளார்.

முகில் சூழ்ந்த மலைக்குத் தலைவன். நாள்தோறும் யானைகளை இரவோர்க்கு வழங்குபவன். சுடர் விடுகின்ற பசும் பொன்னால் செய்த பூணூலையும் கடகம் அணிந்த முன் கையினையும் உடையவன். கொல்லும் போரைச் செய்யும் தலைவன் என்று கூறுகிறார். அத்தகைய தன்மையுடைய ஓரியின் மழைபோலும் வண்கொடையைக் காண்பதற்காக ஒருமுறை வன்பரணரும் அவருடைய கூத்தர் சுற்றமும் காணச் சென்றபோது, ஓரி தன்னை நாடிவ வந்த இரவலர்களுக்கு நீரில் பூக்காத குவளைப் பூவையும் வெள்ளிக் கம்பியால் தொடுக்கப்பட்ட பொன்மாலையும் பிற அணிகளையும் யானைகளுடன் கொடுத்தான். பரிசில் பெற்றதோடு பசியும் தீர்த்தான். ஆகையால் அவர்களின் தொழிலாகிய பாடுதலையும் ஆடுதலையும் மறந்தனர் என்று கூறுகிறார் புலவர்.

## பேகன்

மலைகள் நிறைந்த நாட்டை உடையவன். அவனது மலையில் பருவமழை தவறாது பெய்ததால் வளம் மிகுந்து காணப்பட்டது. பொதினி என்ற பெயருடைய பழனி மலையானது இவனுடைய நாடாகும்.

பரிசில் பெற்ற பாணன் ஒருவன், வழியில் சந்தித்த மற்றொரு பாணனிடம் பேகனின் கொடைச் சிறப்பைக் கூறி யாமும் உன்னைப் போலவே வறுமையில் இருந்தோம், பேகனைப் பார்ப்பதற்கு முன். இப்போது முற்றிலும் வறுமையில் இருந்து விடுபட்டு விட்டோம். எப்பொழுதும் மயிலானது போர்வையைப் போர்த்திக் கொள்ளாது எனத் தெரிந்தும், மயிலுக்கு போர்வை தந்தவன். அவன் அளவில்லாமல் கொடுப்பது மறுமைப் பயன் நோக்கியது அன்று, அவனது வள்ளல் தன்மை ஆகும் என்று கூறுகிறான். இதனைப் புறநானூறு

**“உடா அ போரா ஆகுதல் அறிந்தும்**
**படா அ மஞ்ஞைக்கு ஈத்த எம்கோ**
**கடா அ யானைக் கலிமான் பேகன்**
**எத்துணை ஆயினும் ஈத்தல் நன்றென**
**மறுமை நோக்கின்றோ அன்றே**
**பிறர், வறுமை நோக்கின்று அவன் கைவண் மையே”[55]**

கூறுகிறது. மேலும்,

பேகன் ஒருநாள் சோலையின் வழியில் வரும்பொழுது மழை பெய்வதற்கான அறிகுறியை கண்டு அகவி ஆடிய மயில் குளிரால் நடுங்குகிறது என எண்ணி தான் போர்த்தியிருந்த போர்வையை மயிலுக்குப் போர்த்திவிட்டான் என்பதைச் சிறுபாணாற்றுப் படை

**“கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய**
**அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்**
**பெடுங்கடல் நாடன் பேகினும்”[56]**

எனப் பாடுகிறது. பேகனின் கொடைத் தன்மையைச் சிறப்பித்துக் கூறுகின்றது. செவ்வியல் கூறுகளுள் ஒன்றான கொடைத்தன்மை பேகனிடம் நிறைந்திருப்பதை நம்மால் உணர முடிகிறது.

## நள்ளி

நள்ளி தன்னை நாடிவரும் இரவலர்களுக்கு அவர்களின் இல்லத்திற்குத் தேவையான பொருட்களைக் குறிப்பறிந்து வழங்குபவன் தன்னிடம் பொருள் பெற்று மற்றொருவரிடமும் சென்று பொருள் பெற வேண்டும் என நினைக்காத அளவிற்கு அதிகப் பொருளை இரவலர்களுக்குக் கொடுப்பவன். இவ்வாறு வலக்கையால் கொடுக்கும் தானம் இடக்கை அறியாது வளங்கிய நள்ளியின் வள்ளல் தன்மையை,

**“முட்டாது கொடுத்த முனை விளங்கு தடக்கை**
**துளிமழை பொழியும் வளி துஞ்சு நெடுங்கோட்டு**
**நளிமலை நாடன் நள்ளி”[57]**

என்று நத்தத்தனார் சிறுபாணாற்றுப் படையில் புகழ்ந்து பாடியுள்ளார்.

மேலும், வன்பரணர் நள்ளியின் கொடைத் தன்மையைக் கூறும்பொழுது, நள்ளி பாணர்களுக்கு வேண்டியதை வேண்டும் நேரத்தில் கொடுப்பதால் அவர்கள் மகிழ்ந்து தம் தொழிலையே மறக்கும் நிலைக்கு ஆளானார்கள் என்றும், காலையில் பாட வேண்டிய மருதப் பண்ணை மாலையிலும், மாலையில் பாட வேண்டிய செவ்வழிப் பண்ணை காலையிலும் பாடினர் என்றும் கூறுகின்றார். இதனை,

**“நள்ளி வாழியோ, நள்ளி நள்ளென்**
**மாலை மருதம் பண்ணி, காலை**
**கைவழி மருங்கின் செவ்வழி பண்ணி**
**வரவு எமர் மறந்தனர் ; அது நீ**
**புரவக் கடன் பூண்ட வண்மையானே”[58]**

எனப் புறநானூறு கூறுகின்றது. இப்பாடல்கள் வழி நள்ளியினுடைய கொடைத் தன்மையினை அறிந்து கொள்ள முடிகின்றது.

## ஆய் அண்டிரன்

மகிழ்வோடு நாகம் ஈன்ற நீலமணியையும் ஆடையையும் ஆலமர் செல்வனாகிய சிவபெருமானுக்கு விரும்பிக் கொடுத்தவன். வில்லைத் தோளில் தாங்கியவனும் சந்தனம் பூசிய திண்மையான தோள்களை உடையவனும் இனிய நற்சொற்களைப் பேசி இரவலர்களைப் பேணுபவனும் ஆவான்.

**“நீல நாகம் நல்கிய கலிங்கம்**
**ஆலமர் செல்வதற்கு அமர்ந்தனன் கொடுத்த**
**சாவம் தாங்கிய சாந்துபுலர் திணிதோள்**
**ஆர்வ நன்மொழி ஆயும்”[59]**

என ஆய் அண்டிரனின் சிறப்பைச் சிறுபாணாற்றுப்படை கூறுகிறது.

போரிடக் கருதும் பகை மன்னர்க்கு அறிவுறுத்தும் தன்மையில் அமைந்துள்ளது இப்பாடல். பழமையான நாட்டையுடைய ஆய் அண்டிரனை ஆடச்செல்லும் விறலியர் போகலாமே அன்றிப் பெருமை பொருந்திய மன்னர் எவரும் செல்லுதல் முடியாது என்பதை,

**“கழல்தொடி ஆ அய் மழைதவழ் பொதியில்**
**ஆடுமகள் குறுகின் அல்லது**

**பீடுகெழு மன்னர் குறுகலோ அரிதே''[60]**

இப்புறநானூறு பாடல் கூறுகின்றது.

பலா மரங்கள் நிறைந்த மலைக்குத் தலைவன் ஆய் அண்டிரன் ஆவான். அவன் இரவலர்களுக்கும் அதிக எண்ணிக்கையில் யானைகளைக் கொடுத்தான் என்பது வானத்தில் இருக்கும் விண்மீன்களின் தொகையைவிட அவன் பரிசாக தந்த யானைகளின் எண்ணிக்கை மிகுதியாகும் என,

**''ஆ அய் அண்டிரன் அடுபோர் அண்ணல்**
**இரவலர்க்கு ஈத்த யானையின் கரவின்று**
**வானம் மின்பல பூப்பின் ஆனது''[61]**

இப் புறநானூறு பாடல் சான்று பகர்கின்றது. இவ்வாறாக ஆய் அண்டிரன் கொடைத் தன்மையில் சிறந்து விளங்கினான் என்பது தெள்ளிதின் புலனாகிறது.

## அதியமான்

அதியமான் நெடுமான் அஞ்சி என்னும் வள்ளல் கொங்கு நாட்டில் தகடூர் என்னும் ஊரினை ஆட்சி புரிந்தான். தகடூர் வரும் பகையரசர்கள் நெருங்க முடியாத வண்ணம் வீரர் பலர் வில்லேந்தி காவல் காக்கும் இயல்பை உடையதாகும். அந்நகருள் அரசன் புகழைப் பாடும் இரவலர்கள் நுழையலாமே தவிர, பகை மன்னர்கள் நுழைய முடியாத வண்ணம் காவல் மிகுந்து காணப்பட்டது என்பர். இதனை,

**''பல்பயன் நிலை இய கடறுடை வைப்பின்**
**வெல்போர் ஆடவர் மறம்புரிந்து காக்கும்**
**வில்பயில் இறும்பின் தகடூர்''[62]**

என பதிற்றுப் பத்து கூறுகின்றது. மேலும்

**''ஆர்வலர் குறுகி னல்லது காவலர்**
**கனவிலும் குறுகாக் கடியுடை வியனகர்''[63]**

என புறநானூறும் நாட்டில் காவல் மிகுதியைப் பற்றிக் கூறிச் சிறப்பிக்கின்றது.

அதியமான் மலைகளில் கிடைத்தற்கரிய நெல்லிக் கனியைப் பெறுகிறான். அந்நெல்லிக் கனியை உண்பவர் நீண்டநாள் உயிர் வாழ முடியும். அப்படிப்பட்ட கனியை பெற்ற அவன் தான் உண்ணாது ஔவைக்குக் கொடுக்கிறான். ஏன் என்றால் தான் இறந்தால் அந்த இடத்திற்கு இன்னொருவர் அரசனாக வரமுடியும். ஆனால் ஔவை

போன்ற சான்றோர் இறந்தால் இந்நாடு அவரைப் போல பெறுவது கடினம் என்பதை உணர்ந்து அக்கனியை ஔவையிடம் கொடுக்கிறான். அதை பெற்ற ஔவையார்,

**“பெரு மலை விடர் அகத் தருமிசைக் கொண்ட**
**சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது**
**ஆதல் நின்னகத்து அடக்கிச்**
**சாதல் நீங்க, எமக்கு ஈத்தனையே”[64]**

என அதியமானைப் புகழ்ந்து பாடுகிறார். மேலும்

**“............. மால்வரைக்**
**கமழ் பூஞ்சாரல் கவினிய நெல்லி**
**அமிழ்துவிளை தீங்கனி ஔவைக்கு ஈந்த**
**உரவுச்சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்**
**அரவக்கடல் தானை அதிகன்”[65]**

என்ற பகுதியில் நல்லூர் நத்தத்தனார் பெரிய மலையில் கிடைத்த அழகிய கருநெல்லி என்னும் அமிழ்தினை ஒத்த அக்கனியினைத் தான் உண்டு நெடுநாள் வாழ வேண்டும் என விரும்பாமல் ஔவைக்குக் கொடுத்தவன் அதியமான் எனப் புகழ்ந்து பாடுகிறார்.

அதியமானிடம் செல்லக் கூடிய விருந்தினர் ஒருநாள் அன்று, இருநாள் அன்று பல நாட்கள் அவரோடு இருப்பினும் முதல்நாள் எவ்வாறு விருந்து உபசரித்தானோ அதே போல் தான் மற்ற எல்லா நாட்களும் உபசரிப்பான் என்பர். பரிசில் தரக் காலம் தாழ்த்தினாலும் பரிசில் கொடுப்பது நிச்சயம். அப்பரிசில் யானையினது கோட்டிடை வைத்த கவளம் எவ்வாறு யானையின் வாயில் இருந்து தப்பாதோ அதுபோல அதியன் பரிசு தருவதும் தப்பாது என்கிறார் ஔவையார். இதனை,

**“ஒருநாள் செல்லலம் ; இருநாள் செல்லலம் ;**
**பலநாள் பயின்று பலரொடு செல்லினும்**
**தலைநாள் போன்ற விருப்பினன் மாதே ;**
**அணிபூண் அணிந்த யானை இயல்தேர்**
**அதியமான் பரிசில் பெறூஉங் காலம்**
**நீட்டினும் நீட்டா தாயினும் யானைதன்**
**கோட்டிடை வைத்த கவளம் போலக்**
**கையகத் தது அது பொய்யா காதே ;**

**அருந்த ஏமாந்த நெஞ்சம்**

**வருந்த வேண்டா வாழ்கஅவன் தாளே"[66]**

என புறநானூறு பாடல் கூறுகின்றது. இதன்மூலம் தமிழரின் புகழ்மிக்க பண்பான விருந்தோம்பல் பண்பையும் கொடைத் தன்மையும் உடையவனாக அதியமான் இருந்ததை உணர முடிகிறது. இத்தகைய செவ்வியல் பண்புகளைப் பெற்று அக்கால அரசர்கள் சிறந்து விளங்கியதையும் அறிய முடிகிறது.

## அறநெறிப் போர்முறை

பண்டைக்காலச் சமூக அரசியல் நிகழ்வுகளைக் காணும் போது போர் என்பது இன்றியமையாத ஒன்றாக இருந்தது. போரினால் நாட்டிற்கு பெரும் இழப்பு உண்டானது. ஆனால் பொதுமக்களுக்கு உடைமைகள் மட்டுமே பறிபோயிருக்கின்றன. உயிர் இழப்புகள் ஏற்பட்டதாகச் செய்திகள் இல்லை. போர் முறையில் இருந்தவர் மட்டுமே உயிர் இழந்துள்ளனர். போருக்குத் தகுதியற்றவர், போரினை விரும்பாத மக்கள் பாதுகாப்பாக வேறு இடத்திற்குச் சென்றுள்ளனர். அதனால் போரின்போது பொருள் சேதம் மட்டுமே ஏற்பட்டது.

அரசர்கள் பகைநாட்டை முற்றுகையிடும்போது அந்நாட்டில் உள்ள மக்கள் உயிர் இழக்கக் கூடாது என்ற மனித நேயப் பண்புடன் செயல்படுவதே அறநெறிப்போர் ஆகும். ஒருநாட்டின் மீது போர் தொடுக்க விரும்பும் அரசர், ஆநிரைகளையும் அந்தணர்களையும் புதல்வர்களை ஈன்று தருகின்ற பெண்களையும் நோய்வாய்ப்பட்டோரையும் இறந்துபட்ட முன்னோர்களுக்குச் சடங்குகள் செய்யும் ஆண் மக்களைப் பெறாதவர்களையும் வெளியேறுமாறு முரசு அறிவித்தனர். இதனை

**"ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்**

**பெண்டீரும் பிணியுடையீரும் பேணித்**

**தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**

**பொன் போல் புதல்வர்ப் பெறா அதீரும்**

**எம் அன்பு விடுதும் நும் அரண் சேர்மின் என"[67]**

எனப் புறநானூறு பாடல் கூறுகின்றது. மேலும்

**“பார்ப்பா ரறவோர் பசுப்பத்தினிப் பெண்டிர்**

**மூத்தோர் குழவி யெனும் மிவரைக் கைவிட்டுத்**

**தீத்திறந்தோர் பக்கமே சேர்க”[68]**

எனச் சிலப்பதிகாரம் இதனைக் குறிப்பிட்டுள்ளது. பாதுகாப்பிற்கு உரியவற்றுள் ஆநிரையை முதன்மையாகப் புறநானூறு கூறுகின்றது.

போரின்போது இரு தரப்பினரும் சரிக்குச் சரியான ஆற்றல், வலிமை பெற்றவர்களாக இருக்க வேண்டும். தன்னைவிட வலிமையை குறைந்தவர்களிடம் போர் புரியக் கூடாது என்ற உயர்ந்த கொள்கையை உடையவராக இருந்தனர். அரசர்கள் ‘எறியார் எறிதல் யாவனது எறிந்தோர் எதிர் சென்று எறிதலும் செல்லான்’ (புறம், **37)** எனக் கூறுவதை காண முடிகின்றது. தமிழ் வேந்தர்கள் கொடை அளித்தலில் மடமை உடையவர் ஆயினும் போரில் தன்னையொத்த வீரருடன் போரிடுவார்களே தவிர தனக்கு தகுதியில்லாத வீரர் அல்லாதவர், புண்பட்டோர், இளையோர், மூத்தோர் ஆகியோருடன் போரிட மாட்டார்கள் என்பதை,

**“கொடை மடம் படுதல் அல்லது,**

**படை மடம் படான்பிறர் படைமயக் குறினே”[69]**

எனப் புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது.

சங்க கால மன்னர்கள் தம் உயிரைவிட, தன் மானத்தையே பெரிதும் போற்றி வந்தனர். எந்த சூழ்நிலையிலும் தன்னிலை தாழ்ந்து போகாத வண்ணமும் அப்படி தாழ்வுற்றால் தன் உயிரை மாய்த்து கொள்வதுமே விரும்பினர். சேரமான் கணைக்கால் இரும்பொறைக்கும் சோழன் செங்கணானுக்கும் கழுமலத்தை அடுத்த ‘திருப்போர்புறம்’ என்னும் இடத்தில் போர் நடைபெற்றது. இதில் இரும்பொறை தோல்வியுற்றதால் அவரைச் செங்கணான் சிறையில் அடைத்தான். அப்போது அவருக்குத் தாகம் ஏற்பட்டது. காவலரிடம் நீர் கேட்டார். அவர் காலம் தாழ்த்தி நீரைத் தந்தார். அதனால் அந்நீரைப் பருகுவது மானமுடையவரின் செயல் ஆகாது என்பதை உணர்ந்த கணைக்கால் இரும்பொறை தன் உயிரைவிடத் தன் மானமே பெரியது என உயிர் துறந்தான் என்பதை,

**“தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து இரீஇய**

**கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்**

**மதுகை யின்றி வயிற்றுத் தீ தணியத்**

**தாம் இரந்து உண்ணும் அளவே**

**ஈன்ம ரேஇவ் வுலகத் தானே"[70]**

இப் புறநானூறு பாடல் விளக்குகிறது.

ஒருமுறை சேரமான் பெருஞ்சேரலாதனுக்கும் சோழன் கரிகால் பெருவளத்தானுக்கும் 'வெண்ணி' என்ற இடத்தில் போர் நடைபெற்றது. அப்போது சேரலாதன் மார்பிலே கரிகால் பெருவளத்தான் எறிந்த வேல் அவன் உடலுள் ஊடுருவி முதுகு வழியாகச் சென்றது. நேருக்கு நேர் நின்று போர் செய்த மான உணர்வுமிக்க சேரலாதன் தன் உடலில் ஏற்பட்ட அந்த புண்ணை புறமுதுகிட்டு ஓடியதற்கு அடையாளமான புண்ணாகக் கருதி தன் மானம் கருதி உயிர் வாழ விரும்பாமல் வடக்கிருந்து உயிர் நீத்தார் என்பதை,

**"தன்போல் வேந்தன் முன்பு குறித்து எறிந்த**

**புறப்புண் நாணி மறத்தகை மன்னன்**

**வாள்வடக்கு இருந்தனன் ; ஈங்கு"[71]**

இப் புறநானூற்றுச் செய்யுள் விளக்கம் பகர்கிறது.

போரில் வெற்றி பெற்ற அரசன் பகைவருடைய நாட்டை தன் நாடு போலவே கருதி, அந்நாட்டில் போரினால் ஏற்பட்ட சேதங்களைச் சீர்ப்படுத்தி மேம்படுத்தினான் என்பதை,

**"அகநாடு புக்கு அவர் அருப்பம் வெளவி**

**யாண்டுபல கழிய வேண்டுபுலத்து இறுத்து**

**மேம்பட மரீஇய வெல்போர்க் குருசில்"[72]**

என மதுரைக் காஞ்சியில் தலையானங்கானத்துச் செருவென்ற பாண்டிய நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் வாழ்த்திக் கூறுவதால் அறிய முடிகிறது.

புறமுதுகு காட்டி ஓடும் வீரர்களின்மீது அம்பு தொடுக்கக் கூடாது என்பது அக்கால வீரர்களின் போர்க் கொள்கையாக இருந்தது.

**"தனக்கு இரிந்தானைப் பெயர் புறம் நகுமே"[73]**

எனும் புறநானூற்று பாடல் வரி தனக்கு பயந்து ஓடியவர்மீது படைக்கருவிகள் எறியாமல் அவன் புறமுதுகிட்டு ஓடுவதைக் கண்டு ஒரு வீரன் நகைத்தான் என்பதை ஓரம் போகியார் என்னும் புலவர் கூறுகின்றார். மேலும்,

**“உடை இட்டார் புல்மேய்வார் ஓடுநீர்புக்கார்**
**படைஇட்டார் பற்றேதும் இன்றி நடையிட்டார்**
**இவ்வகை ஐவரையும் என்றும் அணுகாரே**
**செவ்வகைச் சேவகர் சென்று”[74]**

போரிடுவதற்கு அஞ்சி ஆடை நெகிழவிட்டவர்களையும் புல் மேய்வாரைப் போல் குப்புறப்படுத்து இருப்பவர்களையும் ஓடும் நீரில் விழுந்தோரையும் படையிழந்தவர் களையும் தனியே அஞ்சி ஓடுவோரையும் கொல்வதில்லை என்ற உறுதிப் பண்பு உடையவர்களாக அக்கால அரசர்களும் வீரர்களும் விளங்கினர் என சிறுபாணாற்றுப் படை கூறுகின்றது. இதன்மூலம் அக்கால அரசர்கள் செவ்வியல் பண்புகளில் ஒன்றான அறநெறிப் போர் முறையைத் தவறாது கடைபிடித்தனர் என்பது தெளிவாகிறது.

## புலவர்களின் சிறப்பியல்புகள்

சங்க இலக்கியப் பாடல்களை ஆண்பாற் புலவர்களும் பெண்பாற் புலவர்களும் பாடியுள்ளனர். இவர்கள் கல்வியில் சிறந்தவர்களாக விளங்கினர். இவர்கள் பல நாடுகளுக்குச் சென்று தன் கவித்திறனை வெளிப்படுத்துவர். புலவர்கள் அவ்வாறு பாடும் போது மன்னனிடம் பரிசு பெற வேண்டும் என்ற நோக்குடன் மட்டும் பாடவில்லை. தன் பாடலின்மூலம் நற்கருத்துக்களையும் மன்னனின் அறம் தவறாமையும் மன்னன் தவறு செய்தால் தவறை திருத்திக் கொள்ளும் வகையிலும் உலக மக்களை அறநெறியில் செல்லுமாறும் போன்ற பல கருத்தை உள்ளடக்கியவாறு பாடல்களைப் பாடினர்.

மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும் அறிவைப் பெற வேண்டும். அவ்வாறு பெற்ற அறிவை மற்றவர்களுக்கு அளித்தல் வேண்டும். அப்பொழுதுதான் தான் பெற்ற அறிவானது சிறக்கும் என்பதை,

**“அறிவு என்னும் ஒன்றே மக்கட் பிறப்பின் சிறப்பியல்பு. மக்களாய்ப் பிறந்தவர் அறிவைத் தேடி உழைத்தல் வேண்டும். அறிவை பிறர்க்கு அளித்தல் வேண்டும். அறிவின் பயனால் இன்புறல் வேண்டும். இதுவே மக்களின் வாழ்வு. இவ்வாழ்வில் சீர்பெற வாழ்பவரே புலவர் பெருமக்கள்”[75]** என்று மு.வரதராசனார் கூறுகின்றார். இக்கூற்றிற்கு ஏற்பவே சங்ககாலப் புலவர்கள் செயல்பட்டனர் என்பதை பாடல்களால் அறிய முடிகிறது.

## புலவர்களின் தன் மான உணர்வு

புலவர்கள் அரசர்களைச் சந்திக்கச் செல்வதும் அவர் தரும் பரிசினைப் பெற்றுக் கொள்வதும் வழக்கமாக இருந்தது. மன்னர்களிடம் புலவர்கள் பரிசில் பெறுவதற்காகப் போகும்போது மன்னர்கள் புலவரைக் காத்திருக்கச் சொன்னாலோ குறைவாகப் பொருளைக் கொடுத்தாலோ அதனை வாங்க மறுப்பர்.

பெருஞ்சித்திரனார் என்னும் புலவர் இளவெளிமான் என்னும் அரசனிடம் பரிசு பெற விளைந்தார். அப்பொழுது அவன் இவருக்குச் சிறிதளவு பொருளைக் கொடுத்தார். அப்போது பெருஞ்சித்திரனார் தான் வறுமை நிலையில் இருந்தாலும்கூட பொருட்படுத்தாது அதை ஏற்க மறுத்துவிட்டார். பின்பு குமண வள்ளலிடம் சென்று பாடிப் பரிசாக யானையும் பொன்னும் பெற்றார். தன் வரவை எதிர்பார்த்துப் பசியால் வாடியிருக்கும் குடும்பத்தை எண்ணிப் பாராது பரிசில் பெற்று இளவெளிமானின் நாட்டிற்குச் சென்று அவனுடைய காவல் மரத்தில் தான் பரிசாகப் பெற்ற யானையைக் கட்டி இரப்போர்க்கு ஈபவன் நீ ஒருவன் மட்டுமே அல்ல. மற்ற மன்னர்களும் இரவலர்க்கும் ஈயும் தன்மை கொண்டவர்களாக உள்ளனர் என்பதை நீ உணர்வாயாக. நீ பரிசுப் பொருளைக் கொடுக்காவிட்டாலும் இரவலர்கள் இவ்வுலகில் வாழ்வார்கள் என்று கூறி உன் காவல் மரத்தில் நான் பெற்ற யானையைக் கட்டியுள்ளேன். அதுவே உனக்கு நான் தரும் பரிசு என்று கூறி தன்னுடைய தன்மான உணர்வை வெளிப்படுத்தினார். இதை,

**“இரவலர் புரவலை நீயும் அல்லை !**
**புரவலர் இரவலர்க்கு இல்லையும் அல்லர் ;**
**இரவலர் உண்மையும் காண், இனி ; இரவலர்க்கு**
**ஈவோர் உண்மையும் காண், இனி ; நின் ஊர்தி**
**கடிமரம் வருந்தத் தந்துயாம் பிணித்த**
**நெடுநல் யானை எம்பரிசில்**
**கடுமான் தோன்றல் ! செல்வில் யானே”**[76]

என இப்புறநானூறு பாடல் கூறுகின்றது. பெருஞ்சித்திரனாரின் செயல்மூலம் சங்கப் புலவர்கள் மானத்தை உயிராக மதித்தனர் என்பது தெளிவாகிறது.

மன்னர்கள் தன்னை நாடிவரும் புலவர்க்கு, அவரவர் தகுதியறிந்து பரிசில் நல்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பும் அக்காலத்தில் இருந்தது என்பதை,

**"காணாது ஈத்த இப்பொருட்கு யானோர்**
**வாணிகப் பரிசிலன் அல்லேன் ; பேணித்**
**திணை அணைத்து ஆயினும், இனிது அவர்**
**துணை அளவு அறிந்து, நல்கினர் விடினே"[77]**

என்னைக் காணாது எனக்கு கொடுத்த பரிசினை நான் பெறுவது, என் கல்விக்கும் புலமைக்கும் இழுக்கு என்று பெருஞ்சித்திரனார் கூறினார். அக மலர்ச்சியோடு சிறிய குன்றி மணியளவாக இருப்பினும் அதனை மிகுந்த மகிழ்ச்சியோடு பெறுவர். இல்லையேல் எவ்வளவு விலையுயர்ந்த பொருளை கொடுத்தாலும் வாங்க மறுப்பர்.

**"தமக்குப் பரிசில் தரும் காலத்தை நீட்டித்தாலும், தம்மை நேரில் காணாமல் பரிசில் தந்தனுப்பினாலும் தம் தகுதிக் குறைவுண்டாகக் கொடுத்தாலும் அவற்றைத் தம் மதிப்புக்குக் குறைவு தரும் செயல்களெனக் கருதிப் புலவர்கள் புறக்கணித்தார். வறுமையைக் காரணம் காட்டி வாழ நினைத்ததில்லை. முகமன் பல மொழிந்தும் இழிவுற்று வாழ்வதை அவர்களில் யாரும் ஏற்கவில்லை. அதனால்தான் 'பிறர்க்குத் தீதறியா வாழ்வு' எனக் கோவூர்கிழார் பரிசில் வாழ்க்கையைப் போற்றிப் புகழ்ந்தார்"[78]** என்பதை அறிய முடிகிறது.

## பிறர் நலம் பேணுதல்

புலவர்கள் தன் நலம் கருதாது பிறர் நலம் பேணும் பண்புடையவராகக் காணப்பட்டனர். புலவர்கள் தான் மன்னரிடம் பெற்ற பரிசுப் பொருட்களைத் தான் மட்டும் அனுபவிக்காமல் தன்னை நாடி வரும் இரவலர்க்கும் கொடுத்து உதவும் பண்பாளராக விளங்கினார். இதனை,

**"இன்னோர்க்கு என்னாது என்னோடும் சூழாது**
**வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்**
**எல்லோர்க்கும் கொடுமதி – மனைகிழவோயே !**
**பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்**
**திருந்து வேல் குமணன் நல்கிய வளனே"[79]**

எனும் புறநானூற்று பாடலில் பெருஞ்சித்திரனார், தன் மனைவியிடம் பலாப்பழங்கள் தொங்கும் முதிரமலைக்குத் தலைவனாகிய குமணன் வழங்கிய செல்வத்தை, உன்பால் அன்பு கொண்டவர்களுக்கும் நீ அன்பு செலுத்துபவர்களுக்கும், உனது சுற்றத்தினருக்கும் குடும்பப் பசி தீர்க்கக் கடன் கொடுத்து எதிர்பார்த்திருப்போர்க்கும் இன்ன தன்மையர் என்றும் பாராமல் பொருளின்றி வருந்தும் எல்லோருக்கும் என்னிடம் கேட்காமலேயே அவர்களுக்குக் கொடுப்பாயாக என்று கூறுகிறார். இவ்வாறு புலவர் பெருமக்கள் தமக்குக் கிடைத்த பொருளை வைத்துக் கொண்டு தாம் மட்டும் நெடுங்காலம் வளமாக வாழ்வோம் என்று கருதாத கொடைத் தன்மையாளர்களாக விளங்கியுள்ளதை அறிய முடிகின்றது.

## கோப்பெருஞ்சோழன் – பிசிராந்தையார் நட்பு

நட்பிற்கு உள்ளம் ஒன்றே போதுமானது, உருவம் என்பது தேவை இல்லை என்னும் கருத்தினைக் கோப்பெருஞ்சோழன், பிசிராந்தையார் நட்பில் காண முடிகின்றது. இருவரும் பார்க்காமலே நட்பு கொண்டனர். கோப்பெருஞ்சோழன் நாட்டை விடுத்து உயிர் நீக்க வடக்கு நோக்கி செல்கின்றார். அப்பொழுது அவர் பிசிராந்தையார் உயிர் ஒத்த நண்பன். நான் செல்வ செழிப்போடு இருக்கும் காலத்தில் என்னைக் காண வந்ததில்லை. ஆனால் இப்பொழுது துன்பமுறுகின்றேன். என்னைக் காண அவர் கண்டிப்பாக வருவார் என்று அவருக்கும் ஓரிடம் ஒதுக்குங்கள் என்று கூறினான். இதனை,

**“தென்னம் பொருப்பன் நன்னாட்டு உள்ளும்**
**பிசிரோன் என்ப, உன் உயிர் ஓம் பூநனே ;**
**செல்வக் காலை நிற்பின்,**
**அல்லற் காலை நில்லலன் மன்னே”**[80]

என்று புறநானூறு கூறுகின்றது.

அவர் கருதியபடியே பிசிராந்தையாரும் அங்கு வந்து வடக்கிருத்தலைப் பார்த்த பொத்தியார் இத்தகைய நட்பினை நான் இதுவரைக் கண்டது இல்லை, பார்த்ததும் இல்லை, கேட்டதும் இல்லை. இப்படிப்பட்ட நட்பினை உடையவர்களாய் இருப்பார்கள் என்று நினைத்துக் கூட பார்க்க முடியவில்லையே என வியந்து கூறுவதை,

**“நினைக்கும் காலை மருட்கை உடைத்தே,**
**எனைப்பெருஞ் சிறப்பினோடு ஈங்கிது துணிதல் ;**
**அதனினும் மருட்கை உடைத்தே பிறன் நாட்டுத்**
**தோற்றம் சான்ற சான்றோன் போற்றி,**
**இசைமரபு ஆக, நட்புக் கந்தாக”**[81]

என்று புறநானூறு விளக்குகின்றது.

பொத்தியார் என்னும் புலவரும் கோப்பெருஞ் சோழனிடம் மிகுந்த அன்பு கொண்டவர். பிசிராந்தையார், கோப்பெருஞ் சோழன் உடனே தன் உயிரையும் துறக்க எண்ணினார். அதை அறிந்த மன்னன் (என் மனைவி) பிள்ளை பெற்றவுடன் வா வடக்கிருக்கலாம் என்று கூறியதைக் கேட்டு வருந்திய புலவர், புதல்வன் பிறந்த பின் நடுகல்லாய் இருந்த கோப்பெருஞ்சோழனிடம் சென்று நான் உன் அருகில் வடக்கிருக்க விரும்புகின்றேன். அதற்கு இடம் தருக என வேண்டினார். நடுகல்லாய் இருந்தபோதுகூட விலகி இடம் கொடுத்தாய், உன் நட்பே சிறந்தது என

**“பலர்க்கு நிழலாகி, உலகம்மீக் கூறித்,**
**தலைப்போ கன்மையிற் சிறுவழி, மடங்கி,**
**நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்,**
**இடம் கொடுத்து அளிப்ப, மன்ற உடம்போடு**
**இன்னுயிர் விரும்பும் கிழமைத்**
**தொன்னட் புடையார் தம் உழைச் செலினே”**[82]

என நட்பின் சிறப்பினை எடுத்துக் கூறுவதாக பாடல் அமைந்துள்ளது.

## பாரி – கபிலர் நட்பு

பாரியும் கபிலரும் சிறந்த நண்பர்களாக விளங்கினர். பகைவர்களின் சூழ்ச்சியால் பாரி இறந்துபட்டான். பாரி இறந்தவுடன் அவர் மகள்களை தம் மகள்கள் போலக் கருதி வளர்த்து வருகிறார்.

பாரியின் வீரத்தைப் பற்றி கபிலர் கூறுகையில் பாரி வீரத்தில் சிறந்து விளங்கக் கூடியவன். அவனைப் போரிட்டு வெல்வது என்பது கடினம். அவனை வெல்ல வேண்டும் என்று நினைத்தால் பாடிப் பரிசில் பெறும் பரிசிலர் போல நீங்களும் விறலியும் யாழை

இசைத்துக் கொண்டு ஆடியும் பாடியும் சென்றால் அவர் மனம் இரங்கி அவர் நாட்டையும் மலையையும் மட்டுமின்றி தன்னையையும் மகிழ்ச்சியோடு தருவார் என்பதை,

**“அளிதோ தானே பாரியது பறம்பே**
**நளிகொள் முரதின்மூவிரு முற்றினும்**
**உழவர் உழாதன நான்கு பயனுடைத்தே**
**ஒன்றே, சிறியிலை வெதிர் நெல்விளையும்மே**
**இரண்டே, தீஞ்சுளைப் பலவின் பழஊழ்க்கும்மே**
**மூன்றே, கொழுங்கொடி வள்ளிக் கிழங்கு வீழ்க்கும்மே**
**நான்கே அணிநிறவோரி பாய்தலின் மீதழிந்து**
**திணிநெடுங் குன்றம் தேன்சொரியும்மே”[83]**

என இப்பாடல் உணர்த்துகிறது.

பாரி இறந்தவுடன் கபிலர் அவருடைய மகள்களைத் தன் மகளாகக் கருதி வளர்த்து அவர்களுக்கு மணம் முடித்து வைக்க விரும்பினார். கபிலர் பாரி மகளிரை அழைத்துக் கொண்டு நெடுந்தூரம் நடந்து விச்சிக் கோன் என்ற மன்னனிடம் சென்று மூவேந்தர்களும் வஞ்சினத்தால் பாரியைக் கொன்று விட்டனர். ஆகையால் பாரி மகளிர் பாதுகாப்பின்றி உள்ளனர் என்பதை எடுத்துக்கூறி அவர்களைத் திருமணம் செய்து கொள்ளும்படி வேண்டி நின்றார் விச்சிக்கோன். நான் இவர்களை மணந்து கொண்டால், மூவேந்தர்களுக்கும் எங்களுக்கும் பகையாகி விடும். எனவே நான் அவர்களை திருமணம் செய்து கொள்ளவில்லை என்று மறுத்துக் கூறினார்.

பாரி மகளிரை அழைத்துக் கொண்டு மீண்டும் இருங்கோவேள் என்ற மன்னனிடம் சென்று இவர்களை திருமணம் செய்து கொள்க என வேண்டினார் கபிலர். இதனை,

**“இவர்யார் ? என்குவை ஆயின், இவரே,**
**ஊருடன் இரவலர்க்கு அருளித், தேருடன்**
**முல்லைக்கு ஈந்த செல்லா நல்லிசை,**
**படுமணி யானைப், பறம்பின் கோமான்**
**நெடுமாப் பாரி மகளிர் ; யானே**
**தந்தை தோழன் ; இவன் என் மகளிர் ;”[84]**

எனும் புறநானூறு பாடல் மன்னனே இவர்கள் தன்னுடைய நாட்டில் உள்ள ஊர்களை அனைத்தும் பரிசிலர்களுக்கு அளித்தனர். முல்லைக் கொடிக்கு தன் தேரை கொடுத்து அழியாப் புகழ் பெற்ற பாரியின் மகளிர் இவர்கள். யான் இவர்களின் தந்தையின் தோழன் அம்முறையில் பார்த்தால் இவர்களும் என்னுடைய பிள்ளைகளே ஆவார் என்று கூறுவதில் இருந்து கபிலர் பாரியின்மீது வைத்துள்ள நட்பின் ஆழத்தை வெளிப்படுத்து கின்றது. மேலும் அரசர்களிடம் பரிசில் பெற்று தம் துன்பத்தை மட்டும் போக்கிக் கொள்ள விரும்பாமல் அரசர் எதிர்பாராது இறந்துவிடும் சூழலில் அவர்களுடைய மக்களை நல்வழிப்படுத்தும் செயலினால் அவரின் நட்பின் ஆழத்தினை உணர முடிகின்றது. இப்படிப்பட்ட உயர்ந்த நட்பே கபிலர் பாரியின் நட்பாகும்.

## அதியமான் – ஔவையார் நட்புத் திறன்

ஔவையார் என்னும் பெண்பாற் புலவர் அதியமானுக்கு அவைக்களப் புலவராக விளக்கினார்.

ஏழு வள்ளல்கள் என எண்ணித் தமிழக மக்களால் அழைக்கப்பட்டவர்களில் அதியமானும் ஒருவன் என்பதைச் சிறுபாணாற்றுப்படை

**“............. மால்வரைக்**

**கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி**

**அமிழ்துவிளை தீங்கனி ஔவைக்கு ஈந்த**

**உரவுச்சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்**

**அரவுக் கடல்தானை அதிகனும்”**[85]

ஔவைக்கு ஈந்த நெல்லியினை சிறப்பித்துக் கூறுகிறது.

சங்க கால அரசர்கள் தம்முடைய உயிரைப் பெரிதெனக் கருதாது புலவர் பெருமக்களின் உயிரைப் போற்றிப் பாதுகாக்கும் பெருந்தன்மைப் பண்புடன் விளங்கினர். புலவர்களின் அறிவுத் திறன் மக்களுக்கு தேவைப்படும் என்பதை நன்கு உணர்ந்ததால் அதியமான், நெடுங்காலம் வாழக்கூடிய அற்புத நெல்லிக்கனி அவன் கையில் கிடைத்தும் தான் உண்ணாது, அதை ஔவையாருக்கு கொடுத்தான் என்பதை,

**“பெருமலை விடர் அகத் தருமிசைக் கொண்ட**

**சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது**

**ஆதல் நின்னகத்து அடக்கிச்**

**சாதல் நீங்க, எமக்கு ஈந்தனையே”[86]**

இப் புறநானூற்று பாடல் விளக்குகிறது.

ஔவையார் பல ஆண்டுகள் அதியமானுடைய அவையில் இருந்து தனது வாழ்க்கையினை கழித்தவர். இப்படிப்பட்ட சிறப்பினைப் பெற்ற இவர் அதியமான் என் தலைவன் என்றே கூறுவது உரிமையுடையது என்று கூறுவதை,

**“முழவுத் தோள் என்னையைக் காணா ஊங்கே”[87]**

**“அதுபோர் என்னும் என்னையும் உளளே”[88]**

இப் புறநானூற்று பாடலின்வழி அறிய முடிகிறது.

என் தலைவனாகிய அதியமான் சிறிய பொருள் கிடைத்தால் எனக்கு மட்டும் கொடுத்தும் பெரிய பொருள் கிடைத்தால் தாமும் அவரோடு சேர்ந்து இன்புற்று மகிழும் தன்மையுடையவன் என்பதை,

**“சிறியகட் பெறினே, எமக்கு ஈயும் ; மன்னே ! பெரியகட் பெறினே,**
**யாம்பாட, தான் மகிழ்ந்து உண்ணும் ; மன்னே !**
**சிறு சோற்றானும் நனிபல கலத்தன் ; மன்னே !**
**பெருஞ்சோற்றானும் நனி பல கலத்தன் ; மன்னே !**
**என்பொடு தடிபடு வழி எல்லாம் எமக்கு ஈயும் ; மன்னே !”[89]**

என புறநானூறு கூறுகின்றது.

குறைவாக மது கிடைக்குமானால் அதனை எங்களுக்குத் தருவார். மிகுதியாகக் கிடைக்கப் பெற்றால் அதனை யாம் உண்டு பாட எஞ்சிய மதுவைத் தான் விரும்பி உண்ணுவான். அதுவும் கழிந்தது. குறைந்த உணவாக இருந்தாலும் பல கலத்தினை உடைய பலரோடு சேர்ந்து உண்பான். பெரிய அளவு சோறு இருக்கும்போதும் பலரோடு கலந்து உண்பான். எலும்போடு கூடிய தசையை எல்லாம் எங்களுக்கு அளிப்பான் என்று ஔவையார் அதியமானின் நட்பையும் அவரின் சிறப்பையும் எடுத்துக் கூறுகிறார்.

## குமணன் – பெருந்தலைச் சாத்தனார் நட்பு

குமணனிடம் பரிசு பெற்றுச் சென்ற பெருந்தலைச் சாத்தனார் சிலகாலம் கழித்து மீண்டும் குமணனிடம் பரிசு பெற வந்தார். அப்பொழுது அவர் நாட்டை இளங்குமணன் கைப்பற்றினான். குமணனை நாட்டைவிட்டு காட்டுக்கு விரட்டினான் என்பதைக் கேள்விப்பட்டு இச்சூழலிலும் பரிசில் பெற வந்த சாத்தன் இளங்குமணனிடம் பரிசு பெறச்

செல்லாமல் காட்டில் உள்ள குமணனைக் காணச் செல்கின்றார். குமணன் புலவரைப் பார்த்து பெருமகிழ்ச்சி அடைகிறான். அப்புலவருக்கு பரிசு கொடுக்க எந்த பொருளும் இல்லையே என வருந்தினான். அப்பொழுது அவர் நினைவுக்குத் தன் தம்பி தன் தலையை கொய்து வருபவருக்குப் பரிசு கொடுப்பதாக அறிவித்திருந்தது நினைவு வருகின்றது. உடனே வாளை எடுத்துச் சாத்தனாரிடம் கொடுத்து, என் தலையை வெட்டி எடுத்துச் சென்றால் பரிசு கிடைக்கும் எனக் கூறினார். கை நடுங்க உள்ளம் பதைக்க வாளை வாங்கிய சாத்தனார் விரைந்து வந்து இளங்குமணனிடம் எடுத்துக் கூறி அறிவுறுத்தினார். இதனைக் கேட்டு நல்லுணர்வு பெற்ற இளங்குமணன் தன் சகோதரனைச் சந்தித்து தன் தவறை உணர்ந்து வருந்தி, அவனை நாட்டிற்கு அழைத்து வந்தான் என்பதை,

**“பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தல் என்**
**நாடு இழந்தினினும் நனிஇன்னாது என**
**வாள் தந்தனனே, தலை எனக்கு முய**
**தன்னின் சிறந்தது பிறிது ஒன்று இன்மையின்”**[90]

என்று பெருந்தலைச் சாத்தனார் பாடியுள்ளார். இப் பாடல் குமணன்மீது பெருந்தலை சாத்தன் வைத்திருந்த நட்பின் ஆழத்தையும் மன்னன் தவறு செய்யும்போது புலவன் அவர்களை நல்வழிப்படுத்தும் பாங்கினையும் தெளிவாக உணர்த்துகிறது.

## தொகுப்புரை

★ சங்கப்புறப் பாடல்கள் அக்கால மக்கள் தங்களையும், தம்மைச் சார்ந்தவர்களையும் பாதுகாக்கும் பொருட்டு தங்களுக்கென ஓர் அரசமைப்பை ஏற்படுத்தி அவ்வரசாட்சியை வழிநடத்தும பொருட்டு சிறப்பானதொரு அரசனைத் தேர்ந்தெடுத்துள்ளமையை உணர்த்துவதை இவ்வியல்வழி அறிய முடிகிறது.

★ அரசர்கள் தங்களின் அரசாட்சி முறை, நடுநிலைமை, புகழ், கொடை, புலவர்களை போற்றும் முறைமை, விருந்தோம்பல், நட்பு, போர்த்திறம் ஆகியவற்றால் மக்கள் மனத்தில் நீங்கா இடம் பெற்று வாழ்ந்தனர் என்பதை இவ்வியல் தெள்ளிதின் உணர்த்துகிறது.

★ அரசாட்சி முறையில் மரபு பின்பற்றலை காண முடிகின்றது. தந்தைக்குப் பின் அரசாளும் உரிமை மூத்த மகனுக்கே வழங்கப்பட்டுள்ளது. அரசாளுபவர் பெரியவராயினும் சிறியவராயினும் வழக்கை நுணுகி ஆராய்ந்து சிறப்பாக நடுநிலைமையோடு நீதி வழங்கப்பட்டுள்ளது என்பதை வலியுறுத்திக் கூறுவதாக இவ்வியல் அமைகிறது.

★ கடையெழு வள்ளல்களின் ஆட்சியமைப்பையும், அவர்தம் போர்த்திறம், சிறப்புகள், புலவர்களுடன் அவர்களுக்கிருந்த உறவு, நட்பு, அவர்களுடைய கொடைத்திறம் போன்ற செய்திகள் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

★ அரசர்கள் நட்புக்காகத் தம் இன்னுயிரையும் மாய்த்துக் கொள்ளுகின்ற நற்பண்பு நிறைந்தவர்களாக இருந்தனர் என்பதையும் இவ்வியல் வழி உணர இயலுகிறது. இவ்வாறாக சங்கப்புற இலக்கியங்களில் இடம் பெறும் ஆடவரின் செவ்வியல் கூறுகள் இவ்வியல் மூலம் தெளிவாக முழுமையாக ஆராயப்பட்டன.

## அடிக்குறிப்புகள்

1. மதுரை, ப.74
2. சு.வித்யானந்தன், தமிழ் சால்பு, ப.44
3. இராசமாணிக்கனார், தமிழக ஆட்சி, ப.17
4. புறம், பா.75
5. பொருநர், 133
6. அரங்க இராமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர், ப.200
7. பதிற்று பா.74, வரிகள்.19–21
8. மேலது, பா.19
9. ஞா.தேவநேயப் பாவாணர், சங்ககால ஆட்சிமுறை, ப.76
10. பட்டினப்பாலை அடி, 283–284
11. கம்பராமாயணம் கிட்கிந்தா காண்டம், அரசி ப.பா.எண்.14
12. ஞா.தேவநேயப் பாவாணர், சங்ககால ஆட்சிமுறை, ப.46
13. மேலது, ப.19
14. மதுரை, பா.494–499
15. புறம், பா.183
16. மேலது, பா.184
17. மேலது, பா.206
18. மேலது, பா.312
19. மேலது, பா.76
20. ரா.சேதுப்பிள்ளை, தமிழின்பம், ப.9
21. ந.சி.கந்தையா பிள்ளை, தமிழர் பண்பாடு, ப.48
22. தமிழண்ணல், இந்திய இலக்கிய சிற்பிகள் ஔவையார், ப.30
23. புறம், பா.270
24. மேலது, பா.89
25. மேலது, பா.257
26. சிக்மண்டு பிராய்டு, சமூகவியலின் அடிப்படை கோட்பாடுகள் (மொழி பெயர்ப்பு ஜெ.நாராயணன்), ப.36

27. அரிஸ்டாட்டில், சமூகவியலின் அடிப்படை கோட்பாடுகள் (மொழி பெயர்ப்பு ஜெ.நாராயணன்), ப.43
28. தொல்.பொருள் புறத்.6: 2–3
29. புறம், பா.8
30. புறம், பா.31
31. புறம், பா.213
32. மேலது, பா.342
33. மேலது, பா.270
34. மேலது, ப.110
35. மேலது, பா.77
36. மேலது, பா.374
37. பதிற்று, பா.85
38. பெரும், பா.வரிகள்.415–420
39. புறம், பா.26
40. பதிற்று, பா.54
41. மேலது, பா.4–8
42. பொருநர், பா.வரிகள்.156, 157
43. மேலது, பக்.488, 493
44. மேலது, பா.82
45. புறம், பா.158
46. மேலது, பா.110
47. சிறு, பா.வரிகள்.89–91
48. புறம், பா.107
49. மேலது, பா.110
50. சிறு, பா.வரிகள்.91–95
51. புறம், பா.123
52. மேலது, பா.152
53. சிறு, பா.வரிகள்.109, 111
54. புறம், பா.153

55. மேலது, பா.141
56. சிறு, பா. வரிகள்.85–87
57. புறம், பா.149
58. சிறு, பா. வரிகள்.105–107
59. மேலது, பா.வரி.96–99
60. புறம், பா.128
61. மேலது, பா.129
62. பதிற்று, பா.78, 79
63. புறம், பா.390
64. மேலது, பா.91
65. சிறு, பா. வரிகள்.99, 103
66. புறம், பா.101
67. மேலது, பா.9
68. சிலம்பு, 4 : 21 : 53–55
69. புறம், பா.145
70. மேலது, பா.74
71. மேலது, பா.65
72. மதுரை, பா.149–151
73. புறம், பா.284
74. சிறு, பா. வரிகள்.41
75. மு.வரதராசன், தமிழ் நெஞ்சம், பா.102
76. புறம், பா.162
77. மேலது, பா.208
78. தமிழண்ணல், பரிசில் வாழ்க்கை, ப.12
79. புறம், பா.163
80. மேலது, பா.215
81. மேலது, பா.217
82. மேலது, பா.223
83. புறம், பா.109

84. மேலது, பா.201

85. சிறு, பா. வரிகள்.99–103

86. புறம், பா.91

87. மேலது, பா.88

88. மேலது, பா.89

89. மேலது, பா.235

90. மேலது, பா.165.

******

# இயல் – நான்கு

## சங்கப்புற இலக்கியங்களில் மகளிரின் செவ்வியல் கூறுகள்

பெண் என்பவள் அமைதி, அழகு, மென்மை, சாந்த குணங்களை உடையவள் இல்லத்தைப் பேணுபவள், குழந்தைகள் பெறுபவள் என்று அடக்கி ஆண்டனர். பிற்காலத்தில் ஒவ்வொரு அடக்குமுறையையும் உடைத்து சிறுசிறு உரிமைகளைப் பெற்று வீட்டை மட்டும் அல்ல நாட்டையும் ஆளும் அளவிற்குப் பெண்கள் சரிநிகர் சமமாக வாழத் துவங்கினர். இவர்களின் வாழ்க்கையினையும் வரலாற்றையும் போற்றாமல் இருக்க முடிவதில்லை. அக இலக்கியங்களுக்கு மட்டுமே பொருத்தம் உடையவர்கள் எனும் வரையறையை உடைத்து புற இலக்கியங்களிலும் முதன்மையாளர்களாக, வீரம் நிறைந்தவர்களாக வாழ்ந்த பான்மையை மகளிரின் மறப்பண்பு வழி அறியலாம். புற இலக்கியம் சார்ந்த பெண்மணிகள் தான் பெற்ற பிள்ளையானாலும் போர்க்களத்தில் வீரமரணத்தை விரும்புவளாகவும் தான் மணம் புரிந்த கணவனே ஆனாலும் போர்க்களத்தில் விழுப்புண் பட்டு இறத்தலே சாலச் சிறந்ததாகவும் எண்ணினர். ஒழுக்கநெறி தவறாது கற்புப் பூண்டவளாகவும் துன்பங்களைத் துய்த்தேனும் கற்பினைக் காப்பவளாகவும் ஆண்களுக்குச் சளைக்காத மகளிராக சிறப்புப் பெற்றனர். நாட்டின் ஆட்சித் திறத்திலும் அமைச்சுப் பணியிலும் கல்வியிலும் புலமை மிகுதியால் சிறந்து விளங்கினர். தமது பாடல்கள்மூலம் நாட்டைக் காக்கும் சிறந்த பெண்பாற் புலவர்களாகவும் சிறப்புப் பெற்று இருத்தலை உணர்த்துவதே இவ்வியலின் நோக்கமாகும். கற்பும் வீரமும் நிறைந்தே இருப்பினும் இல்லறத்து விருந்தினர்க்கு விருந்து அளிப்பதில் சிறந்தவர்களாகவும் தமிழர் பண்பாட்டை காப்பவர்களாகவும் சிறந்து விளங்கிய சங்கப்புற இலக்கிய மகளிரின் செவ்வியல் கூறுகளை ஆராயும்விதமாக இவ்வியல் அமைகின்றது.

### மகளிரின் மறப்பண்பு

புற இலக்கியங்களில் முதன்மை பெறுவது மறவுணர்வே ஆகும். மனிதன் தோன்றிய நாள் முதலே அவனோடு உடன் வருவது இவ்வீரப்பண்பே எனலாம். போர்ச் சமுதாயமாக விளங்கிய சங்க காலத்தில் ஆடவர்களைப் போலவே மகளிரும் மறவுணர்வு உடையவர்களாக திகழ்ந்தனர். இம் மறவுணர்வும் மன உறுதியும் படைத்த மகளிர்

'மூதின் மகளிர்' எனப் போற்றப்பட்டனர். 'வீரமும் தியாக உணர்வும் மிக்கவர்களைச் சங்க காலச் சமுதாயம் மூதின் மகளிர் என்று அழைத்தனர்' என்று ஸ்ரீகுமார் கூறுகிறார்.

வீரத்தில் சிறந்தவர்கள் 'மூதின் மகளிர்' (புறம்.279), 'மறக்குடித்தாள்' என அழைக்கப்பட்டனர். இவர்களிடம் மறப்பண்பு மிகுந்து அரசு, நாடு பற்றிய எண்ணங்கள் செறிந்தும் காணப்பட்டன. இதனை

**"மறங்கடை கூட்டியகுடிநிலை"[1]**

எனத் தொல்காப்பியமும்

**"அடல்வேல் அடவர்க் கன்றியும் அவ்விரல்**
**மடவரல் மகளிர்க்கு மறம் மிகுத்தன்று"[2]**

என புறப்பொருள் வெண்பாமாலையும் குறிப்பிட்டுள்ளது.

சங்ககாலங்களில் போர் மறப்பண்பானது ஆண்களிடையே வயது வேறுபாடின்றி எல்லாப் பருவத்தினருக்கும் பொதுவாக இருந்துள்ளது. அம்மறப்பண்பைச் சங்ககால மகளிர் தங்கள் குழந்தைகளுக்கு இளமை முதலே கற்றுக் கொடுத்து வளர்த்து வந்தனர். எனவே சிறுவயது முதலே பெண்கள் மறப்பண்பு உடையவர்களாக வளர்ந்து வந்தனர் என்பது தெளிவாகிறது.

## தாயின் மறப் பண்பு

பெண்ணொருத்தி ஒரு தாயிடம் சென்று உன் மகன் எங்கே எனக் கேட்டாள். அதற்கு அத்தாய் புலி இருந்து பின் பெயர்ந்து சென்ற கற்குகையைப் போல அவனை ஈன்ற வயிறு இதுவேயாகும். ஆனால், அவன் போர்க்களத்தில் இருப்பான். அவனை அங்கு சென்று காண்க என்கிறாள். இதை

**"சிற்றில்நற்றூண் பற்றி நின்மகன்**
**யாண்டுள னோவென வினவுதி ; என் மகன்**
**யாண்டுளன் ஆயினும் அறியேன் ; ஒரும்**
**புலிசேர்ந்து போகிய கல்அளை போல**
**ஈன்ற வயிறோ இதுவே ;**
**தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே"[3]**

முதல் நாள் நடந்த போரில் இவளது தந்தை யானையைக் கொன்று தானும் இறந்தான். இரண்டாம் நாள் போரில் இவன் கணவன் பசுக்கூட்டங்களைப் பகைவர்

கவராவண்ணம் தடுத்து நிறுத்தி தானும் இறந்தான். மூன்றாம் நாள் போருக்குரிய முரசொலியைக் கேட்டு அம்மறக்குடித் தாய் மனம் வருந்தவில்லை மகிழ்ச்சி அடைகிறாள். தனக்கு ஆதரவாக இருந்த ஒரே மகனையும் போருக்கு அனுப்ப முடிவு செய்கிறாள். தெருவில் விளையாடிக் கொண்டிருந்த மகனை அழைத்து அவனுக்கு வெள்ளை ஆடையை உடுத்தி, வேலைக் கையிலே தந்து பரந்து கிடந்த தலைக்கு எண்ணெய் தேய்த்து தலைவாரிப் போர்க்களம் நோக்கி போய்வா எனக் கூறுகிறாள். இதனை

**“மேல்நாள் உற்ற செருவிற் இவள்தன்னை,**
**யானை எறிந்து, களத்துஒழிந் தனனே ;**
**நெருநல் உற்ற செருவிற் இவள் கொழுநன்**
**பெருநிரை விலங்கி, ஆண்டுப்பட் டனனே ;**
**இன்றும் செருப்பறை கேட்டு, விருப்புற்று மயங்கி,**
**வேல்கைக் கொடுத்து, வெளிதுவிரித்துஉ டீஇப்,**
**பா றுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி,**
**ஒருமகன் அல்லது இல்லோள்,**
**‘செருமுக நோக்கிச் செல்க’ என விடுமே!”[4]**

என்று புறநானூறு பாடல் உணர்த்துகிறது. இப்பாடல்மூலம் சங்கத் தாயின் மறப்பண்பை நம்மால் உணர முடிகிறது.

## தாயின் பெருமிதம்

போர்க்களத்தில் புறமுதுகு காட்டி ஓடாத கொள்கையினை உடைய ஒரு வீரனுடைய தாய்க்குப் போரின்முடிவில் அவள் மகன் இறந்த செய்தி தெரிவிக்கப்படுகிறது. அதனால் அவள் தன் மகன் இறந்து கிடக்கும் நிலையினைக் காணப் போர்க்களம் செல்கின்றாள். அப்போர்க்களத்தில் தன்னை எதிர்த்த பகைவரைக் கொன்று, முடிவில் தன் மகன் வெட்டுண்டு சிதைந்து வேறுபட்டுள்ளதை அறிந்தாள். பின்னிட்டு ஓடாத கொள்கையினை உடைய அவ்வீரனின் தாய் அன்பினால் வாடிய அவளது உள்ளத்தில் பெருமித உணர்வு தோன்ற அவளுடைய வற்றிய மார்புகள் மீண்டும் பாலூறிச் சுரந்தன என்று ஔவையார் ஒரு தாயின் பெருமித உணர்வினை எடுத்துக் கூறுகிறார். இதனை,

**‘‘சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி,**

**வாடுமுலை ஊறிச் சுரந்தன**

**ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே’’[5]**

என இப்புறநானூறு பாடல் கூறுகின்றது. வீரத்தாயின் வீர உணர்வை வெளிப்படுத்தவே ‘ஓடாப் பூட்கை’ (குலையாத மனவுறுதி) என்ற சொல் கையாளப்பட்டது.

மீன் கொத்திப் பறவையின் சிறகைப் போல் நரைத்த கூந்தலையுடைய முதியவள் மகன் இளையவன். தன்னை நோக்கி வந்த ஆண்யானையைக் கொன்று போர்க்களத்தில் அவனும் இறந்துபட்டான். இச்செய்தியைக் கேட்ட தாய் அவனை ஈன்ற பொழுதைவிடப் பெரிதும் மகிழ்ந்தாள் என்பதை,

**‘‘மீன் உண் கொக்கின் தூவி அன்ன**

**வால்நரைக் கூந்தல் முதியோட் சிறுவன்**

**களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை**

**ஈன்ற ஞான்றினும் பெரிதே’’[6]**

என்று தாய் பெருமிதம் கொள்வதாக இப்புறநானூற்றுப் பாடல் அமைந்துள்ளது.

## வீரமரணத்தை விரும்பும் தாய்

நரம்புகள் தளர்ந்து வற்றிய தோள்களையும் தாமரை இலை போன்ற அடிவயிற்றினையும் உடைய வயது முதிர்ந்த ஒரு தாயினுடைய மகன் போர்க்களத்திற்குச் சென்றிருந்தான். அத்தாயின் மகன் பகைவர் படை கண்டு அஞ்சி புறங்கொடுத்து மாண்டான் என்று சிலர் அந்த தாயிடம் கூறுகின்றனர். இதைக் கேட்ட தாய் என் மகன் முதுகில் புண்பட்டு இறந்து கிடப்பானேயானால், அவன் பாலுண்ட மார்பை அறுத்தெறிவேன் என்ற வீர ஆவேசத்துடன் கையில் வாளேந்திக் கொண்டு செறுகளம் சென்று இறந்து கிடக்கும் வீரர்களுடைய பிணங்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்துக் கொண்டு வந்தாள். அப்பொழுது தன் மகனின் மார்பில் விழுப்புண் பட்டு உடல் வேறு வேறாகச் சிதைந்து கிடந்த நிலை கண்டு அவனைப் பெற்ற நாளில் கொண்ட உவப்பினும் பேருவகை கொண்டாள் என்பதை,

**‘‘நரம்பு எழுந்து உலறிய நிரம்பா மென்தோள்,**

**முளரி மருங்கின், முதியோள் சிறுவன்**

**படை அழிந்து மாறினன்’’** என்று பலர் கூற,

**"மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின், உண்டஎன்**

**முலை அறுத்திடுவென், யான்" எனச் சினைஇக்,**

**கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்**

**செங்களம் துழவுவோள், சிதைந்துவே றாகிய**

**படுமகன் கிடக்கை காணூஉ,**

**ஈன்ற ஞான்றினும் பெரிதுஉவந் தனளே!"[7]**

எனும் இப்புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது.

அச்சம் விளைவிக்கின்ற போர்க்களத்தில் தம் தலைவன், புதல்வர்கள் என அனைவரும் இறந்தனர் என்ற செய்தியைக் கேட்ட பெண் துயரமடையாது மகிழ்ச்சியடைந்தாள் என்பதை

**"எறிந்து களம் படுத்த ஏந்துவாள் வலத்தர்**

**எந்தையோடு கிடந்தோர்எம் புன்தலைப் புதல்வர்**

**இன்ன விறலும் உளகொல் நமக்கென**

**மூதில் பெண்டீர் கசிந்துஅழ நாணிக்**

**கூற்றுகண் ஓடிய வெருவரு பறந்தலை"[8]**

என்று இப்புறநானூற்றுப் பாடல் சான்று பகர்கின்றது. இவ்வாறாக வீரமரணத்தையே அக்கால மறப்பெண்கள் விரும்பினர் என்பதை இப்பாடல் தெளிவாக உணர்த்துகிறது. இதன்மூலம் அக்கால மகளிரும் வீரவுணர்வு நிரம்பியவர்களாக விளங்கினர் என்பது தெளிவாகிறது.

## கணவனைப் போர்க்களத்தில் காணல்

வீரப்பெண்ணொருத்தி கணவன் போர் செய்த களத்திற்குச் சென்று தன் கணவனைப் பார்க்கின்றாள். அவன் மாற்றானின் நெடிய வேல் தன் மார்பில் பாய்ந்ததால் புண்பட்டு நின்றான். மார்பில் இருந்து குருதி வருவதால் கழுகுகள் அவனை மொய்த்துக் கொண்டிருந்தது. இந்நிலை காண்பவருக்கு அச்சம் உண்டாக்கும். ஆனால் இந்நிலையில் இருக்கும் தன் கணவனை அப்பெண் அவனைப் புகழ்ந்து தன் மார்போடு அணைத்துக் கொண்டாள். அதற்குத் தடையாக அக்கழுகுகள் மொய்த்தன. அதற்கும் அஞ்சாது அவனைத் தழுவி மகிழ்ந்தாள். இதனை,

**“நெடுவேல் பாய்ந்த நாணுடை நெஞ்சத்து,**

**அருகுகை . . . . . . . .  மன்ற**

**குருதியோடு துயல்வரும் மார்பின்**

**முயக்கிடை ஈயாது மொய்த்தன, பருந்தே”[9]**

என்ற இப்புறநானூற்றுப் பாடலின் வழி கழாத்தலையார் ஒரு பெண்ணின் வீரத்தை உணர்த்தியுள்ளார்.

மறக்குடி பெண் ஒருத்தி போர்க் களத்திலிருந்து மீளாத கணவனைக் காணப் போர்க்களம் சென்றாள். அங்கு அவன் விழுப்புண் பட்டுக் கிடந்தான். அக்களமானது புலி முதலிய கொடிய விலங்குகள் வாழும் காட்டருகே அமைந்து உள்ளதால் அவ்விலங்குகள் ஏதாவது வந்து உன்னை தூக்கிக் கொண்டு சென்று விடுமே என அச்சமடைந்தாள். அக்களத்தில் இருந்து நிழல் இருக்கும் இடத்திற்குக் கொண்டு செல்வதற்கு என்னால் முடியவில்லையே என்று வருந்துகின்றாளே ஒழிய அவன் இறந்தமைக்காக அவள் வருந்தவில்லை என்பதை,

**“ஐயோ! எனின் யான் புலிஅஞ் சுவலே ;**

**அணைத்தனன் கொளினே, அகன்மார்பு எடுக்கவல்லேன் ;**

**என்போல் பெருவிதிர்ப்பு கூறுக, நின்னை**

**இன்னாது உற்ற அறனில் கூற்றே !**

**நிரைவளை முன்கை பற்றி**

**வரைநிழல் சேர்கம் கடத்திசின் சிறிதே”[10]**

என புறநானூற்றுப் பாடல் விளக்குகின்றது. போர்க்களத்தில் கணவன் இறந்ததற்காக வருந்தாத தலைவியின் உணர்வுகளைச் சொல்லும் இப்பாடலின்மூலம் அக்கால மகளிரின் வீர உணர்வுகளை நம்மால் உணர்ந்து கொள்ள இயலுகிறது.

## நன்றி கடன் தீர்க்க விரும்பும் தாய்

மறக்குல மங்கை ஒருத்தி,

**“பலர்மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக்**

**கால்கழி கட்டிலிற் கிடப்பித்,**

**தூவெள் அறுவை போர்பித் திலதே!”[11]**

என்று வெள்ளிய நிறத்தையுடைய வெள்ளாட்டுக் கிடாய்களைப் போல இளைஞர் கூட்டம் இருக்க, அவர்களுள் என் மகனுக்கு மட்டுமே அரசன் சிறப்பாகக் கள் நல்கினான். அப்படிப்பட்ட சிறப்புகளைப் பெற்ற என் மகனை அரசன் கண்ணீர்மல்கப் பாடையில் கிடத்தி தூய வெள்ளாடையால் மூடும் பேறு கிட்டவில்லையே என்று தனது ஏக்கத்தையும், வீர உணர்வையும் புலப்படுத்துவதாக ஔவையாரின் புறநானூற்றுப் பாடல் பாடுகிறது. மேலும்,

**“புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு**
**இரந்து கோள்தக்கது உடைத்து”**[12]

என்ற திருக்குறளில் வேந்தன் பொருட்டும், மன்னனை காக்கும் பொருட்டும் இறப்பை ஏற்றுக் கொள்வது சிறப்புக்குரியது என வள்ளுவப் பெருந்தகையும் குறிப்பிட்டுள்ளது ஈண்டு எண்ணத்தக்கதாகும். அக்கால மகளிரின் வீர உணர்வுகளைச் சங்க இலக்கியங்கள் உணர்த்தியதைப் போலவே செவ்வியல் பண்புகளில் ஒன்றான கற்பையும் வலியுறுத்திக் கூறுகின்றன.

## கற்பு

கற்பு என்பது வாழ்வின் ஒழுக்கநிலை, உண்மைத் தன்மையைக் கொண்டது. ‘கற்பு’ என்ற சொல்லிற்கு ‘கணவன் கற்பித்த வழியில் மனைவி நிற்றல்’ என்றும் ‘கற்போன்ற திண்மை நெஞ்சு உடையளாயிருத்தல்’ என்றும் பொருள் கூறுவர். மகளிரின் கற்பு மேன்மையைச் சிலப்பதிகாரத்தில் ‘உரைசால் பத்தினையை உயர்ந்தோர் ஏத்துவர்’ என இளங்கோவடிகள் கூறுகிறார். இளங்கோவடிகள் கண்ணகியின் பெருமையினைக் கவுந்தியடிகள் வாயிலாகச் சிறப்பித்துப் பேசும்பொழுது,

**“இன்றுணை மகளிர்க் கின்றி யமையாக்**
**கற்புக்கடம் பூண்ட இத்தெய்வ மல்லது**
**பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்”**[13]

என சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் கற்புத் திறனைப் போற்றிக் கூறியுள்ளார். கற்பின் திறன் குறித்து தொல்காப்பியர்,

**“உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்பு சிறந்தன்று எனத்**
**தொல்லோர் கிளவி”**[14]

ஒரு பெண் தன் உயிரைவிட நாணத்தைப் போற்ற வேண்டும். அந்நாணத்தை விட கற்பு சிறந்தது எனப் போற்ற வேண்டும் என்று கூறுகின்றார்.

## இலக்கியங்களில் கற்பு

கற்புடைய மகளிர் நினைத்தால் மழையைக் கூட வரவழைக்க முடியும் என்ற நம்பிக்கை சங்ககால மக்களிடம் இருந்தது. குறிஞ்சிக் கலியில் தலைவியின் பெருமையைக் குறிக்கும் இடத்தில் உலகம் செழிக்க மழை வேண்டுமெனில் அதனை வருவித்து தருகின்ற பெருமை உடையவள் பெண் என்று பெண்மையின் பண்புநலன் சிறப்பிக்கப் பட்டுள்ளது. இதனை,

**“வான் வரும் கற்பின் மனையுறை மகளிர்”[15]**

என மகளிரின் கற்பு நெறிப் பண்பை மணிமேகலை கூறுகின்றது. மேலும் கற்புடைய மகளிர் வாழும் நாட்டில் வானம் தவறாமல் மழை பெய்து, விளைச்சல் குறையாது இருக்கும் என்று மக்கள் நம்பினர். இதனை,

**“வானம் பொய்யாது வளம் பிழைப்பு அறியாது**
**நீள்நில வேந்தர் கொற்றம் சிதையாது”[16]**

என்று இச் சிலப்பதிகாரப் பாடல் கூறுகின்றது.

மனைவியர்க்குக் கற்பு நெறியே சிறந்த காவல் என்றும் அவளுக்கு வீட்டுச்சிறை எப்பயனும் தராது என்பதைத் திருக்குறள்,

**“சிறைகாக்குங் காப்பு எவன் செய்யும் மகளிர்**
**நிறைகாக்குங் காப்பே தலை”[17]**

என்று கூறுகின்றது. இல்லத்தைச் சிறக்கச் செய்தல், விருந்தினரை உபசரித்தல், மக்களைப் பெற்றிருத்தல் ஆகிய மூன்று கடமைகளையும் சிறப்புற செய்பவள் கற்புடைய பெண் என்பதை,

**“நல்விருந் தோம்பலின் நட்டாளாம் வைகலும்**
**இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய் – தொல்குடியின்**
**மக்கள் பெறலின் மனைகிழத்தி இம்மூன்றும்**
**கற்புடையாள் பூண்ட கடன்”[18]**

என்ற திரிகடுகப் பாடல் வழி அறியலாம்.

## கற்பின் பெருமை

தன்னிடம் வந்து யாசித்துப் பொருள் கேட்கும் இரவலர்கள், புலவர்கள், தங்களுடைய மனைவியை அறிமுகப்படுத்தும்போது கற்புடைய பெண்டீர் என்றும், பாடல் தலைவனைக் குறிப்பிட 'கற்பினையுடையவளின் கணவன்' என்றும் சில இடங்களில் அறிமுகப்படுத்தி உள்ளனர். இதனை,

**"செயிர்தீர் கற்பின் சேயிழை கணவ!"**[19]

என்று பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும் பெயர்வழுதியை வாழ்த்தும் போது, குற்றமில்லாத் தலைக்கற்பின் மாண்புடைய மங்கையின் மணாளன் என்று இரும்பிடர்த் தலையார் குறிப்பிடுகின்றார்.

தமிழ்க் கடவுள் என்று அழைக்கப்படும் முருகப் பெருமானைத் திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் அறிமுகப்படுத்தும்போது, குற்றமற்ற கற்பினையுடைய தெய்வானையின் கணவன் என்று கூறுவதை,

**"மறுஇல் கற்பின் வாணுதல் கணவன்"**[20]

இவ்வடியில் காண முடிகின்றது.

பெருங்குன்றூர்கிழார் இளஞ்சேரல் இரும்பொறையை வாழ்த்தும்போது அரசியின் கற்பு நெறியின் சிறப்பை கூறி அரசனை வாழ்த்தியுள்ளார். இதனை,

**"ஆறிய கற்பின், தேறிய நல் இசை,**
**வண்டு ஆர்கூந்தல், ஒண் தொடி கணவ"**[21]

**"சேண் நாறு நல் இசைச் சேயிழை கணவ"**[22]

இப் பதிற்றுப்பத்து அடிகள் விளக்குகின்றது.

தெய்வத் தன்மைக் கொண்ட கற்பினையும் செந்நிற அணிகளையும் அணிந்தவள் நன்மாறனின் மனைவி. அவள் கற்பு என்னும் குணம் நீங்காமல் நிலைபெற்றவள், செல்வக் கடுங்கோ வாழியாதனின் மனைவி என்கிறார். இதனை,

**"கற்பு இறை கொண்ட கமழும் சுடர் நுதல்"**[23]

**"கடவுள் சான்ற கற்பின், சேயிழை மடவோள்"**[24]

என்று வடமவண்ணக்கன் பேரிச்சாத்தனாரும் கபிலரும் பாடியுள்ளது குறிப்பிடத்தக்கது.

## கற்பின் தன்மை

அழகிய காடுகளில் வளர்ந்திருக்கும் முல்லைப் பூவினுடைய அரும்பானது பல்லின் வெண்மையை ஒத்துக் காணப்படுகிறது. அவ்வாறு உள்ள வெண்மையான முல்லைப் பூவைப் போன்றது விறலியின் கற்பு. இதனை,

**“குல்லைஅம் புறவில் குவிமுகை அவிழ்ந்த**

**முல்லை சான்ற கற்பின்”[25]**

இச் சிறுபாணாற்றுப் படை கூறுகின்றது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மனைவி அறக்கற்பை உடையவள், அடக்கத்தோடு கூடிய பெண்மையை உடையவள் என்பதை,

**“ஆறிய கற்பின் அடங்கிய சாயல்”[26]**

என்று இப் பதிற்றுப் பத்து கூறுகின்றது.

தன்னிடம் நிரம்பிய கற்பினையும், அழகிய நெற்றியையும் உடைய ஒரு பெண்மணி தன் கணவன் விண்ணுலகம் சென்ற பிறகும்கூட அவன் இறந்த இடத்திற்குச் சென்று அவனுக்கு உணவிட விரும்புவதை,

**“அடங்கிய கற்பின் ; ஆய்நுதல் மடந்தை,**

**உயர்நிலை உலகம், அவன்புக வார”[27]**

என்று இப் புறநானூற்றுப் பாடல் அடிகள் கூறுவதை அறிய முடிகின்றது. மாறோக்கத்து நப்பசலையார் அவியனைப் புகழும்போது, அவனது மனைவி கற்புடைய மடந்தையாகியவள் புறத்திருப்பதை,

**“கற்புடை மடந்தை தன்புறம் புல்ல”[28]**

எனப் புறநானூற்று அடிகள் கற்பின் தன்மையைக் கூறுகின்றது.

## அருந்ததியை ஒத்த கற்பு

**“வடமீன் புரையும் கற்பின் மடமொழி”[29]**

**“மீனொடு புரையும் கற்பின்”[30]**

**“சேண் நாறு நறு நுதல், சேயிலை கணவ !”[31]**

**“செம்மீன் அனையள், நின் தொல் நகர்ச் செல்வி”[32]**

**“பெருநல் வானத்து வடவயின் விளங்கும்**

**சிறுமீன் புரையும் கற்பின்”[33]**

அருந்ததியை போன்ற கற்புடையவர்களாக, இளஞ்சேரல் இரும்பொறையின் தேவி, திருமுடிக்காரியின் மனைவி, களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் மன்னனின் தேவி, செல்வக் கடுங்கோ வாழியாதனின் மனைவி, வார்ப்பிணி ஆகியவர்களின் கற்பை ஒப்பிட்டுப் புலவர்கள் கூறுகின்றனர். அருந்ததி வானத்தில் நட்சத்திரமாக ஒளிவீசுகிறாள் என்ற சங்க கால மக்களின் நம்பிக்கையை இப்பாடல் வெளிப்படுத்துகிறது. அக்கால மகளிர் கற்புத்திறம் உடையவர்களாக விளங்கியதை இப்பாடல்கள் வழி தெள்ளிதின் உணர முடிகிறது. கற்புத்திறம் போலவே சங்ககால மகளிர் கல்வித்திறனினும் சிறப்புப் பெற்று விளங்கினர்.

## சங்கப் பெண்பாற் புலவர்களின் கல்வித் திறன்

சங்க கால மகளிர் கல்வி நலம் மிக்கவர்களாக விளங்கியுள்ளனர் என்பதனை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. இம்மகளிர் ஆழ்ந்த மொழிப்புலமை பெற்றவர்களாகவும் மொழிவளம் பேணும் மாண்பினராகவும் மொழிவளம் பெருக்கும் புலவர்களாகவும் விளங்கியுள்ளனர். அவ்வாறு மகளிர் தனித்து விளங்குவதற்கு காரணம் அவர்களின் செயல்திறமே ஆகும்.

**“மகளிர் தமது கடமையில் ஈடுபட்டிருக்குங்கால் அல்லது ஒரு செயலை மேற்கொண்டிருக்கும்கால் முழுக் கவனத்தையும் செலுத்திச் செயற்படுவதால் தம்மையும் மறக்கும் நிலைக்கு ஆளாகி விடுவதுண்டு”[34]** என்று வள்ளி நாயகி அவர்கள், மகளிர் தாம் மேற்கொண்ட செயலில் முழு ஈடுபாட்டையும் செலுத்தும் மனப்பாங்குடையவர்கள் என்றும் முழு கவனத்தையும் ஒருமுகமாகச் செலுத்தி அவ் வேலையைச் சிறப்பாக முடித்த பின்பே வேறு செயலில் ஈடுபாடு செலுத்துவர்கள் என்றும் கூறுகிறார்.

சங்க காலப் பெண்பாற் புலவர்கள் கல்வி அறிவிலும் கவி புனைந்து பாடும் ஆற்றலினும் சிறந்தவர்களாக இருந்திருக்கின்றனர். பெண்பாற் புலவர்கள் எத்தனை என்பதில் அறிஞர்களிடையில் மாறுபட்ட கருத்துக்கள் இருந்துள்ளன. **“பெண் கவிஞர்களின் எண்ணிக்கையினை குறிப்பிடும்போது உ.வே.சா. 38 எனவும் எஸ்.வையாபுரிப் பிள்ளை 30 எனவும் ஔவை துரைசாமிப்பிள்ளை 34 எனவும் புலவர் கா.கோவிந்தன் 27 எனவும் ஔவை.து.நடராசன் 41 எனவும் ந.சஞ்சீவி 25 எனவும் தாயம்மாள் அறவாணன் 45 எனவும குறிப்பிடுகின்றனர்”[35]** என முருகேச பாண்டியன்

கூறுகின்றார். பெண்பாற் புலவர்களைப் பற்றிய வரலாறுகள் தெளிவாய் அறியப்படவில்லை. இருப்பினும் அவர்கள் வாழ்ந்த காலத்தை அடிப்படையாகக் கொண்டு சில பாடல் வரிகளின்மூலம் அப்புலவர்களைப் பற்றிய குறிப்புகளை அறிய முடிகின்றது.

சங்க இலக்கியங்களில் உள்ள புறப் பாடல்களைப் பாடிய புலவர்களின் எண்ணிக்கை இருபது ஆகும். அப்புலவர்கள்

1. அள்ளூர் நன் முல்லையார்,
2. ஒக்கூர் மாசாத்தியார்,
3. ஔவையார்,
4. காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்,
5. காவற்பெண்டு,
6. குறமகள் இளவெயினி,
7. தாயங்கண்ணியார்,
8. நக்கண்ணையார்,
9. நெட்டிமையார்,
10. பாரி மகளிர்,
11. பூங்கணுத்திரையார்,
12. பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு,
13. பேய்மகள் இளவெயினி,
14. பொன்முடியார்,
15. மாற்பித்தியார்,
16. மாறோக்கத்து நப்பசலையார்,
17. முடத்தாமக் கண்ணியார்,
18. வெண்ணிக்குயத்தியார்,
19. வெள்ளைமாளர்,
20. வெறிப்பாடிய காமக் கண்ணியார்

ஆகிய புலவர்களின் கல்வித் திறம் அவர்களின் பாடல்கள் மூலமாக அகர வரிசையில் ஆராயப்படுகிறது.

## அள்ளூர் நன்முல்லையார்

இப்புலவரது இயற்பெயர் ‘நன்முல்லை’ என்பதாகும். இவர் வாழ்ந்த ஊரினை அடைமொழியாகக் கொண்டு ‘அள்ளூர் நன்முல்லையார்’ என்று சிறப்பிக்கப்பட்டுள்ளார். ‘அள்ளூர்’ என்பது பாண்டி நாட்டில் சிவகங்கைக்கண் அமைந்ததோர் ஊர் என்று உ.வே.சாமிநாதையர் குறிப்பிடுகின்றார். இக் கூற்றினை மெய்ப்பிக்கும் வகையில் ‘ஒளிறு வாட் தானைக் கொற்றச் செழியன் பிண்ட நெல்லின் அள்ளூர்’ எனும் அகநானூற்றுப் பாடல் அமைந்துள்ளது. இவருடைய **(306, 340)** இரண்டு பாடல்கள் புறநானூற்றில் அமைந்துள்ளன.

**“களிறு பொரக் கலங்கு, கழல்முள் வேலி,**
**அரிது உண் கூவல், அங்குடிச் சீறூர்**
**ஒலிமென் கூந்தல் ஒண்ணுதல் அரிவை**
**நடுகல்கை தொழுது பரவும் ஒடியாது**
**விருந்து எதிர் பெறுகதில் யானை, என் ஐயும்**
**ஒ....... வேந்தனோடு**
**நாடுதரு விருப்பகை எய்துக எனவே”[36]**

எனும் இப்புறநானூற்றுப் பாடல் மகளிரின் வீரப் பண்பினையும் நடுகல் வழிபாட்டையும் இல்லற மகளிரின் விருந்தோம்பல் பண்பு போன்றவற்றையும் எடுத்துக்கூறும் விதமாக அமைந்துள்ளது. மூதின் முல்லைப் பாடலும், ‘வீரத்தில் சிறந்து விளங்கும் ஆண்மகனுக்கே தன் மகளை மணம் முடிப்பர், மற்றவர்களுக்குக் கொடுக்க மாட்டார்’ என்ற மகட்பாற்காஞ்சி பாடலும் **(புறம்.340)** நன்முல்லையார் பாடிய பாடல்கள் ஆகும்.

## ஒக்கூர் மாசாத்தியார்

ஒக்கூரில் வாழ்ந்த பெண்பாற்புலவர் இவர். ஒக்கூர் என்பது பாண்டி நாட்டில் சிவகங்கைக்கு வடதிசையில், திருக்கோட்டியூருக்கு அருகேயுள்ள ஊர் ஆகும். இவரது இயற்பெயர் ‘சாத்தி’ என்பதாகும். ‘மா’ என்பது உயர்வையும் பெருமையையும் குறிக்கும் அடைமொழி. இவர் புறநானூற்றுப் **(279)** பாடலில் தந்தையும் கொழுநனும் **(கணவனும்)** போரில் வீழ்ந்த பிறகு மறக்குடி மங்கை ஒருத்தி தன் ஒரே மகனைப் போருக்கு அனுப்பி வைக்கும் வீரமரபைப் போற்றும் விதமாகப் பாடியுள்ளார்.

**“ஒரு மகன் அல்லது இல்லோள்,**
**செருமுக நோக்கிச் செல்க’ என விடுமே”[37]**

என்ற புறநானூற்றுப் பாடல் இன்றைய நாளிலும் படிப்பவர் உள்ளத்தில் வீர உணர்வையும் நாட்டுப் பற்றினையும் ஊட்டுவதாய் அமைந்துள்ளது. 'ஒரு மகன் அல்லது இல்லோள்' என்பதில் வெளிப்படக் கூடிய அவலச் சுவையானது உணர்வுப் பூர்வமாக மட்டுமே உணரக் கூடியது ; சொற்களால் விளக்கம் தந்தால் அதனை உணர முடியாத அளவிற்கு ஒக்கூர் மாசாத்தியாரின் பாடல்கள் அமைந்துள்ளது ஈண்டு எண்ணத்தக்கதாகும்.

### ஔவையார்

சங்ககாலச் சமுதாயத்தில் தனி மதிப்பும் சிறப்பும் வாய்ந்தவராகத் திகழ்ந்தவர் ஔவையார். இவரால் தமிழ்மொழிக்கும் தமிழருக்கும் நிலைத்த பெருமை உண்டானது. அதிகப் பாடல்களைப் பாடிய பெண்பாற்புலவர் என்ற பெருமையினையும் பெற்றவர் ஆவார். **"உணர்ச்சிகளின் வன்மை, மென்மைக் கூறுகளைப் பாடுவதில் வல்லவர் என்பதை ஔவையாரின் படைப்புகள் குறிக்கின்றன. பிற பெண்பாற் புலவர்கள் இந்தக் கலை நெறியில் ஔவையாருடன் போட்டியிட முடியவில்லை. கபிலர், பரணர்க்கு அடுத்தபடியாக அதிக எண்ணிக்கையில் பாடல்களை யாத்தவரும் ஔவையாரே ; இதனாலும் சங்ககால ஔவையார், சங்ககாலப் பெண்பாற் புலவர்களின் கவியரசியாக உயர்ந்து நிற்கிறார்"**[38] என்று பெ.சு.மணி குறிப்பிடுகின்றார்.

ஔவையாரின் பாடல்கள் புறநானூற்றில் 33 பாடல்கள் இடம் பெற்றிருக்கின்றன (87–104, 140, 187, 206, 231, 232, 235, 269, 286, 290, 295, 311, 315, 367, 390, 292) இப்பாடல்கள் அரசியல், வீரம், காதல், நட்பு ஆகிய பொருள்கள் பற்றி அமைகின்றன.

ஔவையின் அறிவுரையும் கவிநலமும் நாட்டில் வாழும் மக்களுக்கு நீண்ட நாட்களுக்கு வேண்டும் என எண்ணிய அதியமான் கிடைத்தற்கரிய நெல்லிக் கனியை இவருக்குக் கொடுத்த செய்தி அனைவரும் அறிந்த ஒன்றே. இத்தகைய பெருந்தியாகம் செய்த அதியனை ஔவை கடவுளுக்கே ஒப்பாக எண்ணித் தம் பாடலுள் வடித்துள்ளது, படைப்பையும் தாண்டி அவர் நெகிழ்ந்து போன அன்புள்ளத்தை வெளிப்படுத்துகிறது. இதனை

**"நீலமணி மிடற்று ஒருவன் போல**
**மன்னுக பெருக, நீயே, தொன்னிலைப்**
**பெருமலை விடர் அகத் தருமிசைக் கொண்ட**
**சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது**
**ஆதல் நின்னகத்து அடக்கிச்**

**காதல் நீங்க, எமக்கு ஈத்தனையே''[39]**

என புறநானூற்றில் கூறியுள்ளார். மேலும்,

**“அமிழ்து விளைதீம் கனி ஔவைக்கு ஈந்த**
**உரவுச் சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்**
**அரவக் கடல் தானை அதிகன்''[40]**

என சிறுபாணாற்றுப் படையும் கூறுகின்றது.

புலமையில் சிறந்து விளங்கியதால் ஔவையார் செல்லும் நிலமெங்கும் வரவேற்பும் சிறப்பும் கிடைத்தது. நற்பண்பும் நற்செயல்களும் நிரம்பிய ஆடவர்கள் இருக்கும் பகுதியே நல்ல நிலமாகும் என்று குறிப்பிடுகின்றார். இதனை,

**“எவ்வழி நல்லவர் ஆடவர்,**
**அவ்வழி நல்லை ; வாழிய நிலனே''[41]**

**“வாழச் செய்த நல்வினை அல்லது**
**ஆழுங் காலைப் புணைபிறிது இல்லை''[42]**

என்று விளக்கியுள்ளார்.

ஔவையார் தூது சென்றவிதத்தினை, **“தொண்டைமானிடம் ஔவையார் மேற்கொண்ட அரசியல் தூது உலக இலக்கிய வரலாற்றில் இதுகாறும் உரிய வகையில் குறிக்கப் பெறாதது வருந்தத்தக்கது. வடபுலத்துப் பேரரசன் அசோகன், கலிங்கப் போரில் புத்த பேதம் பெற்று, புத்த தருமத்தின் பெண்பாற் தூதுவரான சங்கமித்திரையை பாரதத்திற்கு வெளியே அனுப்பியதை பாரத மகளிர் பெருமையோடு ஓர்ந்து இன்புறத் தக்கதற்கு ஒப்பாகும் ஔவையாரின் அரசியல் தூது''[43]** என்று பெ.சு.மணி குறிப்பிடுகின்றார். மேலும் **“ஔவைக்கு நிகரான ஒரு பெண்பாற் கவி உலகநாடுகளிலும் தோன்றியதில்லை என்பதற்கு அம்மூதாட்டியார், தொண்டைமானிடம் சென்ற தூது வெற்றி பெற்ற நிகழ்ச்சி ஒன்றே போதுமானதாகும்''[44]** என்று மா.பொ.சிவஞானம் கூறுகின்றார்.

அதியமான் போர்த் திறமையோடு நல்ல சூழ்ச்சித் திறமையும் பெற்று இருந்தார். இவர் காலத்தில் வாழ்ந்த தொண்டைமான் என்னும் மன்னன் இவனோடு போர்புரிய எண்ணினார். அதற்கு வேண்டிய படைக்கலங்களையும் படைகளையும் சேர்த்து வந்தான். இதையறிந்த அதியமான் அம்மன்னனோடு போரிட்டு வெற்றி பெறுவது எளிமையானது ஆகும். தனக்கு அவன் நிகர் இல்லாதவன் என நினைத்தான்.

அம்மன்னனோடு போர் செய்தால் தன் பெருமைக்கு இழுக்காகும். அப்படி அவரோடு போர் செய்தால் பல உயிர்கள்தான் சேதமாகும் என கருதிப் போரைக் கைவிடுமாறு தூது செல்ல வருமாறு ஔவையாரை அனுப்புகின்றான் அதியமான். அதியமானின் சொல்லை ஏற்றுத் தொண்டைமானிடம் தூது சென்றார் ஔவை என்பதை,

**“இவ்வே, பீலி அணிந்து மாலைசூட்டிக்**
**கண்திரள் நோன்காழ் திருத்திநெய் அணிந்து**
**கடியுடை வியன்நக ரவ்வே ; அவ்வே,**
**பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து**
**சொற்றுறைக் குற்றில மாதோ”[45],**

இப்பாடல் மூலம் உணர முடிகின்றது. தொண்டைமான் போர் புரியாததால் அவனுடைய கருவிகள் புதியவையாகத் தோன்றுகின்றன. ஆனால் அதியமான் எப்பொழுதும் போர்ச் செயலில் ஈடுபட்டு வந்ததால் அவனுடைய போர்க்கருவிகள் உடைந்து கிடக்கின்றன என்று கூறி அதியமானின் பேராற்றலை தொண்டைமானிடத்து ஔவையார் கூறியது அதியமானைப் புகழ்ந்தும் தொண்டைமானைப் புகழ்வது போல இகழ்ந்தும் பாடிய திறனை இப்பாடல் சுட்டுகின்றது. இதன்மூலம் சங்க காலத்தில் கல்வி அறிவில் சிறந்து விளங்கிய ஔவையார் போன்ற பெண்பாற்புலவர்கள் அரசர்களுக்கு உறுதுணையாக இருந்துள்ளனர் என்பது தெளிவாகிறது.

## காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்

சேர நாட்டிலுள்ள காக்கையூர் என்ற ஊரைச் சார்ந்தவர் இவர். இயற்பெயர் ‘செள்ளை’ என்பதாகும். இவரின் புலமையை வியந்தவர்கள் ‘நல்’ என்ற அடைமொழி தந்து போற்றினர். ‘நற்செள்ளை’ என்பது நாளடைவில் நச்செள்ளை என மருவியது என்பர். ‘பாடினி’ என்பது பாடுபவள் என்னும் பொருளை உணர்த்துகிறது. குறுந்தொகையில் காக்கை கரைந்தது குறித்துப் பாடியதாலே ‘காக்கைப் பாடினியார்’ என்று சான்றோர்களால் அழைக்கப் பெற்றார்.

சங்கப் பாடல்களைப் பாடிய பெண்பாற் புலவர்களுள் இப்புலவருக்கு என்று ஒரு தனிச்சிறப்பு உண்டு. சேர மன்னர்களைப் பாடிய பதிற்றுப் பத்துப் புலவர்களுள் இவர் மட்டுமே பெண் என்பது இவருக்கு மகுடமாக அமைந்துள்ளது. பதிற்றுப் பத்தில் ஆறாம் பத்தும் புறநானூற்றில் (278) ஒரு பாடலும் இப்புலவர் பாடியுள்ளார்.

‘உவகைக் கலுழ்ச்சி’ என்னும் துறையில் அமைந்துள்ள இவரின் புறநானூற்றுப் பாடலில் ஒரு மறக்குடித்தாய் தன் மகன் இறந்ததை எண்ணி வருத்தப்படாமல் போர்க் களத்திலே தன் மகன் புறமுதுகுக் காட்டி இறந்திருப்பின் அவன் பாலுண்ட மார்பை அறுத்து எறிவதாகக் கூறி போர்க்களம் சென்ற காட்சியை

**“மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்டஎன்**
**முலை அறுத்திடுவன் யான்”[46]**

என்று காக்கைபாடினியார் எடுத்தியம்புகிறார்.

நச்செள்ளையார் பதிற்றுப் பத்துப் பாடலின் ஆறாம் பத்தில் ஆடுகோட்பாட்டு சேரலாதனைப் பாடியமைக்குப் பரிசாக ஒன்பது பொன்னும் நூறாயிரம் காணமும் பெற்றதோடு அவரது அவைக்களத்தில் பக்கத்தில் இருக்கும் பேற்றையும் பெற்றார். இச்செய்தியானது நச்செள்ளையாரின் புலமைக்கு அரசரிகளிடம் இருந்த மதிப்பையும் சிறப்பையும் காட்டுகிறது.

விறலியரின் ஆடல், பாடல் கேளிக்கையில் மகிழ்ந்து இருக்கும் மன்னனைப் பார்த்து, பகைவர்கள் அவனையும் அவனது வீரத்தையும் குறைவாக எடை போட்டுவிடக் கூடாது என்று எச்சரிக்கை செய்யும் வகையில் நச்செள்ளையார் தன் பாடலின்மூலம் திறம்பட எடுத்துக்காட்டியுள்ளார். இதனை,

**“சுடர்நுதல் மடநோக்கின்**
**வாள்நகை இலங்கெயிற்று**
**அமிழ்துபொதி துவர்வாய் அசைநடை விறலியர்**
**பாடல்சான்று நீடினை உறைதலின்**
**வெள்வேல் அண்ணல் மெல்லியன் போன்என**
**உள்ளுவர் கொல்லோநின் உணரா தோரே ?”[47]**

எனப் பதிற்றுப் பத்து கூறுகின்றது.

தலைவியாகிய மனைவியின் பெருமையைக் கூறிக் கணவனை அறிமுகப்படுத்தும் பாங்கும் ‘ஆன்றோள் கணவ’ (பதிற்று–55, பா.1) எனத் தொடங்கும் இவரின் பாடல்வரியில் காண முடிகிறது. தாம் பாடும் வள்ளலின் கொடைச் சிறப்பினைப் புலப்படுத்தும் வகையில் ஒவ்வொரு புலவரும் ஒவ்வொரு தனித்தன்மையினைக் (புது உத்திகளை) கையாண்டதை இலக்கியங்கள் காட்டுகின்றன. பொருள் பெறுவோர் வறுமையில்லாமல் உன்னை நாடி வரமாட்டார்கள். எனினும் நீ அவர்களை தேடிச்

சென்று தன் தேரில் ஏற்றிக் கொண்டு வந்து உணவளித்து யாவரும் விரும்பும் வாய்மொழியுடைய சிறப்புக்குரிய சேரன் என்று நச்செள்ளையார் மன்னனைப் புகழ்ந்து கூறும்முறை நம்மை கவரும் வகையில் உள்ளது.

**“வாரார் ஆயினும் இரவலர் வேண்டி**
**தேரின் தந்து அவர்க்கு ஆர்பதன் நல்கும்**
**நகைசால் வாய்மொழி இசைசால் தோன்றல்”[48]**

எனும் பதிற்றுப்பத்து பாடல் கூறுகின்றது. இவ்வாறு ஔவையாரைப் போலவே நச்செள்ளையாரும் மன்னனுக்கு அறிவுரை கூறும் பாங்கினை நம்மால் உணர இயலுகிறது.

## காவற்பெண்டு

காவற்பெண்டு என்ற இவரது பெயரைக் கொண்டு இவர் ஒரு செவிலித்தாய் எனக் கருத முடிகிறது. மணிமேகலையில் செவிலித் தாய் எனும் பொருளில் வரும்.

**“குதலைச் செல்வாய்க் குறுநடைப் புதல்வர்க்குக்**
**காவல் பெண்டிர்”[49]**

என்ற மணிமேகலை பாடல் சான்று பகர்கின்றது. இப்புலவர் புறநானூற்றில் ஒரு (86) பாடலை இயற்றியுள்ளார்.

**“ யாண்டுளன் ஆயினும் அறியேன் ; ஒரும்**
**புலிசேர்ந்து போகிய கல் அளை போல**
**ஈன்ற வயிறோ இதுவோ ;”[50]**

எனும் இப்புறநானூற்றுப் பாடல் வினாவிடை அமைப்பில் அமைந்துள்ளது. ஒரு மறக்குடித் தாயின் வீர உணர்வினை ஒரு நாடக நிகழ்வு போலக் காட்சிப்படுத்தியுள்ளார். தாயின் வீரத்தையும் இளைஞனின் நாட்டுப் பற்றையும் அழகாக எடுத்துக் காட்டியுள்ளார். இதன்மூலம் பெண்கள் நாட்டுப்பற்று உடையவர்களாகவும் விளங்கினர் என்பது தெளிவாகிறது.

## குறமகள் இளவெயினி

புறநானூற்றின் 157வது பாடல் குறமகள் இளவெயினி பாடியதாகும். **“குறமகள் என்றவுடன் குறவர் குடியில் பிறந்தவள் என்று நன்கு தெரிந்து கொள்ளலாம். மலையும் மலை சார்ந்த இடமுமாகிய குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் ‘குறவர்’ எனப்படுவோர் ஆவார். அவர்களை ‘எயினர்’ என்றும் அழைப்பதுண்டு. குறிஞ்சி நிலத்து**

**ஆண்மகனைக் ‘குறவன்’, ‘எயினன்’ என்றும் பெண்மகளைக் ‘குறத்தி’, ‘எயினி’ என்றும் வழங்குவர். இவ்வாறு வழங்குதல் ஒரு மரபு. அக்குறவர் குடியில் பிறந்த நங்கை ஒருத்தி அக்காலத்தில் ‘குறமகள் எயினி’ என்று அழைக்கப்பட்டு வந்தார். அப்பெண்மணி மிகவும் இளமை பருவத்திலேயே கல்வி நலத்தில் சிறந்து விளங்கினார் ; புலவர்களெல்லாம் மதிக்கும் பாவலராக விளங்கினார். எனவே எயினி என்பதனோடு அவரது இளமைப் பருவத்தையும் இணைத்து ‘இள+எயினி’ – இளவெயினி’ என்று அழைக்கப்பட்டு வந்தார். பிற்காலத்தில் அவரது குடிப்பெயரையும் சேர்த்துக் குறமகள் இளவெயினி என்று வழங்கப் பெற்றார்’’[51].**

தன்னைச் சார்ந்தவர்கள் செய்யும் தவறைப் பொறுத்துக் கொள்ளுதல் பிறருடைய வறுமையைக் காணும்பொழுது அதை அறிந்து முன்னமே நீக்காதது தனது குற்றம் என எண்ணி வெட்கப்படுதல், போர்க்காலத்தில் பிற படையினர் பழி சொல்லாத அளவிற்கு வீரத்தில் சிறந்திருத்தல், அரசவையில் பெருமிதமாக நடத்தல் இவை அனைத்தும் பெற்றவன் எனது தலைவன் ஏறைக்கோன் ஆவான் என்பதை,

**‘‘தமர்தற் தப்பின் அதுநோன் நல்லும்**
**பிறர்கை யறவு தான்நா ணுதலும்,**
**படைப்பழி தாரா மைந்தினன் ஆகலும்**
**வேந்துடை அவையத்து ஓங்குடி நடத்தலும்**
**நும்மோர்க்குத் தகுவன அல்ல ; எம்மோன்**
**சிலைசெல மலர்ந்த மார்பின், கொலைவேல்,**
**கோடல் கண்ணிக் குறவர் பெருமகன் ;**
**ஆடுமழை தவிர்க்கும் பயங்கெழு மீமிசை,**
**எற்படு பொழுதின் இனம் தலை மயங்கிக்**
**கட்சி காணாக் கடமான் நல்லேறு**
**மடமான் நாகுபினை பயிரின், விடர்மழை**
**இரும்புலிப் புகர்ப்போத்து ஓர்க்கும்**
**பெருங்கல் நாடன் – எம் ஏறைக்குத் தகுமே’’[52]**

எனும் இப் புறநானூற்றுப் பாடலில் ஏறைக்கோனின் பண்புகளை எடுத்துக் கூறும்விதமாகக் குறமகள் இளவெயினி இப்பாடலை படைத்துள்ளார்.

## தாயங்கண்ணியார்

புறநானூற்றில் ஒரு பாடல் மட்டும் **(250)** இவர் பாடியுள்ளார். தாயங்கண்ணியார் என்பது இப்பெண்பாற் புலவரின் இயற்பெயராகும்.

பொதுவியல் திணையில் தாபத நிலைத் துறையில் பாடப்பெற்றது இப்பாடல். தாயங்கண்ணியாரின் இப்பாடல் இருவேறு காட்சிகளை உருக்கமுடன் உணர்த்துகிறது. மனைவி கணவனுடன் சேர்ந்து வாழ்ந்த காலத்தில் சமூகத்தில் பெற்றிருந்த உயர்நிலையும் கணவனை இழந்து கைம்மை நோன்பு மேற்கொண்டபோது கூந்தல் கொய்து, வளையல் நீக்கி, அல்லி உணவு உண்டு வாழும் அவல நிலையினையும் ஒரே பாடலில் வெளிக்காட்டியுள்ளார். இதனை,

**“குய்குரல் மலிந்த கொழுந்துவை அடிசில்**
**இரவலர்த் தடுத்த வாயில், புரவலர்**
**கண்ணீர்த் தடுத்த தண்நறும் பந்தர்க்**
**கூந்தல் கொய்து, குறுந்தொடி நீக்கி,**
**அல்லி உணவின் மனைவியோடு, இனியே**
**புல்என் றனையால் வளங்கெழு திருநகர் !**
**வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்**
**முனித்தலைப் புதல்வர் தந்தை**
**தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே”[53]**

எனும் இப் புறநானூற்றுப் பாடல் தாயங்கண்ணியாரின் கவித்திறத்தை வெளிப்படுத்துகின்றது. இப்பாடல் வழி கணவனை இழந்து வருந்தும் ஒரு பெண்ணின் அவலநிலையை உணர முடிகிறது.

## நக்கண்ணையார்

பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் என்று இவர் பெயர் வழங்கப்பட்டிருக்கிறது. அக்காலத்தில் புலவர் பெயர்களுக்கு முன் உறவுகளைக் குறிக்கும் வழக்கம் இருந்துள்ளது. அவ்வகையில் மகள் என்ற உறவு நக்கண்ணையார் பெயருக்கு முன் வழங்கப்பட்டிருக்கிறது. ‘நாய்கன்’ எனும் பெயர் வணிக மரபினரைக் குறித்துள்ளது. இதனை,

**“மாகவான் நிகர் வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்”[54]**

என்று கண்ணகியை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் அறிமுகப்படுத்துவதில் இருந்து உறையூரைச் சேர்ந்த மரக்கல வாணிகன் ஒருவரின் மகள்தான் கண்ணகி என்பது பெறப்படுகிறது. நக்கண்ணையார் புறநானூற்றில் மூன்று பாடல் (83, 84, 85) பாடியுள்ளார்.

உறையூரை ஆட்சி புரிந்து வந்த தித்தன் என்ற அரசனின் மகனான சோழன் கோப்பெருநற்கிள்ளியை நக்கண்ணையார் பாடிய புறப்பாடல்கள் ஒருதலைக் காமம் என்று கூறப்படும் கைக்கிளைத் திணையில் அமைந்துள்ளன. வீரக்கழல் புனைந்துள்ள கோப்பெருநற் கிள்ளியின் இளம்காளை போன்றுள்ள தோற்றத்தை நினைத்தபோது தன் வளையல்கள் நெகிழ்ந்ததையும் அவன் தோள்களைத் தழுவ விரும்பியதையும் நற்கிள்ளியைப் பார்க்க முடியாததால் பசலை நோய்க்கு ஆளானதையும் தம் புறப் பாடல்களில் வெளிக்காட்டியுள்ளது சிறப்பிற்குரியது. இதனை,

**"அடி புனை தொடுகழல் மை அணல் காளைக்கு என்**
**தொடி கழித்திடுதல், யான் யாய் அஞ்சுவலே ;**
**அடு தோள் முயங்கல் அவை நாணுவலே"[55]**

என்று பாடியுள்ளார். மேலும்

**"யாமே, புறஞ் சிறை இருந்தும் பொன் அன்னம்மே"[56]**

எனும் இப்புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது. இப்பாடல்கள் வழி காதல் கொள்ளை கொண்ட ஒரு பெண்ணின் மனநிலையை நக்கண்ணையார் வெளிப்படுத்தியுள்ளதை அறிந்து கொள்ள முடிகிறது.

## நெட்டிமையார்

நெட்டிமையார் புறநானூற்றில் 9, 12, 15 ஆகிய மூன்று பாடல்களைப் பாடியுள்ளார். அகப்பாடல்கள் எதுவும் எழுதவில்லை. இவர் ஆடவரா, மகளிரா என்ற ஐயம் நிலவியது. இவரது பாடல்களில் இடம் பெற்றுள்ள கருத்துக்களின் வாயிலாக இவர் பெண்பாற்புலவரே என்பது உறுதியாயிற்று.

போரில் விலக்கு உடையோராக,

**"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்**
**பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்**

**எம்மம்பு கடிவிடுதும்''**[57]

பசு, பார்ப்பன மாக்கள், பெண்டிர், பிணி உடையவர், புதல்வர் பெறாத ஆண், பெண் ஆகியோரைக் குறிப்பிட்டுள்ளார்.

**"அறத்தாறு நுவலும் பூட்கை மறம்''**[58]

எனும் பாடல்வரியில் குழந்தைகளைப் பெறாதவரை விலக்கு அளித்த ஐவருள் ஒருவராகக் குறிப்பிடுகிறார்.

தமிழர் குழந்தைப் பேற்றைச் செல்வம் என்றும், நன்கலம் என்றும் கருதும் இயல்பினர். அப்பெண்ணின் இயல்பே நெட்டிமையாரின் ஒன்பதாம் பாடலில் 'பொன்போல் புதல்வர் பெறாதீர்' என்று எதிரொலித்துள்ளது.

பெண்களின் கண்களுக்கு முதலில்படுவன மற்றவர் அணிந்திருக்கும் அணிகலன்களாகும். நெட்டிமையாரின் 'பொன்போல் புதல்வர்' எனும் அடியிலும், 12 ஆம் பாடலில் 'பொன்னாலான தாமரையைப் பாணர் அணிந்திருக்கும் காட்சியிலும், 15 ஆம் பாடலில் 'விளங்கு பொன் எறிந்த நலங்கிளர் பலகை' என்ற அடியிலும் நெட்டிமையாரின் கண்களில் தங்கம் முன்னிற்பது அவரை ஒரு பெண் என்று காட்டிக் கொடுக்கிறது.

பெண்ணின் கண்ணைக் கவரும் இன்னொரு கூறு தலையில் சூடியிருக்கும் மலர் ஆகும். நெட்டிமையாரின் 12 ஆம் பாடலில் 'பாணர் தலையில் அணிந்திருக்கும் தாமரை மலரும்', 15 ஆம் பாடலில் 'கடுந்தார் முன்பு தலைக்கொண்டதும்' எனும் அடிகளும் நெட்டிமையார் தம் பெண்ணியல்பைப் புலப்படுத்தும் பிறிதொரு சான்றாக உள்ளன.

'பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' சங்க அரசர்களிலேயே மிகப் பழமை வாய்ந்தவன். இவனது காலத்துப் பஃறுளி ஆறும், குமரிமலையும் கடல்கோளால் அழிந்தன என்பதை இளங்கோவடிகள்,

**"பஃறுளி ஆற்றுடன் பன்மலை அடுக்கத்துக்**
**குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள''**[59]

என்று குறிப்பிட்டுள்ளார்.

**"முந்நீர் விழவின் நெடியோன்**
**நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே''**[60]

எனும் அடிகளில் பாண்டியன் நெடுஞ்செழியனைக் குறிப்பிடுகையில் பஃறுளி ஆற்றைக் குறிப்பிடுகிறார். எனவே நெட்டிமையார் பழம்புலவர் என்பது தெரிகின்றது.

## பாரி மகளிர்

புறநானூற்றில் 112வது பாடல் பாரி மகளிர் பாடியது. கடையெழு வள்ளல்களுள் ஒருவரானவர் பாரி மன்னர் ஆவார். கொடைத் திறத்திற்கு இன்றளவும் பாரி வள்ளலையே அடையாளப்படுத்துகின்றார்கள் என்றால், எந்த அளவிற்கு அவரின் கொடைத்தன்மை சிறப்புற்று இருந்தது என்பதை உணர முடிகின்றது. இப்பாரி மன்னனின் சிறப்புக் கருதி இவர்கள் பாரி மகளிர் என்று அழைக்கப் பெற்றனர். மூவேந்தர்களின் வஞ்சனையால் தனது தந்தை, நாடு என அனைத்தும் இழந்தனர். பின்பு பாரியின் நண்பரான கபிலரால் இப்பெண்கள் பாதுகாக்கப்பட்டனர். தம் தந்தையை இழந்து தாங்கள் பட்ட துயரத்தைப் பாரிமகளிர் பாடலாகப் பாடி வெளிப்படுத்தினர். இதனை,

**''அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்**
**எந்தையும உடையேம் எம் குன்றும் பிறர்கொளார்**
**இற்றைத் திங்கள் இவ்வெண்ணிலவில்**
**வென்று எறி முரசின் வேந்தர் எம்**
**குன்றும் கொண்டார் யாம் எந்தையும இலமே''**[61]

என இப் புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது. பாரிமகளிருள் ஒருவர், வறுமைக் காலத்தில் தன்னை நாடி வந்த பாணனுக்குச் சோறு அளிக்க, நீர் பொருந்திய உலையில் பொன்னைப் பெய்து கொண்டு திறந்த சோறாக நல்கினாள் என்ற செய்தியை,

**''மாரி ஒன்று இன்றி வறந்திருந்த காலத்தும்,**
**பாரி மடமகள், பாண் மகற்கு, நீர் உலையுள்**
**பொன், திறந்து, கொண்டு புகர் வாக நல்கினாள்**
**ஒன்று உறா முன்றிலோ இல்''**[62]

எனும் புறநானூறுப் பாடல் பாரி வள்ளலிடம் இருந்த நற்பண்புகள் அவனது மகள்களிடத்தும் அமையப் பெற்றிருப்பதை உணர்த்துகிறது.

## பூங்கணுத்திரையார்

புறநானூற்றில் 277வது பாடல் இவரால் பாடப்பட்டது. உத்திரை என்பது இவரின் இயற்பெயராகும். காவிரியின் வடகரையில் உள்ள 'பூங்கண்' என்பது இவரின் ஊராதலால் பூங்கணுத்திரையார் என்ற பெயர் பெற்றார். முதியோள் ஒருத்தி, தன்

இளையனாகிய ஒரே ஒரு மகன் போரில் யானையால் கொல்லப்பட்ட இறப்புச் செய்தி கேட்டு அவனை ஈன்ற பொழுதை விடவும் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தாள் என்று பெண்ணின் வீர உணர்வினை வெளிப்படுத்தும் விதமாக இப்பாடலைப் பாடியுள்ளார். இதனை,

**“களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை**
**ஈன்ற ஞான்றினும் பெரிதே ; கண்ணீர்**
**நோன்கழை துயல்வரும் வெதிரத்து**
**வான்பெயத் தூங்கிய சிதறினும் பலவே”[63]**

என்ற இப் புறநானூற்றுப் பாடல் விளக்குகின்றது. இவ்வாறாகச் சங்ககாலப் பெண்கள் வீர உணர்வு மிக்கவர்களாக விளங்கினர் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது.

## பூதப் பாண்டியன் தேவி பெருங்கோப் பெண்டு

புறநானூற்றில் ஒரு பாடல் (246) பாடியுள்ளார் போரில் சேர சோழர்களை எதிர்த்துப் போராடும்பொழுது, பூதப் பாண்டியன் இறந்து விடுகிறான். இச் செய்தியை அறிந்த பெருங் கோப் பெண்டு கைம்மை நோன்பில் மேற்கொண்டு வாழும் பெண்கள் அணிலின் முதுகுப் பகுதியில் உள்ள வரிகளைப் போன்ற தோற்றம் கொண்ட வெள்ளரிக் காயினை வெட்டும்போது துண்டாகும் விதையை போன்று வெண்மையாக இருக்கும் நெய்யைத் தீண்டாமல் பழைய சோற்றுடன் எள்ளுத் துவையல், புளி கூட்டிச் சமைத்த வேளைக் கீரை ஆகியவற்றை உண்டு பாயின்றிப் பருக்கைக் கற்கள் மேல்படுத்துத் துன்பமான வாழ்க்கை வாழ்பவர்கள். அதனால் அவர்களைப் போல யாமும் வாழ விரும்பவில்லை. என் கணவன் இல்லாது இவ்வுலகில் என்னால் தனித்து வாழ முடியாது என சான்றோர்களிடம் கூறி உடன்கட்டை ஏறி தீக்குளிப்பதே நல்லது என்று கூறி ஒன்றோடு ஒன்று முரண்பட்ட நீரும் நெருப்பும் தனக்கு ஒரே உணர்வினை அளிப்பதாகக் கூறி தீப்பாய்கிறாள். இதனால் கைம்மையிலும் தீப்பாய்ந்து உயிர்விடுவதை மகிழ்வோடு விரும்பி ஏற்ற மனப்பாங்கினை,

**“பல்சான் றீரே ! பல்சான்றீரே**
**செல்கெனச் சொல்லாது, ஒலிகென விலக்கும்**
**பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே !**
**அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட”[64]**

என்று புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது. இவ்வாறாக சங்ககாலப் பெண்கள் தன் கணவன் இறந்தவுடன், தானும் உயிர்விடுவதே மகிழ்ச்சியானது என்று கூறி உயிர்விடுகின்றனர் என்ற இச்செய்தியை புலப்படுத்தும்விதமாக இப்பாடல் அமைந்துள்ளது.

## பேய் மகள் இளவெயினி

புறநானூற்றில் ஒரு பாடலைப் (11) பாடியுள்ளார். புலவரும் சேர மன்னனுமான பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பாடிய ஒரே புலவர் என்னும் பெருமைக்குரியவர் ஆவார். **“போர்களத்துப் பிணந்தின்னும் பேய்மகளிரை வியந்து விரிவாகப் பாடிய சிறப்பால் இளவெயினியார்குப் பேய்மகள் என்பது சிறப்புப் பெயராக அமைந்தது”**[65] என்று புலவர் கா.கோவிந்தன் கூறுகின்றார்.

மகளிர் பாவைக்கு பூச்சூட்டியும் ஆற்றில் பாய்ந்து நீர் விளையாட்டுகளிலும் ஈடுபட்டனர். வஞ்சி மாநகரைச் சார்ந்து பொருநை ஆறு ஓடியதும் பாணன், பாடினி, விறலி ஆகியோர் பரிசில் பெறும் தன்மை குறித்தும் பாடியுள்ளார். பொன் தாமரைப் பூவை வெள்ளி நாரால் தொடுத்து மன்னன் பாணனுக்கு வழங்கிய தன்மையை

**“ஒள்ளழல் புரிந்த தாமரை**
**வெள்ளி நாரால் பூப்பெற் றிசினே”** [66]

என்ற இப்பாடலடிகள் வழி இளவெயினி உணர்த்துகிறார்.

## பொன்முடியார்

புறநானூற்றில் இவர் பாடிய பாடல்கள் மூன்று (299, 310, 312) ஆகும். இவர் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் காலத்தில் வாழ்ந்தவர். ‘பொன்முடி’ என்ற ஊரைச் சேர்ந்த இவர் ஊரின் பெயராலே ‘பொன்முடியார்’ என அழைக்கப்படுகிறார்.

சிற்றரசனின் குதிரைகள் உழுந்தின் சக்கையைத் தின்றதனால் போர்க்களத்தில் கடலில் சீறிப்பாயும் தோணி போலப் பகைவருடைய நாட்டில் போர் செய்தது. ஆனால் பெருவேந்தர்களின் குதிரைகள் நெய் பெய்து மிதித்து அமைத்த உணவை உண்டதால் கொழுத்து போரிடாமல் பின்னிட்டு நின்றது. இது முருகன் கோயிலில் கலங்களைத் தொடாத, விலக்குடைய மகளிரைப் போல ஒதுங்கி நின்றது என்று கூறுகின்றார். இதனை,

**“பருத்தி வேலின் சீறூர் மன்னன்**
**உழுத்த அதர் உண்ட ஓய் நடைப்புரவி**
**கடல் மண்டு தோணியின், படைமுகம் போழ,**
**நெய்ம்மிதி அருந்திய, கொய்சுவல் எருத்தின்,**
**தண்ணடை மன்னர், தாருடைப் புரவி,**
**அணங்கு உடை முருகன் கோட்டத்துக்**
**கலம் தொடா மகளிரின், இகழ்ந்துநின் றவ்வே”[67]**

என்ற பொன்முடியாரின் பாடலடிகள் மூலம் அக்கால அரசர்களின் படைவலிமை புலனாகிறது.

## மாற்பித்தியார்

புறநானூற்றில் இரண்டு பாடல்கள் (251, 252) இப்புலவரால் பாடப் பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் தவ வாழ்க்கைப் பற்றிப் பாடிய பெண்பாற் புலவர் இவரே ஆவார். தான் பாடிய இரண்டு பாடல்களிலும் இல்லற வாழ்வினைத் துறந்து துறவியான ஒருவரைப் பற்றிப் பாடுகிறார் புலவர். துறவியானவர் வீரனாக இருந்தவன் என்பது ‘மள்ளர்’ என்னும் குறிப்பால் அறிய முடிகிறது. மேலும் நீண்டு வளர்த்த கருமை நீங்கிய செம்மை நிறமான திரிந்த சடையினையும் அருவி நீராடலையும் தீயின் வெப்பத்தில் தன் சடைமுடியை உலர்த்தியதையும் இவ்விரு பாடல்கள் உணர்த்துகிறது. இக்காட்சிகள் யாவும் அக்காலத்தில் வாழ்ந்த துறவிகளின் தோற்ற வடிவத்தினையும் வாழ்க்கை முறையினையும் காட்டுகிறது என்பர். இதனை,

**“கழைக்கண் நெடுவரை அருவியாடிக்,**
**கான யானை தந்த விறகின்**
**கடுந்தெறல் செந்தீ வேட்டுப்,**
**புறம்தாழ் புரிசடை புலர்த்து வோனே ?” [68]**
**“கறங்குவெள் அருவி ஏற்றலின், நிறம் பெயர்ந்து,**
**தில்லை அன்ன புல்லென் கடையோடு**
**அள்இலைத் தாளி கொய்யு மோனே” [69]**

என்று புறநானூற்றுப் பாடல் கூறுகிறது. மாற்பித்தியாரின் இப்பாடல்கள் வழி துறவிகளின் தவ வாழ்க்கையினை அறிய முடிகிறது.

## மாறோக்கத்து நப்பசலையார்

இவர் புறநானூற்றில் ஏழு பாடல்கள் (37, 39, 126, 174, 226, 280, 383) பாடியுள்ளார். இவர் நற்றிணையில் ‘பசலையின்’ சிறப்பை விளக்கமுறப் பாடியிருப்பதால் இப்பெயர் பெற்றுள்ளார். இப்பெயருடன் இணைந்திருக்கும் ‘மாறோக்கம்’ என்பது அவர் பிறந்த ஊரினைக் குறிக்கக் கூடியது ஆகும். இதனை இணைத்து ‘மாறோக்கத்து நப்பசலையார்’ என இவரை அழைத்தனர்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் புகழ்ந்து இதில் மூன்று பாடல்களும் (37, 39, 226), கடையெழு வள்ளல்களில் ஒருவனான மலையமான் திருமுடிக்காரி மீது ஒரு பாடலும் (126) காரியின் மகனான சோழிய ஏனாதி திருக்கண்ணனைப் பற்றி ஒரு பாடலும் (174), திருமுனைப்பாடி நாட்டு அரசன் அவியின்மீது ஒரு பாடலும் (280) பாடியுள்ளார். மன்னர்களின் வீரத்தினையும் புகழையும் கொடைத் திறத்தையும் பதிவு செய்து தன்னை ஒரு வரலாற்று புலவராகப் பதிவு செய்து கொண்டார் மாறோக்கத்து நப்பசலையார். இவர் ஔவைக்கு அடுத்தபடியாக அதிகப் புறப்பாடல்களைப் பாடியவர் என்று கூறுகின்றனர்.

சோழ மன்னனான கிள்ளி வளவனது கொடைத்திறம், வீரம், ஆட்சிமுறை முதலியவற்றை புகழ்ந்து பாடுகின்றார் நப்பசலையார். புறாவிற்காகத் தன் தசையையே அறிந்து தந்த சிபியின் மரபில் வந்தவன் கிள்ளிவளவன். ஆதலால் ஈகை அவனுக்கு ஒரு பொருட்டு அன்று என்கிறார். பகைவர்கள் அஞ்சி நெருங்குவதற்கு இயலாத வான் தவழும் கோட்டைகளை அழித்த உன் முன்னோர்களை நினைப்பின் பகைவரை வெற்றி பெறுதலும் உனக்கு இயல்பானது என்று பாடுகிறார். ஆனால் அது புகழ் தருவதன்று. கெடுதல் இல்லாத வீரம் விளங்கும் சோழர்களின் உறையூர் அவையத்தில் அறம் நிலைபெற்றது. ஆதனால் நீதி வழங்குவதும் இயல்பானதே. அதுவும் உனக்குத் தனிப்புகழைத் தருவதன்று. அதனால் வீரம் மிக்கு எழுந்த போரை வென்ற கணைய மரத்தை ஒத்த வலிமையான தோளை உடைய கண்கவரும் மாலையையும் துள்ளும் குதிரையையும் உடைய சோழனே ! நான் எவ்வாறு உன்னிடம் சொல்வேன் உனது உயர்ந்த எல்லையைப் பனி படர்ந்த உச்சிகளைக் கொண்ட இமயமலையில் சூட்டப்பெற்ற காவலாகிய வில் பொறியையும் வேலைப் பாடமைந்த தேரையும் உடைய சேரனின் அழகிய அழிவில்லாத வஞ்சி நகரை அழிக்கும் உன் பெருமை பொருந்திய வலிமையான

முயற்சியைப் பாடும்பொழுது அதற்கு எல்லையே இல்லை என்று புகழ்ந்து பாடுகிறார். இதனை,

**“புறவின் அல்லல் சொல்லிய கறையடி**
**யானை வான்மருப்பு எறிந்த வெண்கடைக்**
**கோல் நிறை துலாஅம் புக்கோன் மருக**
**ஈதல்நின் புகழும் அன்றே சார்தல்**
**ஒன்னார் உட்கும் துன் அருங் கடுந் திறல்**
**தூங்குஎயில் எறிந்த நின் ஊங்கணோர் நினைப்பின்,**
**அடுதல் நின் புகழும் அன்றே கெடு இன்று,**
**மறம் கெழு சோழர் உறந்தை அவையத்து,**
**அறம் நின்று நிலையிற்று ஆகலின், அதனால்**
**முறைமை நின் புகழும் அன்றே மறம் மிக்கு**
**எழு சமம் கடந்த எழு உறழ் திணி தோள்,**
**கண்ணார் கண்ணி, கலிமான், வளவ**
**யாங்கனம் மொழிகோ யானே ஓங்கிய**
**வரை அளந்து அறியாப் பொன்படு நெடுங் கோட்டு**
**இமயம் சூட்டிய ஏம விற்பொறி,**
**மாண்வினை நெடுந்தேர், வானவன் தொலைய,**
**வாடா வஞ்சி வாட்டும் நின்**
**பீடு கெழு நோன்தாள் பாடுங் காலே”[70]**

எனப் புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது. இதைப் போலவே

கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய மலையமான் திருமுடிக்காரியைப் புகழ்ந்து பாடிய கபிலர், காரி மற்றும் திருமுடிக்காரியின் மகன் மலையமான் சோழிய வேனாதி திருக்கண்ணனையும் புகழ்ந்துள்ளார். இதனை,

**“புலன் அழுக்கு அற்ற அந்தணாளன்”[71]**

**“பொய்யா நாவின் கபிலன் பாடிய**
**மை அணி நெடுவரை ஆங்கண்”[72]**

என இப் புறநானூற்றுப் பாடல் சான்று பகர்கின்றது. இப்பாடல் வழி அக்கால கடையெழு மன்னர்களின் வீரம், கொடை மற்றும் ஆட்சித்திறத்தை அறிந்துகொள்ள முடிகிறது.

## முடத்தாமக்கண்ணியார்

சங்க இலக்கியப் பத்துப்பாட்டில் உள்ள பொருநர் ஆற்றுப்படையின் பெண்பாற் புலவர் இவர் ஒருவரே ஆவார். இது **248** அடிகள் கொண்டது. சங்கப் பேரரசர்களுள் இன்றளவும் அனைவராலும் நினைவு கூறப்பெறும் வரலாறு போற்றும் ஒரே பேரரசன் ‘சோழன் கரிகாற் பெருவளவன்’ ஆவான். அவ்வரசனிடம் பரிசில் பெற்று வரும் பொருநன் தன் வழியில் எதிர்ப்படும் பொருநனைக் கரிகால் பெருவளவனிடம் ஆற்றுப்படுத்துவதாகப் பொருநராற்றுப்படை அமைந்துள்ளது.

புலவர் தம் பாடலில் முதலில் பாணனின் வறுமை நிலையை எடுத்துக் கூறுகிறார். உணவு உண்ணாமல் வாடக்கூடிய பொருநரை,

**“அறாஅ யாணர் அகன்தலைப் பேரூர்**
**சாறுகழி வழிநாள், சோறுநசை உறாது,**
**வேறுபுலம் முன்னிய விரகு அறி பொருந”**[73]

என அறிமுகம் செய்கிறார். இவ்வடியில் அவலத்தைக் காட்ட மனமில்லாமல் ‘அகன்தலைப் பேரூர்’ என்று மகிழ்வூட்டும் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார் புலவர். அடுத்து ஆற்றுப்படுத்தக்கூடிய பொருநரின் உயரிய பண்பினை எடுத்துக் காட்டுகிறார். பரிசு பெற்ற பொருநன் எதிர்ப்படும் பொருநனை தாம் செல்லும் வழியறியாமல் தவறான பாதையில் சென்று பயனடையாமல் போகக்கூடும். எனவே, அவர்களை உரிய வழியில் ஆற்றுப்படுத்துவது தனது கடமை என்று கூறி ஆற்றுப்படுத்துவதை,

**“அறியாமையின் நெறி திரிந்து ஒராஅது**
**அற்று எதிர்ப்படுதலும் நோற்றதன் பயனே ;**
**போற்றிக் கேண்மிதி, புகழ் மேம்படுந !”**[74]

என இப்பாடல் விளக்குகின்றது.

கரிகால் வளவனை அறிமுகப்படுத்தும் காட்சியில் அவ்வரசனின் முழு வரலாற்றினையும் சுருக்கமாகவும் தெளிவாகவும் வரலாற்று நோக்குடன் எவ்வித வர்ணனைகளும் இன்றி அழகான இனிமை பயக்கும் சொற்களைக் கொண்டு பாடியுள்ளார் புலவர்.

**“. . . . . . . வென்வேல்**
**உருவப் பல்தேர் இளையோன் சிறுவன்**
**முருகற் சீற்றத்து உருகெழு குருசில்,**

**தாய் வயிற்றிருந்து தாயம் எய்தி,**
**எய்யாத் தெவ்வர் ஏவல் கேட்ப,**
**செய்யார் தேஎம் தெருமரல் கலிப்ப**
**பவ்வ மீமிசைப் பகற்கதிர் பரப்பி,**
**வெவ்வெஞ் செல்வன் விசும்பு படர்ந்தாங்கு,**
**பிறந்து தவழ் கற்றதன் தொட்டு, சிறந்தநன்**
**நாடுசெகிற் கொண்டு நாள்தொறும் வளர்ப்ப,**
**ஆளிநன் மான் அணங்குடைக் குருளை**
**மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி**
**முலைக்கோள் விடாஅ மாத்திரை, ஞெரேரென,**
**தலைக்கோள் வேட்டம் களிறு அட்டாங்கு**
**இரும்பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை**
**அரவாய் வேம்பின் அம்குழைத் தெரியலும்,**
**ஓங்கு இருஞ் சென்னி மேம்பட மிலைந்த**
**இருபெரு வேந்தரும் ஒரு களத்து அவிய,**
**வெண்ணித் தாக்கிய வெருவரு நோன் தாள்,**
**கண் ஆர் கண்ணி, கரிகால் வளவன்”[75]**

எனும் இப்பாடலில் முருகனைப் போன்று வீரமும் அழகும் உடையவன். தாய் வயிற்றில் இருக்கும் போதே தந்தையை இழந்ததால் அரசு உரிமையைப் பெற்றவன். சிறு வயதிலேயே தான் கூறுவதைப் பிறர் கேட்கும் ஆற்றல் உடையவராக விளங்கினான். பகைவரைத் தனது வலிமையால் அவர்களை வென்று தன் நாட்டை காத்தவன். குழந்தைப் பருவத்திலேயே மிகுந்த வலிமையுடையவனாய் வெண்ணிப் பறத்தலை என்ற இடத்தில் பனம்பூவைச் சூடிய சேரனையும் வேப்பமாலையை அணிந்திருந்த பாண்டியனையும் ஒரே நேரத்தில் வென்று வாகை சூடியவன் கரிகாலன் என்று பிறப்பு முதல் போர் வெற்றி வரை முழு வரலாற்றையும் இப்பாடலிலேயே பதிவு செய்துள்ளார். மேலும் அரசனின் கொடைத் தன்மைகளையும் யாழ் என்ற இசைக் கருவியையும் ஏழு வகையான பண்களையும் மக்கள் ஒற்றுமையும் விறலியரின் முடி முதல் அடி வரையிலான (கேசாதி பாதம்) வருணனைகளையும் விருந்தோம்பல் திறத்தினையும் முடத்தாமக் கண்ணியார் தன் கவிநயத்தால் அழகுபட எடுத்துக் கூறியுள்ளார்.

## வெண்ணிக்குயத்தியார்

புறநானூற்றில் ஒரு பாடல் (66) பாடியுள்ளார். இப்புலவர் ஊர்ப் பெயரையும் குடிப் பெயரையும் இணைத்துத் 'வெண்ணிக்குயத்தியார்' என அழைக்கப்பட்டார். இவர் கரிகாற் பெருவளத்தானைப் பாடியுள்ளார். இதில் சோழன் வெண்ணிப் பறந்தலை என்னும் பகுதியில் நடைபெற்ற போரின் வெற்றியையும் சேரமான் பெருஞ்சேரலாதன் தான் புறப்புண் பட்டுத் தோற்றுவிட்டோமே என்று எண்ணி அப்போர்க்களத்திலேயே வடக்கிருந்து உயிர்விட்டான் என்ற செய்தியையும் பாடியுள்ளார். சேரமானின் இத் தன்மான உணர்வால் கவரப்பட்ட குயத்தியார் தம் வேந்தனை பொய்ப் புகழால் புகழாமல் தன் உள்ளத்தில் தோன்றிய உண்மைக் கருத்தைப் புலப்படுத்திப் பாடியுள்ளார். இதனை,

**"கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை**
**மிகப்புகழ் உலகம் எய்திப்**
**புறப்புண் நாணி வடக்கிருந் தோனே"** [76]

என இப்புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது. இப்பாடல்வழி சேரமான் பெருஞ்சேரலானின் தன்மான உணர்வை வெண்ணியக்குயத்தியார் உணர்த்திய பாங்கை அறிய முடிகிறது.

## வெள்ளைமாளர்

புறநானூற்றில் ஒரு பாடல் (296) பாடியுள்ளார். இவர் பாடிய 'ஏறான் முல்லை' பாடல் மிக்க பொருள் நயம் உடையது என்று உ.வே.சாமிநாதையர் சிறப்பித்துக் கூறுகிறார். போருக்குச் சென்ற வீரர்கள் அனைவரும் வீடு திரும்பிய நிலையில், ஒரு வீரன் மட்டும் வராமல் இருந்து அவனது தேர் மட்டும் தாமதமாக வந்ததைக் கண்டோர் கூறுவதாக இப்பெண்பாற் புலவரின் பாடல் அமைந்துள்ளது. இதில் போரில் புண்பட்டவர்கள் எளிதில் தொற்றுநோய்க் கிருமிகளால் தாக்குதலுக்கு உள்ளாகிப் புண்கள் ஆறாத ரணமாகிவிடும் என்பதனால் அவர்கள் இருக்கும் வீட்டினில் வேப்பிலையைச் செருகி வைப்பதுடன், வலியால் துன்பப்படும் வீரர்களை அமைதிப்படுத்தி 'காஞ்சிப் பண்ணை' பாடுவதிலும் கடுகினைத் தீயிலிட்டு உண்டாகும் புகையை வீட்டில் பரவச் செய்வதனையும் கூறுகின்றார். இதனை,

**"வேம்புசினை ஒடிப்பவும், காஞ்சிபாடவும்**
**நெய்யுடைக் கையர் ஐயவி புகைப்பவும்**
**எல்லா மனையும் கல்லென் றவ்வே**
**வெந்துஉடன் எறிவான் கொல்லோ**

**நெடிதுவந் தன்றால் நெடுந்தகை தேரே ?"[77]**

என இப்புறநானூற்றுப் பாடல் விளக்குகின்றது. வீரர்கள் திரும்பி வந்ததனால் அவர்களது சுற்றத்தார் மகிழ்ச்சியில் இருந்ததாகப் புலவர் கூறுகிறார்.

## வெறிபாடிய காமக்கண்ணியார்

இவர் புறநானூற்றில் இரண்டு பாடல்கள் (271, 302) பாடியுள்ளார். 'காமக் கண்ணி' என்னும் பெயர் பார்ப்போர் விரும்பும் கண்களை உடையவள் என்று பொருள்படும் 'வெறியாடல்' இதனை 'வேலன் வெறியாட்டு' என்று குறிப்பிடுவர். இவருடைய அகப் பாடல்கள் வெறியாடலைப் பற்றி சிறப்பாகப் பாடுவதால் 'வெறிபாடிய காமக் கண்ணியார்' என்று அழைக்கப்பட்டார்.

போரில் வேலினால் தாக்கி யானையைக் கொன்ற வீரனின் பேராற்றலை எண்ணிப் பார்த்தால் மேகம் பொழியும் மழைத்துளிகளை விடவும் விண்ணில் உள்ள விண்மீன்களை விடவும் போர்க்களத்தில் வீரர்களால் கொல்லப்பட்ட யானைகளின் எண்ணிக்கை அதிகம் என்பதை,

**"நோக்கினார்ச் செகுக்கும் காளைஊக்கி**
**வேலின் அட்ட களிறுபெயர்த்து எண்ணின்**
**விண்ணிவர் விசும்பின் மீனும்**
**தண்பெயல் உறையும், உறையாற் நாவே"[78]**

என இப்புறநானூற்றுப் பாடலின்வழி புலவர் விளக்குகின்றார்.

சங்கப் புறப்பாடல்களில் இடம் பெற்றுள்ள பெண்பாற்புலவர்கள் கல்வியில் சிறந்து விளங்கினர் என்பதை இப்பாடல்களின் வழி அறிய முடிகின்றது. சங்க காலத்தில் ஆடவரகளைப் போல பெண்பாற் புலவர்களும் அரசவைக் கவிஞராகவும் அரசியல் தூது செல்பவராகவும் இரக்க குணம் உடையவராகவும் நட்பு நலம் பாராட்டக் கூடியவராகவும் ஒற்றுமையைப் பேணுபவர்களாகவும் அறக்கருத்துக்களை உணர்த்துபவர்களாகவும் பண்பாட்டை நிலை நிறுத்துபவர்களாகவும் வீரத்தில் சிறந்தவர்களாகவும் தன் கடமையைச் செவ்வனே செய்யக் கூடியவர்களாகவும் விளங்கினர் மகளிர் என்பதை இப்பாடல்கள் வழி உணர முடிகிறது.

## விருந்தோம்பல்

இல்லற மகளிரின் இன்றியமையாப் பண்புகளுள் ஒன்று விருந்தோம்பல். விருந்தோம்பல் என்பது அன்றும் இன்றும் நடைமுறையில் உள்ள ஒரு பண்பாட்டு நிகழ்வாகும்.

**“விருந்தே தானும்**

**புதுவது கிளந்த யாப்பின் மேற்றே” [79]**

என்ற நூற்பாவில் தொல்காப்பில் ‘விருந்து’ என்பதைப் ‘புதுமை’ என்றும் (புதிதாய் வந்தோர்க்கு உணவு கொடுத்தல்) விருந்தினர் என்பதற்கு அதிதியர், புதியோர் என்றும் விருந்தோம்பல் என்பதற்கு வேளாண்மை, மாந்தரியல்பினொன்று’ என்று தமிழ்மொழி அகராதிகள் விளக்கம் தருகின்றன.

விருந்தோம்பல் என்பது சங்க காலத்தில் உறவினர்களை வரவேற்று உபசரித்தல் என்னும் பொருளில் பின்பற்றப்படவில்லை. அன்று விருந்தினர் என்பவர் முன் பின் அறியாத புதியவர்களாக இருந்துள்ளனர். ஆதலால் அறியாதவர் பசியோடும் தாகத்தோடும் வருவாராயின் அவருக்கு வேண்டிய உணவையும் நீரையும் முக மலர்ச்சி யோடு கொடுத்து உபசரித்தலையே விருந்தோம்பல் என்று அழைத்தனர். இத்தகைய விருந்தினரை அகமும் முகமும் மலரும்படி வரவேற்று உபசரிக்க வேண்டும். இல்லை யென்றால் முகர்ந்து பார்த்த அளவிலே வாடிவிடும் அனிச்சப் பூப்போல, விருந்தளிப்பவரின் முகம் திரியும்போது விருந்தினரின் முகம் வாடி உள்ளம் வருந்தி நிற்பர் என்பதை,

**“மோப்பக் குழையும் அனிச்சம் முகம் திரிந்து**

**நோக்கக் குழையும் விருந்து” [80]**

என்ற குறட்பாவின் மூலம் விளக்கியுள்ளார். சங்க காலத்தில் விருந்தோம்பல் இல்வாழ்க்கையின் சிறந்த அறமாகக் கருதப்பட்டது. அதனால்தான்,

**“விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்” [81]**

என்று தொல்காப்பியர் கூறியுள்ளார். சங்க காலத்தில் பெண்களுக்கு விருந்தோம்பல் பண்பும் சுற்றத்தைப் பாதுகாக்கும் பொறுப்பும் தலையாய கடமையாக இருந்துள்ளது என்பதை நாம் அறிய முடிகிறது.

## ஐவகை நில மகளிரும் விருந்தோம்பலும்

### குறிஞ்சி நில மக்களின் உணவு முறை

மலையும் மலைசார்ந்த பகுதிகளும் குறிஞ்சி நிலமாகும். குறிஞ்சி நில மக்கள் சிலம்பன், குறவன், வெற்பன், வேட்டுவர், கானவர், குறத்தி, கொடிச்சி என அழைக்கப்பட்டனர். இவர்கள் வில், அம்பு, வேல் ஆகியவற்றின் துணையுடன் வேட்டையாடி வாழ்ந்தனர். மூங்கிலரிசி, திணை, மலைநெல், தேன், கிழங்குகள் ஆகியன உணவாகப் பயன்பட்டன. மான் முதலிய விலங்குகளின் மாமிசத்தோடு முள்ளம்பன்றியின் மாமிசத்தையும் இவர்கள் விரும்பி உண்டனர் என்பதை,

**"வன்கைக் கானவன் வெம்சிலை வணங்கி**
**உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையோடு**
**மனைவாய் ஞமலி ஒருங்குபுடை ஆட**
**வேட்டுவலம் படுத்த உவகையன் காட்ட**
**நடுகாற் குரம்பைத்தன் குடிவயிற் பெயரும்" [82]**

எனும் பாடலடிகள் உணர்த்தி நிற்கின்றன. சோழநாட்டு குறிஞ்சி நில மக்கள் தேனையும் கிழங்கையும் மகிழ்வோடு உண்டனர். மேலும் இவ்விரு பொருட்களையும் நெய்தல் நில மக்களிடம் விற்றுவிட்டு அதற்குப் பதிலாக மீன், நெய், நறவை (கள்) உண்பதற்காக வாங்கிச் சென்றனர் என்பதை,

**"தேனெய்யொடு கிழங்கு மாறியோர்**
**மீன் நெய்யொடு நறவு மறுகவும்" [83]**

என வரும் பொருநராற்றுப் படை அடிகள் கூறுகின்றன. இப்படிக் கிடைத்த பொருளை தான் மட்டும் உண்ணாமல் வரும் விருந்தினர்களுக்கும் கொடுத்து உபசரித்தனர் என்பதை,

**"தேனினர் கிழங்கினர் ஊன்ஆர் வட்டியர்**
**சிறுகண் பன்றிப் பழுதுளி போக்கிப்**
**பொருதுதொலை யானைக் கோடுசீர் ஆகத்**
**தூவொடு மலிந்த காய கானவர்**
**செழும்பல் யாணர்ச் சிறுகுடிப் படினே**
**இரும்பேர் ஒக்கலொடு பதம்மிக்கப் பெறுகுவீர்" [84]**

என்று இப்பாடல்வழி உணர முடிகின்றது.

**“பரூ உக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு**
**குரூஉக் கண் இறடிப் பொம்மல் பெறுகுவீர்” [85]**

எனும் மலைபடுகடாம் பாடலில் வேடுவர்களின் சிறுகுடிகள் பெரிய மலைப்பக்கத்தில் அமைந்துள்ளன. இவர்கள் தாம் வென்ற யானைகளைக் காவு மரமாகக் கொண்டு தேன், கிழங்கு, பன்றியின் தசைகள் போன்ற உணவுப் பொருட்களைத் தொங்கவிட்டுச் சுமந்து வந்து சேகரிப்பர். இவ்வுணவுகளை ஊர்களுக்குள் வரும் விருந்தினர்களுக்கு உண்ணக் கொடுத்து, தங்குவதற்கு இடமும் அளித்தனர். மேலும் பெரிய தசையை நெய்யில் பொரித்தும் வேக வைத்தும் அழகிய நிறமுடைய திணையரிசி சோறுடன் வேட்டுவ மகளிர் விருந்து வழங்கினர் என்பதையும் இப்பாடல்வழி அறிய முடிகின்றது.

நறிய மலர் சூடி மணம் வீசும் கரிய கூந்தலையுடைய குறவர் இன மக்கள், மன மகிழ்வுடன் உள்ளம் உவப்ப தங்கள் பிள்ளைகளை அனுப்பி, அவர்களின் உறவுமுறைகளைச் சொல்லி அவ்வழியில் செல்லும் கூத்தர்களைத் தடுத்து நிறுத்தி உணவினை வழங்கினர் என்பதை,

**“குறமகள் ஆக்கிய வால்அவிழ் வல்சி**
**அகம்மலி உவகை ஆர்வமொடு அளைஇ**
**மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவீர்” [86]**

எனும் பாடல் அடியில் உணர முடிகிறது. மேலும் குறிஞ்சி நில மகளிர் அளிக்கும் விருந்தானால் பரிசில் பெறுவதையே மறந்து மலையிலேயே தங்கியிருந்தனர் கூத்தர்கள் என்பதை,

**“செருச்செய் முன்பின் குருசில் முன்னிய**
**பரிசில் மறுப்ப, நீடலும் உரியிர்**
**அனையது அன்று, அவன் மலைமிசை நாடே” [87]**

என்று இப்பாடல் உணர்த்துகிறது. இப்பாடல்கள் வழி குறிஞ்சி நில மக்களின் விரும்தோம்பும் பண்பினையும் அவர்களின் உணவுமுறையினையும் அறிய முடிகிறது.

## முல்லைநில மகளிரின் விருந்தோம்பல்

‘காடும் காடு சார்ந்த பகுதியும் முல்லை நிலமாகும்’. இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் போன்றோர் வாழ்ந்தனர். ஆடு, மாடுகளை மேய்க்கும் மேய்ச்சல் நில வாழ்க்கையை மையமாகக் கொண்டது முல்லை நிலமாகும். முல்லை நிலத்தில் உணவு தேடும் வாழ்க்கையைக் கடந்து உணவு உற்பத்தி செய்யும் நிலை உருவானது. ஆயர்

மகளிர் வரகுச் சோற்றையும் வேளப்பூவைத் தயிரோடு சேர்த்து செய்த புளியங் கூழையும் உணவாகக் கொண்டனர் என்பதை,

**"நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன**
**இன் சுரல் முரல்"** [88]

எனும் இப்பெரும்பாணாற்றுப் படை பாடலால் அறிய முடிகிறது.

முல்லை நில மக்களாகிய இடையர்கள் ஆடு, மாடுகளைக் கொண்டு செல்பவர்களாயினும் அவர்களுடைய உணவுமுறையோ புன்செய்த் தானியங்கள் ஆகும். நண்டுக் குஞ்சுகளைப் போலக் காணப்படும் திணைச் சோறும் பாலும் அவர்கள் உட்கொள்ளும் உணவாகும். இவ்வகையான உணவுகளையே விருந்தினர்களுக்கும் கொடுத்து உபசரிப்பர். இதனை,

**"மடிவாய்க் கோவலர் சேப்பின்**
**இருங் கிளை நெண்டின், சிறுபார்ப்பு அன்ன**
**பசுந்திணை முரல் பாலொடும் பெறுகுவீர்"** [89]

என வரும் இவ்வடிகளில் உணர முடிகின்றது. மேலும்

**"பருவ வானத்துப் பா மழைக் கடுப்பக்**
**கருவை வேய்ந்த கவின் குடிச் சீறூர்**
**நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன**
**குறுந்தாள் வரகின் குறள் அவிழ்ச் சொன்றி**
**புகர் இணர் வேங்கை வீ கண்டன்ன**
**அவரை வான் புழுக்கு அட்டி பயில்வுற்று**
**இன்சுவை முரல் பெறுகுவீர்"** [90]

எனும் இப்பாடலில் மழைக்காலத்தில் வானத்தில் மேகங்கள் தோன்றுவது போல அவர்களுடைய குடிசைகள் வரகு வைக்கோலால் உரை போடப்பட்டிருந்தது. அழகிய சிறிய ஊராக அது அமைந்தது. அங்கு இருக்கும் மக்கள் வரகினைச் சமைத்து அதற்கு அவரை பருப்பை அவித்து வரகுச் சோற்றோடு தாமும் உண்டு விருந்தினராகிய பாணர்களுக்கும் மிகுதியாக வழங்கினர் என்பதை உணர முடிகின்றது. மேலும்

**"வேளை வெண்பூ வெண் தயிர்க் கொளீஇ**
**ஆய்மகள் அட்ட அம் புளி மிதவை**
**அவரை கொய்யுநர் ஆர மாந்தும்"** [91]

எனும் புறநானூற்றுப் பாடலில் ஆயர் மகளிர் வரகரிசியைக் குற்றிச் சமைத்த சோற்றையும் வேளைப்பூவைத் தயிரில் இட்டு சமைத்த அழகிய புளித்தக் கூழினையும் அவற்றோடு அவரைக் காய்களையும் விருந்தினர்க்கு உண்ணக் கொடுத்தனர் என்று பாடப்பட்டுள்ளதன்மூலம் பண்டைத் தமிழரின் விருந்தோம்பல் பண்பை உணர முடிகிறது.

விடியற்காலைப் பொழுதில் பறவைகள் எழும்போதே எழுந்து விடும் ஆயர்மகள், தன் கடமையான தயிரைக் கடைந்து, வெண்ணெய், மோர் இவற்றைத் தனியாகக் கடைந்து எடுத்து, மோரை விற்க செல்லுகின்றாள். மோரை விற்றதனால் கிடைத்த உணவுப் பொருள்களைக் கொண்டு உறவினர்களுக்கு விருந்தோம்புகின்றாள்.

**“நள் இருள் விடியல் புள் எழப் போகி**
**புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி**
**உறைஅமை தீம்தயிர் கலக்கி, நுரைதெரிந்து**
**புகழ்வாய் குழிசி பூஞ்சுமட்டு இரிஇ”** [92]

என்று கூறுகின்றது. மேலும் தன் வீட்டிற்கு இரவு நேரத்தில் வரும் கூத்தர்களுக்கு

**“பாலும் மிதவையும பண்ணாது பெறுகுவீர்**
**துய்ம்மயிர் அடக்கிய சேக்கை அன்ன**
**மெய் உரித்து இயற்றிய மிதி அதள் பள்ளித்”** [93]

என உணவாகப் பாலும் பால் சோறும் அளித்தனர். பின் விலங்குகளின் தோல் படுக்கையில் உறங்கினர் என்று கூறுகின்றது. இப்பாடல்களின் வழி முல்லைநில மக்களின் விருந்தோம்பும் பண்பினையும் வாழ்வியல் சூழ்நிலைகளையும் உணவுப் பழக்கவழக்கங்களையும் அறிய முடிகின்றது.

## மருத நில மக்களின் விருந்தோம்பல்

‘வயலும் வயல் சார்ந்த பகுதிகளும் மருத நிலமாகும். மக்கள் ஊரன், உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் என அழைக்கப் பெற்றனர். இவர்களின் முதன்மையான தொழிலே வேளாண்மையாகும். ஆதலால் இங்கு வாழும் மக்கள் வேற்றுநில மக்களைக் காட்டிலும் செல்வச் சிறப்புடையவர்களாக விளங்கினர். சோழ நாடு எப்போதும் வளமுடையதாக இருக்கும். ஆகையால் அங்கு கரும்பு, நெல், பழங்கள், காய்கள், கீரை வகைகள் போன்ற உணவுப் பொருட்கள் மிகுந்து காணப்பட்டன.

விளைந்த நெல்லை அறுவடை செய்யும் காலத்தில், நெல் அறுப்பவர் நீரின் கடைமடையில் பிடித்த வாளை மீனையும், உழவர்கள் ஆமையையும் கரும்புக்

காடுகளிலிருந்து கொண்டு வரப்பட்ட தேனையும் பெரிய நீர்த்துறைகளிலிருந்து பெண்கள் கொண்டு வந்த செங்கழுநீர்ப் பூவையும் கொண்டு விருந்தினர்களுக்கு விருந்தளித்தனர் என்பதை,

**"பெருவிறல் யாணர்த் தாகி அரிநர்**
**கீழ்மடைக் கொண்ட வாளையும் உழவர்**
**படைமிளிர்ந் திட்ட யாமையும் அறைநர்**
**கரும்பிற் கொண்ட தேனும் பெருந்துறை**
**நீர்தரு மகளிர் குற்ற குவளையும்**
**வன்புலர்க் கேளிர்க்கு வருவிருந்தயரும்**
**மென்புல வைப்பின் நன்னாட்டுப் பொருந"** [94]

என இப்பாடல் கூறுகிறது.

முள்ளை நீக்கி சமைத்த மீன் துண்டங்கள் கலந்த வெண்மையான நிறத்தை உடைய சோற்றைக் கூத்தர்கள் சுற்றத்தோடு பெற்றனர்.

**"முள்ளரித்து இயற்றிய வெள்ளரி வெண்சோறு"** [95]

என்ற இப்பாடல் விருந்து பெற்றதை எடுத்துக் கூறுகின்றது.

தன் பிள்ளைகளால் பாணர்களைத் தடுத்து, வரவழைக்கப்பட்டு நண்டினது கலவையோடு வெண்சோற்றினையும் உண்ணத் தந்தார்கள் என்பதை,

**"அவைப்பு மாண் அரிசி அமலை வெண்சோறு,**
**கவைத்தாள் அலவன் கலவையொடு பெறுவீர்"** [96]

என்று உணவு அளித்ததை கூறும்விதமாக அமைந்துள்ளது. இப்பாடல்வழி மருதநில மக்களின் விருந்தோம்பும் பண்பினை உணர முடிகின்றது.

## நெய்தல் நில மக்களின் விருந்தோம்பல்

கடலும் கடல் சார்ந்த பகுதிகளும் நெய்தல் நிலமாக அமைந்துள்ளன. சோழ நாட்டின் தலைநகராகிய 'காவிரிப்பூம்பட்டினம்' கடலால் ஆன பகுதி என்பதால் செழிப்பாகக் காட்சியளிக்கும். இம் மக்கள் மீனை உணவாகக் கொண்டுள்ளனர். இங்கு வாழும் மக்கள் யாதவர், நுளைச்சியர், நுளையர், சேர்ப்பன் போன்றோர் ஆவார்.

இம்மக்கள் தன்னை நாடி வருவோருக்கு மனமுவந்து உணவளிக்கும் பாங்கினை,

**"நுதிவேல் நோக்கின் நுளைமகள் அரிந்த**
**பழம்படு தேறல் பரதவர் மடுப்பக்"** [97]

**“வறல் சூழல் சூட்டின் வயின்வயின் பெருகுவீர்”** [98]

எனும் இப்பாடல் உணர்த்துகிறது. நுளைச்சியர் காய்ச்சிய கள்ளை பரதவர் வழங்க, குழல் மீன் சூட்டுடன் அதனை உண்டு மகிழ்ந்தனர் என்றுரைக்கப்பட்டுள்ளது. மேலும் கடலில் வலை வீசிக் கொண்டு வந்த வாளைமீன் தசையைத் தூண்டிலில் சிக்கிய துதிக்கை போன்ற சிவந்த கண்களையுடைய விரால் மீன் தூண்டுகளுடன் கலந்து, பகன்றைப் பூவால் செய்த கண்ணியை அணிந்த, கள்விற்கும் விலைஞருடைய மகளிர் கூத்தருக்குக் கொடுத்ததை,

**“வலையோர் தந்த இருஞ்சுவல் வாளை**
**பிலையோர் இட்ட நெடுநாண் தூண்டில்**
**பிடிக்கை அன்ன செங்கண் வரா அல்**
**துடிக்கண் அன்ன குறையொடு விரைஇப்**
**பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்”** [99]

என்று கூறுகின்றது. இப்பாடல் மூலம் விருந்தினர்களுக்கு மீன் வகைகளை உணவாகக் கொடுத்ததை அறிய முடிகின்றது. மேலும் அம்மக்கள் நெய் அரிசியைக் கொண்டு கூழாகச் சமைத்த சுவையுள்ள உணவை, அகன்ற வாயுடைய முடைந்த தட்டிலே ஊற்றி ஆறவிட்டு, பாம்புப் புற்றிலே இருக்கும் புற்றாஞ் சோற்றைப் போலிருக்கின்ற மெல்லிய நல்ல நெல் முளையை சுவை உண்டாக்கக் கலந்து, காலை, மாலை ஆகிய இரு வேளையும் இரண்டு நாள் வைத்திருப்பர். பின்பு உறுதியான வாயையுடைய பெரிய சாடியில் அதைப் போட்டு வெந்நீர் ஊற்றி வேக வைப்பர். பின்பு, கையால் துழாவி நெய் அரிப்பால் வடிகட்டுவர். அது சுவையான மதுவாக அமையும். அந்த மதுவினை பச்சை மீனைச் சுட்ட சூட்டோடு உண்பதற்கு அளிப்பர். வழியில் செல்வோரும் பசி தீர உண்டு வழி நடந்த களைப்புத் தீர இளைப்பாறிப் பின்சென்றனர்என்ற இச்செய்தியை

**“வல்வாய்ச் சாடியின் வழைச்சு அற விளைந்த,**
**வெந்நீர், அரியல விரல்அலை, நறும்பிழி,**
**தண்மீன் சூட்டொடு தளர்தலும் பெறுகுவீர்”** [100]

எனும் இப்பாடல் உணர்த்துகிறது. விருந்தினர்க்கு உணவு உபசரித்த பாங்கினை இப்பாடல் உணர்வுபட எடுத்து இயம்புகின்றது. இப்பாடல் வழி நெய்தல் நில மக்களின் உணவுமுறைகளையும் விருந்தோம்பும் பண்பினையும் உணர முடிகிறது.

## பாலை நில மக்களின் விருந்தோம்பல்

மணலும் மணல் சார்ந்த பகுதியும் பாலை நிலமாகும். இந்நிலம் வெயிலின் வெப்பம் நிறைந்தும், கள்வர்கள் மிகுந்தும் காணப்படும் இடமாகக் காட்சியளிக்கின்றது. மக்கள் எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் ஆவர்.

எயினர் குலத்தில் பிறந்த மகளிரும் விருந்தோம்பலில் சிறந்து விளங்கியுள்ளனர் என்பதை,

**“எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு,**
**தேமா மேனிச் சில்வளை ஆயமொடு**
**ஆமான் சூட்டின் அமைவரப் பெருகுவீர்” [101]**

எனும் இப்பாடலில் எயினர் குலத்தில் பிறந்த மகளிர் சமைத்த இனிய புளிங்கறி அதாவது புளிச்சோற்றினை மானினது சூடான இறைச்சியுடன் பசி தணியுமாறு நிரம்பப் பெறுவீர் என்று பாணன் கூறுவதை இப்பாடல் அடிகளில் காண முடிகின்றது. மேலும் எயிற்றியர் தாம் கொணர்ந்த புல்லரிசியை உரலில் இட்டு குற்றி எடுத்து, ஆழ்ந்த கிணற்றில் உள்ள உவர்ப்பு நீரைக் கொண்டு சமைத்து வந்தனர். அவ்வுணவினை வந்த விருந்தினர் – களுக்குத் தேக்கு இலையில் உணவு படைத்தும் உள்ளனர் என்பதை,

**“நீழல் முன்றில் நிலஉரல் பெய்து**
**குறுங்காழ் உலக்கை ஓச்சி நெடுங்கிணற்று**
**வல்ஊற்று உவரி தோண்டி தொல்லை**
**முரவுவாய்க் குழிசி முரி அடுப்பு ஏற்றி” [102]**

**“தெய்வமடையின் தேக்கிலைக் குவைஇ, நும்**
**பைதிர் கடும்பொடு பதம்மிகப் பெறுகுவீர்” [103]**

என்னும் இப்பாடலின் வழியாகப் பாலை நில மக்கள் விருந்து படைத்ததை அறிய முடிகின்றது.

## கலைகள்

மனிதனின் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக விளங்குவது இலக்கியம் எனலாம். இவ்விலக்கியங்களில் சங்க இலக்கியங்கள் சமூக அமைப்பினைக் காட்டும் வரலாற்றுப் பெட்டகங்களாகத் திகழ்கின்றன. இலக்கியத்தின் பாடுபொருட்களில் பெண்களுக்கு மிக முக்கியமான பங்கு உண்டு. தொடக்க காலம்

முதல் இக்காலம் வரையிலான இலக்கியங்கள், பெண்களின் திறன்களைப் பல்வேறு படிநிலைகளில் வெளிப்படுத்தியுள்ளன.

கலை என்பது மனிதனின் உள்ளத்தைத் தன் வயப்படுத்தி ஆற்றலை வெளிப்படுத்துவதாகும். இவற்றை **“கலை என்ற சொல் முதலில் வழங்கியபோது செயல் திறமையைக் காட்டுவதும் அழகு ஏற்படும் வகையில் செய்வதும் சுவை பயக்க வல்லதும் பற்பல காரியங்களுக்கு உதவுவதுமான அறிவையும் ஆற்றலையும் குறித்தது என்றும் கலையில் செயல், பயன், திறமை, அழகு, சுவை என்ற அம்சங்கள் உள்ளன”**[104] என்றும் கூறுகிறது கலைக்களஞ்சியம்.

## கலை – விளக்கம்

கலை என்பதற்கு ஆண்மான், ஆடை, ஆண் குரங்கு, சேணம், பகுதி, ஒளி நுட்பமான கால அளவு, மொழி, பெண்களின் இடையணி, எழுத்து, நூல், கற்பூரவகை’ என்று தமிழ் அகராதியில் பொருள் விளக்கப்பட்டுள்ளன.

புத்தர் வரலாற்றைக் கூறும் ‘லலித விஸ்ரதம்’ என்னும் நூலிலும் சமண நூல்களிலும் இந்து நூல்களிலும் அறுபத்து நான்கு கலைகளின் பெயர்கள் காணப்படுகின்றன. சமணர் நூல்களில் ஆடவர்களுக்குரிய கலைகள் எழுபத்திரண்டு, பெண்களுக்குரிய கலைகள் அறுபத்து நான்கு என்று குறிப்பிடப்பட்டுள்ளன.

அறுபத்து நான்கு கலைகள் **“ஆடல், பாடல், இசைக் கருவிகள், கவிதை, பூ வேலைகள், உடை அலங்காரம், காதணிகள், வாசனைப் பொருட்கள், நகைகள், உதட்டிற்கு வண்ணம் தீட்டுவது, முகம் முதலிய உறுப்புகளுக்கு ஏற்ப மண–நிறப் பொடிகளைப் பயன்படுத்துதல், ஆண்களும் பெண்களும் சேர்ந்து நீராடும் பொழுது விளையாட்டாக நீரில் மிருகங்கள் போல் ஒலிகளைக் கிளப்பும் கலைகள்”**[105] என்று மா.இராசமாணிக்கனார் கூறியுள்ளார்.

இத்தகைய சங்கப்புற நூல்களில் இடம் பெற்றுள்ள மகளிர் விளையாட்டுக்கள், கூத்துக்கலைகள், நாடகம், இசை மற்றும் அவரகள் அணிந்திருந்த ஆடை, அணிகலன்கள், ஒப்பனைகள், செய்த தொழில்கள் ஆகிய அனைத்தும் கலை நயத்தோடு வாழ்ந்திருக்கின்றனர் என்பதை உணர்த்துகின்றது.

## மகளிர் விளையாட்டுக்கள்

சிறுவர் முதல் பெரியவர்கள் வரை மேற்கொள்ளும் ஒரு கலையே விளையாட்டாகும். விளையாட்டு என்பதற்கு, **"பொழுது போக்கிற்காகவும் திறமையை வெளிப்படுத்தும் விதமாகவும் நிகழ்த்தப்படும், விதிமுறைகளை உடைய செயல்பாடு, உண்மை என்று எடுத்துக் கொள்ள வேண்டாதது, வேடிக்கையாகச் செயல்படுவது"**[106] என்று கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி பொருள் குறிப்பிட்டுள்ளது.

சங்க இலக்கியங்களில் மகளிர் விளையாடிய விளையாட்டுக்கள் தொடர்பான செய்திகளை ஆராயும்போது சங்க கால மகளிர் விளையாட்டின்மீது கொண்ட ஆர்வத்தையும் ஈடுபாட்டையும் அறிந்து கொள்ள முடிகின்றது. இவர்களின் விளையாட்டுகள் பெரும்பாலானவை மகிழ்ச்சி ஊட்டக்கூடிய விளையாட்டுகளாகவே இருந்திருக்கின்றன. உடலும் உள்ளமும் சிறந்த ஆரோக்கியத்துடன் அமைய வேண்டும் என்பதே அக்கால மகளிர் விளையாட்டின் அடிப்படையாக இருந்துள்ளது. சங்க கால மகளிர் பூஞ்சோலைகள், அருவி உள்ளிட்ட நீர்நிலைகள், கடற்கரைகள், மணற்குன்றுகள், மாடங்கள், முற்றங்கள் ஆகிய பல்வேறு இடங்களில் விளையாடி உள்ளனர்.

சங்கப்புற இலக்கியங்களில் மகளிர் விளையாட்டுக்களாக,

- கழங்காடுதல்,
- பாவை விளையாட்டு,
- பந்து விளையாட்டு,
- ஓரை விளையாட்டு,
- மணல் விளையாட்டு (அ) வண்டல் அயர்தல்,
- எண்ணி விளையாடுதல்,
- வள்ளைப் பாட்டு,
- மலர்க்கொய்தல்,
- நீர் விளையாட்டு,
- ஓசை எழுப்புதல்

ஆகியன குறிப்பிடத்தக்கவையாகும்.

## கழங்காடுதல்

கழங்கு என்பதற்கு 'கழற்சிக்காய், கழற்சி விளையாட்டு, வெறியாட்டு, ஆடல் வெறியாட்டாளன், சூது வேலனாடல் என்று பொருள் கூறப்படுகிறது. கழங்காடுதல் என்பதற்குப் பெண்கள் ஆடும் கழற்சிக்காய் ஆட்டம்' என்று தமிழ் அகராதியில் கூறப்பட்டுள்ளது. இவ்வகையில் மகளிர் முத்துப் போன்று ஆர்ந்த மணலிடத்தில் பொன்னாலான கழல் ஏந்தி ஆடுவதை,

**"முத்த வார்மணல் பொற்கழங்கு ஆடும்"[107]**

என்று பெரும்பாணாற்றுப்படை உணர்த்துகிறது. காற்சிலம்பும் வளையல்களும் அணிந்த மகளிர், பொருநையாற்று மணல் மேட்டில் பொன்னால் செய்த கழற்சிக் காய்கள் வைத்து வீசி விளையாடினர் என்பதை,

**"செறி அரிச் சிலப்பின், குறுந் தொடி மகளிர்**
**பொலம் செய் கழங்கின் தெற்றி ஆடும்"[108]**

என்னும் பாடல் வரிகளின் மூலம் புலப்படுகிறது. ஒளி பொருந்திய நெற்றியினையுடைய மகளிர் கழற்சிக்காயொடு முல்லை நிலமெங்கும் திரிந்து கொண்டிருந்தனர். இதனை,

**"ஒண் நுதல் மகளிர் கழலொடு மறுகும்"[109]**

என்னும் பாடலின் வாயிலாக வெளிப்படுத்துகிறது. இத்தகைய பொன்னாலான கழற்சிக் காய்களைக் கொண்டு மகளிர் விளையாடியுள்ளதையும் அக்காய்களைக் கையில் வைத்துக் கொண்டு திரிந்ததையும் அறிந்து கொள்ள முடிகிறது.

## பாவை விளையாட்டு

'பாவை' என்பது பதுமையைக் குறிக்கும் விளையாட்டுப் பொருள்களுள் ஒன்றாகும். ஆண், பெண் ஆகிய இருபாலர் உருவங்களில் அமைக்கப்பட்டதாகக் காணப்படும். 'மண்பாவை' என்பது மண்ணால் ஆனது என்றும் 'மரப்பாவை' என்பது மரத்தினால் ஆனது என்றும் 'மலர்ப்பாவை' என்பது மலரினால் ஆனது என்றும் 'பொற்பாவை' என்பது பொன்னாலானது என்றும் 'பைஞ்சாய்ப் பாவை' என்பது கோரைப் புல்லால் ஆனது என்றும் வழங்குவர். இவற்றை,

**"திணிமணல் செய்வுறு பாவைக்குக் கொய் பூத் தைஇ"[110]**

**"செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை"[111]**

என்னும் பாடல் வரிகளில் காண முடிகிறது. இவ்வகையான பாவைகளை வைத்து மகளிர், சிறுமியர் போன்றோர் விளையாடுவர். மண், மரம் ஆகியவற்றால் செய்யப்படும்

பாவைகளின் மேல் இயற்கையான பல வண்ணங்கள் பூசப்பட்டிருக்கும். இதன்மேல் ஓவிய வேலைப்பாடுகள் அமைக்கப்பட்டப் பாவை 'சித்திரப் பாவை' என பெயர் பெற்றிருக்கும்.

மென்மையான தோள்களைக் கொண்ட பெண்கள், பாவையைச் செறிந்த மணலில் வைத்து விளையாடிப் பாதுகாத்துள்ளனர்.

**"தெற்றிப் பாவை திணி மணல் அயரும்**
**மென்தோள் மகளிர் நன்று புரப்ப"[112]**

என்னும் புறநானூறுப் பாடலின் வழி அறிய முடிகிறது. இவ்வாறாக மகளிர் விளையாடக் கூடிய விளையாட்டுக்களில் பாவை விளையாட்டுப் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது.

## பந்து விளையாட்டு

பழங்காலத்தில் மகளிர் மட்டும் ஆடும் பந்தாட்டம் இன்று ஆண், பெண் ஆகிய இருபாலரும் ஆடும் ஆட்டமாக அமைந்துள்ளது. வீட்டின் முற்றம், வெளிப்புறம், மாடம், மணல் பரப்பியப் பகுதி போன்ற இடங்களில் இப்பந்தாட்டம் விளையாடப்பட்டுள்ளது. பந்து பல நிறங்களில் வேலைப்பாடுகள் கொண்டு காட்சியளிப்பதை,

**"வான்தோய் மாடத்து, வரிப்பந்து அசைஇ"[113]**

என்னும் இப்பாடல் வரிகளில் பந்தாட்டத்தில் களைத்துப்போகும்போது, பொன்னால் ஆகிய கழற்சிக்காயைக் கொண்டு கழற்சி ஆடினர் என்பது இடம் பெற்றுள்ளது. மேலும் தொண்டை நாட்டுத் துறைமுக நகரங்களில் வாழும் மகளிர் தமது வீட்டின் மேல்மாடத்தில் பந்தடித்து விளையாடினர். இத்தகைய மகளிர் விளையாடும் பந்தாட்டம் பற்றி அறிய இயல்கிறது.

## ஓரை விளையாட்டு

ஓரை என்பது 'மாதர் கூட்டம், மகளிர் விளையாட்டு, விளையாட்டிடம், குரவை, ஒரு முகூர்த்தம், நேரம், கூகை, இரண்டரை நாழிகைப் பொழுது, அணிகலன்' என்றும் 'ஓரைப்பாவை என்றால் மகளிர் விளையாட்டுப் பாவை' என்றும் தமிழ் அகராதி விளக்குகிறது. இதனை,

**"ஓரை ஆயத்து ஒண் தொடி மகளிர்"[114]**

என்ற பாடல் வரியில் மெல்லிய வளையணிந்த மகளிர் ஓரை விளையாட்டு விளையாடியதை வெளிப்படுத்தியுள்ளனர். இதனால் 'ஓரை' என்பது மகளிர் ஆடும் விளையாட்டு என்பதை உணர முடிகிறது.

## மணல் விளையாட்டு (அ) வண்டல் அயர்தல்

மணலில் அழகிய உருவம் செய்து விளையாடும் விளையாட்டு 'மணல்' விளையாட்டாகும். பெண்கள் இவ்விளையாட்டை விளையாடி இருக்கின்றனர் என்பதை,

**"வால் இழை, மட மங்கையர்**
**வரி மணல் புனை பாவைக்குக்**
**குலவுச் சினைப் பூக் கொய்து"[115]**

என்னும் பாடலின் மூலமாக தூய அணிகலன்களை அணிந்த பேதைப் பெண்கள், வண்டல் மண்ணால் இழைத்த பாவைக்கு மலர் சூட்டி, பிறகு பொருநை ஆற்று நீரில் விளையாடுவர் என்று பேய்மகள் இளவெயினி பாடியிருப்பதை உணர முடிகிறது. இதேபோல் இளங்கீரனார்,

**"முதிர் வார் இப்பி முத்த வார் மணல்**
**கதிர் விடு மணியின் கண் பொரு மாடத்து**
**இலங்கு வளை மகளிர் தெற்றி ஆடும்"[116]**

என்னும் பாடல் வரியில் உயர் மாடத்தில் வாழும் ஒளியையுடைய வளையணிந்த மகளிர், முதிர்ந்து நீண்டு அகன்ற சிப்பியில் உள்ள முத்துப்போன்று, வெண்மையான ஒழுங்குபட்ட மணல் திடலின் மேட்டில் விளையாடினர் என்று கூறியுள்ளார். சோழநாட்டு உழவர் மகளிர் நெய்தல் நிலத்து மணற்குன்றில் வண்டல் இழைத்து ஆடுவதை,

**"இளையோர் வண்டல் அயரவும்"[117]**

என்னும் பொருநராற்றுப்படை விளக்குகிறது. இப்பாடல்கள் வழி மகளிர் தம் மனதில் தோன்றும் எண்ணங்களை மண்ணில் உருவமாக இழைத்து மகிழ்ந்துள்ளமையை அறிய முடிகின்றது.

## எண்ணி விளையாடுதல்

உப்பு வண்டிகள், யானைகள், படகுகள், குதிரைகள், விளக்குகள், குருகுகள் ஆகியவை சாலைகளில் வரும்போது எண்ணி விளையாடுவர். பறம்பு மலையின் உயர்ந்த சிகரத்தில் ஏறி நின்று பகை மன்னரின் குதிரைகளை எண்ணிய பாரி மகளிர், பாரியின் இறப்பிற்கு பின் உப்பு வண்டிகளை எண்ணினர். இச்செய்தியை,

**". . . . . . . . . . . , கூர் வேற் பாரியது**
**அருமை அறியார், போர் எதிர்ந்து வந்த**
**வலம்படு தானை வேந்தர்**

**பொலம் படைக் கலிமா எண்ணுவோரே”[118]**

என்னும் பாடலில் பாரி மகளிர் உமணரின் உப்பு வண்டிகளை எண்ணி விளையாடினர் என்பதை அறிய முடிகிறது. செவ்விய இழையணிந்த மகளிர், யானைகளை எண்ணிய பாங்கினை,

**“ஊசல் மேவல், சேயிழை மகளிர்**
**உரல்போல் பெருங்கால் இலங்குவாள் மருட்பின்**
**பெருங்கை மகமாப் புகுதரின் அவற்றுள்**
**விருந்தின் வீழ் பிடி எண்ணு முறை பெறாஅ”[119]**

என்று பரணர் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

**“கடலே, கால்தந்த கலன் எண்ணுவோர்”[120]**

என்னும் பாடல் வரியில் நெய்த நில மகளிர் கடற்கரை ஓரங்களில், காற்றால் அடித்து வரப்பட்ட மரக்கலங்களை எண்ணி விளையாடியதைக் கூறுகின்றது. இதன் வழியாக மகளிர் உப்பு வண்டிகள், யானைகள், மரக்கலங்கள் முதலியவற்றை எண்ணி விளையாடிய செய்திகள் புலப்படுகின்றன.

## வள்ளைப்பாட்டு (உலக்கைப் பாட்டு)

சங்க காலத்தில் ஆண்களும் பெண்களும் ஆகிய இருவரும் விளையாடும் விளையாட்டுக்கள் இசை நலன் சான்ற பாடல்களோடு அமைந்துள்ளன. அதாவது இசையோடு கூடிய பாடல் அமைவதால் அவை எளிமையாகவும் இனிமையாகவும் நிறைவடையும். ‘வள்ளைப் பாட்டு’ என்பதனை உலக்கைப் பாட்டு, உரற்பாட்டு, அவலிடி, அம்மானை, வள்ளை என்று கூறுவர். இத்தகைய வள்ளைப்பாட்டு, திணை குத்தும்போது மகளிரால் பாடப்பட்டதை,

**“திணைகுறு மகளிர் இசைபடு வள்ளையும்”[121]**

என்ற மலைபடுகடாம் பாடல் வரியில் காண முடிகிறது. விளையாட்டு, தொழில் ஆகியவற்றின் போது மகளிர் மேற்கொள்ளும் வள்ளைப்பாட்டை அடியார்க்கு நல்லார் சிலம்பதிகாரத்தில் சுட்டிக் காட்டியுள்ளார். எனவே வள்ளைப் பாட்டு சங்க காலத்தில் ஆண்மகனின் புகழைப்பாடும் பாட்டாகவும் மகளிரின் உடல்நலத்தைப் பேணும் பயிற்சியாகவும் அமைந்துள்ளன என்பவை புலப்படுகிறது.

## மலர் கொய்தல்

மனித வாழ்க்கையின் இன்ப துன்ப நிகழ்வுகளில் மலர்கள் இடம் பெறுகின்றன. சிறுவர் முதல் பெரியவர் வரை அனைவரையும் மயக்கும் தன்மை மலருக்குண்டு. நிறமும் மணமும் உடையது மலர்கள். குறிஞ்சிப் பாட்டு என்னும் நூலில் கபிலர் தொண்ணூற்று ஒன்பது வகையான மலர்களைப் பற்றி குறிப்பிட்டுள்ளார். இது பூக்களின்மீது பெண்கள் வைத்திருக்கும் ஆர்வத்தை வெளிக்காட்டுவதாக உள்ளது.

மகளிர் பொழுது போக்கிற்காகவும் சுற்றத்தார்க்கு விரும்பி வழங்கும் பொருட்டும் மலர்கொய்தலில் ஈடுபட்டுள்ளனர். பெரிய நீர் நிலைகளிலிருந்து நீர் எடுத்துச் செல்லும் மகளிர் செங்கழுநீர் மலர்களைப் பறித்துச் சென்று, ஊர்களில் வரும் சுற்றத்தார்க்கு விரும்பி வழங்கியிருக்கின்றனர். இச் செய்தி,

**“நீர் தரு மகளிர் குற்ற குவளையும்**
**வன்புலக் கேளிர்க்கு வரு விருந்து அயரும்”**[122]

என்ற பாடலின் மூலமாக தெளிவாகிறது. மென்மைத் தன்மைக் கொண்ட மகளிர் மருத நிலத்துத் தாமரை மலர், நெய்தல் நில மலரோடு கொய்யும் காட்சி,

**“வள் இதழ்த் தாமரை நெய்தலோடு அரிந்து**
**மெல்லியல் மகளிர் ஒல்குவணர் இயலி”**[123]

என்ற அடிகளிலும் வளையணிந்த மகளிர் பச்சை அவல் இடித்த உலக்கையை அருகிலுள்ள வாழை மரத்தில் சார்த்தி விட்டு வள்ளைப் பூவினைப் பறிப்பர் என்பதை,

**“அவர் எறி உலக்கை வாழைச் சேர்த்தி,**
**வளைக் கை மகளிர் வள்ளை கொய்யும்”**[124]

என்னும் பாடல் வரிகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. வேங்கை மரத்தின் பெரிய கிளைகளில் தோன்றிய மணம் பொருந்திய மலர்களைப் பறிக்கும் மகளிர் புலி வருவதாக ஆரவாரம் எழுப்பியதை,

**“கருங்கால் வேங்கை இருஞ்சினைப் பொங்கர்**
**நறும் பூக் கொய்யும் பூசல்”**[125]

என்கின்ற பாடல் வாயிலாக தெளிவுபடுத்துகின்றன. வயல்வெளிகளில் வேலை செய்யும் பொழுதும் ஆரவாரம் எழுப்பியும் மலர் கொய்தலில் ஈடுபட்டுள்ளனர் என்பது புலப்படுகிறது.

## நீர் விளையாட்டு

தமிழகத்தின் வெப்பமிகுதிக் காரணமாக இங்கு வாழும் மக்கள் குளிர்ச்சியை விரும்புவர். ஆதலால் தாங்கள் வாழும் இடங்களில் உள்ள அருவிகள், ஆறுகள், சுனைகள், குளங்கள், ஏரிகள், கடல்கள் ஆகிய நீர் நிலைகளில் நீராடி மகிழ்ந்தனர். இவ்வாறு நீராடுதல் இன்பம் நல்குவதாகவும் பொழுதுபோக்கு விளையாட்டாகவும் பழங்காலந்தொட்டு இருந்து வந்துள்ளது. மகளிர் தனித்தும் தன் தோழியர் கூட்டத்துடனும் கற்பு நிலையில் கணவருடனும் நீராடி மகிழ்ந்துள்ளனர்.

சங்ககால மகளிர் மலைகளில் இருந்து வரும் அருவி நீரைக் குடைந்தும் குளம், ஆறு முதலிய நீர் ஆதாரங்களில் விரும்பியும் நீந்தியும் குதித்தும் விளையாடியுள்ளனர். இவர்கள் விளையாடும் புனல் விளையாட்டில் நீர் குடைந்தாடியதை,

**“புனல்ஆடு மகளிர் கதுமெனக் குடைய”[126]**

என்னும் பாடல் வரிகள் வெளிப்படுத்துகின்றன.

சிறுபாணாற்றுப் படையில்,

**“நறுவீ நாகமும் அகலும் ஆரமும்**
**துறைஆடு மகளிர்க்குத் தோட்புணை ஆகிய**
**பொருபுனல் தரூஉம்”[127]**

என்னும் பாடல் வழியாக அகில், சந்தனம், சுரபுன்னை போன்றவற்றை நீராடும் மகளிர்க்குத் தெப்பமாகக் கொண்டு நீராடி வந்துள்ளனர் என்பதை இப்பாடலடிகள் உணர்த்துகின்றன.

ஆறு, குளம் இவற்றின் ஆழமான இடங்களில் நீராடும்பொழுது மகளிரின் காதுகளில் அணிந்திருக்கும் பொற்குழை கழன்று விழுந்துவிடும், புனலாடுங்கால் நீரில் நழுவி விழும் என்று நினைத்து மகரக் குழையைக் கரையில் வைத்துப் பின்னர் மறந்து போவதும் முறையே,

**“புனல் பாய் மகளிர் ஆட ஒழிந்த**
**பொன் செய் பூங்குழை”[128]**

என்று குறிப்பிட்டுள்ளன. மகளிர், தோழியர் கூட்டத்தோடு கடலில் நீராடி மகிழ்ந்தனர் என்பதை,

**“தொடலை அல்குல் தொடிந்தோள் மகளிர்**
**கடல் ஆடிக் கயம் பாய்ந்து”[129]**

என்னும் பாடல் வரிகளும், தென்னையின் இளநீரையும் நுங்கின் நீரையும் கரும்புச் சாரையும் உண்டு மகளிர் கடலில் பாய்ந்து விளையாடியதை,

**“முந்நீர் உண்டு முந்நீர்ப் பாயும்”[130]**

என்ற அடியும் சுட்டிக் காட்டுகின்றன. நீர் விளையாட்டினை உடல் நலம் காக்கும் பொருட்டாகவும் இன்பத்தின் பொருட்டாகவும் சங்க கால மகளிர் மேற்கொண்டுள்ளமை இதன்மூலம் தெளிவாகிறது.

## கூத்துக் கலைகள்

கூத்து என்பதன் பொருள் அதிசயம், நடனம், நாடகம், கேலி என்பது ஆகும். கூத்துக் கலைகள் பழங்கால மக்களிடம் இருந்து வந்த கலையாகும். இவை கருங்கூத்து, கழனிக்கூத்து, வள்ளிக்கூத்து, வெறிக்கூத்து ஆகியவையாகும். சங்க நூல்களின் வழி குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் முதலிய நானிலங்களிலும் கூத்தர்கள் இருந்துள்ளனர் என்பதை காண முடிகிறது. குறிஞ்சி நிலக் கடவுள் முருகனை வழிபடுவதற்காக ஆடும் கூத்து ‘குரவை’ அல்லது ‘குன்றக் குரவை’ என்றும் முல்லை நிலக் கடவுளாகியத் திருமாலை வழிபட்டு ஆடும் கூத்து ‘ஆய்ச்சியர் குரவை’ எனவும் பெயர் பெறுகின்றது.

சங்கப்புற இலக்கியங்களில் குறிப்பிடும் மகளிர் கூத்துக்கள்

குரவைக் கூத்து | துணங்கை கூத்து

## குரவைக் கூத்து

ஆண், பெண் ஆகிய இருபாலருக்கும் உரியது குரவைக் கூத்து. குரவைக் கூத்தே ‘கைகோத்தாடல்’ என்று திவாகர நிகண்டு கூறியுள்ளது. குரவைப் பாட்டோடும் அப்பாட்டிற்கேற்ப ஆண்களும் பெண்களும் கைகோர்த்து நின்றாடும் கூத்து என்பது தெளிவாகிறது. குறவர் தொண்டகப்பறை கொட்டக் குரவையாடுவர். பரவருடைய மகளிர் எந்த நாளும் ஆடும் குரவைக் கூத்தின் ஓசையை,

**“பரதவர் மகளிர் குரவையோடு ஒலிப்ப”[131]**

என்ற பாடல் வரியும், வேலனை வழிபடும்போது மகளிர் ஆடும் குரவைக் கூத்தினை,

**“சீர் மிகு நெடுவேட் பேணி, தழூஉப் பிணையூஉ**
**மன்று தொறும் நின்ற குரவை”[132]**

என்கிற பாடல் வரிகளும் குறிப்பிடுகின்றன. வளையணிந்த மகளிர்க்கு ஆடவர் முதற்கைத் தந்து குரவை அயரும் இயல்பினை,

**"மைந்தர் எல் வளை மகளிர்த் தலைக் கை தரூஉந்து"[133]**

என்பதை பாடல் வரிகளின் மூலமாக அறிய முடிகிறது.

பதிற்றுப் பத்துப் பாடலில் குரவைக்கூத்துக் காட்சியை,

**"செய்யுள் நாரை ஒய்யும் மகளிர்**
**இரவும் பகலும் பாசிழை களையார்**
**குறும்பல் யாணர்க் குரவை அயரும்"[134]**

என்று அரிசில் கிழார் பாடியுள்ளார். குறவர் தன் மனைவியருடன் சேர்ந்து சிறுபறை ஒலிக்க குறிஞ்சி மலையுச்சியில் மது அருந்தி, குரவைக் கூத்தாடியதை,

**"நறவு நாட் செய்த குறவர் தம் பெண்டிரொடு**
**மான் தோற் சிறுபறை கறங்கக் கல்லென**
**வான் தோய் மீமிசை அயரும் குரவை"[135]**

என்ற மலைபடுகடாம் பாடல்களும் தேறல் உண்ட சிறுகுடிக் கானவர் தம் சுற்றத்தாருடன் மகிழ்ந்து குரவை அயர, மகளிர் அவர்கள் கையினைத் தழுவி தம் கையினால் முதற்கைக் கொடுத்துக் குரவையாடினர் என்னும் செய்தியை,

**"நீடுஅமை விளைந்த தேக்கண் தேறல்**
**குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து,**
**தொண்டகச் சிறுபறைக் குரவை அயர"[136]**

**"மென்தோள் பல்பிணை தழீஇ, தலைத்தந்து"[137]**

என்று நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படையின் பாடல்களும் தெளிவாக உணர்த்துகின்றன. எனவே மகளிர் ஆடவர்க்கு முதற்கைத் தந்தும் மது அருந்திய தன் கணவரோடு சேர்ந்தும் குரவை ஆடியுள்ளனர். இச்செய்திகள் புறப்பாடல்களினால் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

## துணங்கைக் கூத்து

துணங்கைக் கூத்து ஆண்கள், பெண்கள் ஆகிய இருவருக்கும் உரியது. சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார், இவற்றை 'சிங்கிக்கூத்து' என்று குறிப்பிட்டுள்ளார். சங்க கால மக்கள் விழாக்களில் துணங்கையாடியதை,

**"துணங்கை அம்தழூஉவின் மணம் கமழ் சேரி"[138]**

என்னும் சங்க பாடல் வரிகளில் அறிய முடிகின்றன. இவ்வகையான துணங்கைக் கூத்தில் ஆர்வம் கொண்ட இறைவியைத் 'துணங்கையஞ் செல்வி' என பெரும்பாணாற்றுப் படையில் கடியலூரர் உருத்திரங்கண்ணார் குறிப்பிட்டுள்ளார்.

துணங்கைக் கூத்து ஆடும் இடங்களில் மகளிர் தன் தலையிலும் தழையாடைகளிலும் ஆம்பல் மலரணிந்து விரைவாக ஆடியதால் உதிர்ந்த மலர்களைப் பசுக்கள் உண்ணும் காட்சியையும் முழவின் ஓசைக்கேற்ப மகளிர் ஆடிய துணங்கைக் கூத்திற்கு ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் தலைக்கைத் தந்த சிறப்புத் தன்மையையும் பதிற்றுப் பத்துப் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன.

**"கலிகெழு துணங்கை ஆடிய மருங்கின்**
**வளைதலை மூதா ஆம்பல் ஆர்நவும்"**[139]

**"முழா இமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணை ஆக,**
**சிலைப்புவல் ஏற்றின் தலைக் கை தந்து"**[140]

இப்பாடல் அடிகள் மகளிர் ஆடிய துணங்கைக் கூத்தினை உணர்த்துகின்றன. இதனால் மகளிர் ஆடைகளிலுள்ள மலர்கள் உதிர்ந்து விழும் அளவிற்கு ஆரவாரம் செய்து துணங்கை ஆடியுள்ளனர் என்பதும் மகளிருக்கு மன்னன் முதற்கைத் தந்து ஆடியுள்ளமையும் தெளிவாகிறது.

## தொகுப்புரை

❖ புற இலக்கியம் வாயிலாக மறக்குடி மகளிரின் தாயன்பு, பெருமை, வீரவுணர்வு, நாட்டுப்பற்று, சமுதாயத்தின்மீது கொண்ட அக்கறை போன்றவையும் மகளிர் போருக்குச் செல்லவில்லை என்றலும் போருக்காகப் புகழ்மிக்கப் புதல்வர்களை ஈன்று தரும் பெருமைக்குரியவர்களாகத் திகழ்ந்தனர் என்பதையும் அறிய முடிகின்றது.

❖ மகளிர் கற்பு நெறி பிறழாதும் தன் கணவனுக்கு பெருமை சேர்க்கும் வகையிலும் வாழ்ந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

❖ சங்க காலத்தில் பெண் கல்வி ஏற்றம் பெற்றிருந்த பாங்கை பெண்பாற் புலவர்களின் பாடலின் வழி அறிய முடிகின்றது.

❖ சங்க காலத்திலேயே பெண்கள் கல்வி அறிவும் அரசியல் அறிவும் பெற்றிருந்தனர் என்பதை காண முடிகின்றது.

❖ தமிழர் பண்பாட்டில் தலைசிறந்த அறமாகவும் பாரம்பரிய பண்புகளுள் ஒன்றாகவும் திகழ்வது விருந்தோம்பல். விருந்து என்பதற்குப் புதுமை, புதியோர் என்று பொருள்படும். சங்கப் புற இலக்கியங்களில் இடம்பெறும் விருந்தோம்பல் குறித்த செய்திகள் இவ்வியலில் ஆராயப்பட்டன.

❖ மகளிர் விருந்தோம்பும் பண்பு அவர்கள் வாழ்ந்த சூழலுக்கேற்ப அமைந்து இருந்ததை இவ்வியல் வழி உணர முடிகிறது.

❖ விளையாட்டு என்பது சிறுவர் முதல் பெரியவர்கள் வரை மேற்கொள்ளும் ஒரு கலையாகும். இக்கலை பொழுதுபோக்காகவும் மனமகிழ்ச்சியை ஊட்டக் கூடியதாகவும் உடல்நலம் பேணும்வகையாலும் மேற்கொள்ளப்பட்டதை உணர முடிகின்றது.

❖ மகளிர் கழங்காடுதல், பாவை விளையாட்டு, பந்து விளையாடுதல், மணல் விளையாட்டுக்கள், வள்ளைப் பாட்டு, மலர் கொய்தல், நீர் விளையாட்டு போன்ற செயல்களில் மகிழ்வுடன் ஈடுபட்டது இவ்வியலில் வழியாக உணர்த்தப்பட்டது.

❖ நாடகக் கலைகளான குரவை கூத்து மற்றும் துணங்கைக் கூத்துகளிலும் அக்கால மகளிர் சிறப்புற ஈடுபட்டிருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

•••••••••

## அடிக்குறிப்புகள்

1. தொல்.பொருள், நூற்பா.41.
2. பு.வெ.மா.8, நூற்பா.21.
3. புறம், பா.86.
4. மேலது பா.279.
5. மேலது, பா.295.
6. மேலது, பா.277.
7. மேலது, பா.278.
8. மேலது பா.19
9. மேலது, பா.288.
10. மேலது, பா.255.
11. மேலது, பா.286.
12. குறள், 1032.
13. சிலம்பு, அடைக்கலக்காதை 142–144.
14. தொல்.களவியல், 23.
15. மணிமேகலை, 15–77.
16. சிலம்பு, 15.
17. குறள், 57.
18. திரிகடுகம், 64.
19. புறம், பா.3.
20. திருமுருகு, பா.6.
21. பதிற்று, பா.90
22. மேலது, பா.80.
23. மேலது, பா.70.
24. புறம், பா.198.
25. சிறு, பா.வரிகள், 29–30.
26. பதிற்று, பா.16.
27. புறம், பா.249.

28. மேலது, பா.383.

29. புறம், பா.122.

30. பதிற்று, பா.89.

31. மேலது, பா.65.

32. மேலது, பா.31.

33. பெரும் பா.30.

34. வள்ளிநாயகி, தமிழ்வளர்த்த மகளீர், பக்.152–153.

35. முருகேச பாண்டியன், அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின், ப.14.

36. புறம், பா.306.

37. மேலது, பா.279.

38. பெ.சு.மணி, சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், ப.394.

39. புறம், பா.91.

40. சிறு, பா.101–103.

41. புறம், பா.187.

42. மேலது, பா.95.

43. மேலது, பா.367.

44. பெ.சு.மணி, சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், ப.349.

45. ம.பொ.சிவஞானம், ஔவையார், ப.54.

46. புறம், பா.278.

47. பதிற்று, பா.51.

48. மேலது, பா.55

49. மணிமேகலை–7, ப.57–58.

50. புறம், பா.86.

51. வள்ளி நாயகி, தமிழ் வளர்த்த மகளிர், ப.143.

52. புறம், பா.157.

53. மேலது, பா.250.

54. சிலம்பு, பா–1, வரி–23.

55. புறம், பா.83.

56. மேலது, பா.84.

57. புறம், பா.9.

58. மேலது, பா.9.

59. சிலம்பு, பா.11 (19–20)

60. புறம், பா.9.

61. மேலது, பா.112.

62. பழமொழி, பா.32

63. புறம், பா.277

64. மேலது, பா.246

65. கா.கோவிந்தன், பெண்பாற்புலவர்கள், ப.74.

66. புறம், பா.11.

67. மேலது, பா.299.

68. புறம், பா.251.

69. மேலது, பா.252.

70. புறம், பா.39.

71. மேலது, பா.126.

72. மேலது, பா.174.

73. பொரு, பா வரிகள் 1–3.

74. மேலது, பா.58–60.

75. மேலது, பா.129–148.

76. புறம், பா.66.

77. மேலது, பா.296.

78. மேலது, பா.302.

79. தொல், செய், 234.

80. குறள், 90.

81. தொல்.கற்பு, நூற்–11.

82. நற்றினை, 285.

83. பொரு, பா.214, 215.

84. மலை, பா.152–157.

85. மேலது, பா.168, 169.

86. மேலது, பா.183–185.

87. மேலது, பா.186–188.

88. பெரும், பா.192–196.

89. மேலது, பா.166–168.

90. மேலது, பா.190–196.

91. புறம், பா.215.

92. பெரும், பா.155–159.

93. மலை, பா.417–420.

94. புறம், பா.42.

95. மலை, பா.465.

96. சிறு, பா.194, 195.

97. மேலது, பா.158–159.

98. மேலது, பா.163.

99. மலை, பா.455–459.

100. பெரும், பா.280–282.

101. சிறு, பா.175–177.

102. பெரும், பா.96–99.

103. மேலது, பா.104–105.

104. கலைக்களஞ்சியம், தொகுதி–3, பக்.339–400.

105. மா.இராசமாணிக்கனார், தமிழ்ப்பண்பாட்டு வரலாறு, ப.492.

106. கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.40

107. பெரும், பா.335.

108. புறம், பா.36.

109. பதிற்று, பா.30, வரி.28.

110. புறம், பா.243.

111. மதுரை, பா.410.

112. புறம், பா.283.

113. பெரும், பா.333,

114. புறம், பா.176.

115. மேலது, பா.112.

116. மேலது, பா.53.

117. பொரு, பா.

118. புறம், பா.116.

119. பதிற்று, பா.43, வரிகள்.2–5.

120. புறம், பா.386.

121. மலை, பா.342.

122. புறம், பா.42.

123. பதிற்று, பா.78, வரிகள்.4–5.

124. மேலது, பா.29, வரிகள்.1–2.

125. மதுரை, பா.296–297.

126. பொரு, பா.241.

127. சிறு, பா.115–117.

128. பதிற்று, பா.86, வரிகள்.10–11.

129. புறம், பா.339.

130. புறம், பா.24.

131. மதுரை, பா.97.

132. மேலது, பா.614–615.

133. புறம், பா.24.

134. பதிற்று, பா.73, வரிகள்.9–11.

135. மலை, பா.320–322.

136. திருமுருகு, பா.195–197.

137. மேலது, பா.216.

138. மதுரை, பா.329.

139. பதிற்று, பா.13, வரிகள்.5–6.

140. மேலது, பா.52, வரிகள்.14–15.

## முடிவுரை

ஒவ்வோர் இயலிலும் கூறப்பெற்ற ஆய்வு முடிவுகள் இங்கு தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன.

செவ்வியல் எனும் சொல்லின் மூலச்சொல் தமிழ்மொழியே என்பது எடுத்துரைக்கப் பெற்றுள்ளது. செவ்வியல் பற்றிய அகராதி விளக்கங்களும், செவ்வியல் குறித்து தமிழ்நாட்டு அறிஞர்களும் மேலைநாட்டு அறிஞர்களின் கருத்துகளும் விளக்கப்பட்டுள்ளன. செவ்வியலுக்கான அடிப்படைத் தகுதிகள், கோட்பாடுகள், செவ்வியல் வளர்ச்சி போன்றவை பற்றியும் ஆராயப்பட்டுள்ளன. உலகச் செவ்வியல் இலக்கியமான கிரேக்கம், இலத்தீன், சமஸ்கிருதம், பாரசீகம், அரபிக், சீனம் போன்றவை பற்றியும் ஆராயப்பட்டுள்ளது.

உலகச் செவ்வியல் இலக்கியத்தில் தமிழ்மொழியின் சிறப்பும் தமிழ் மொழியானது செம்மொழி ஆவதற்கான தகுதிகளும், செவ்வியல் நூல்களும், செவ்வியல் கூறுகளை பல்வேறு அறிஞர்கள் பல்வேறு விதமாக கூறும் கருத்துமுறைகளும் இவ்வாய்வில் எடுத்துக் கூறி நிறைவாகத் தமிழக அரசு வரையறை செய்துள்ள நிலையும் ஆராயப்பட்டுள்ளது.

பண்பாட்டின் ஒளி விளக்காகவும், இந்திய இலக்கியத்தின் தலையூற்றாகவும் வரலாற்று உண்மைகளைத் தொகுத்தும், வாழ்க்கை நெறிமுறைகளை செம்மொழித் தகுதிக்கு வகுத்துத் தருவது சங்க இலக்கியமே என்று நிறுவப்பட்டுள்ளது.

சங்கப்புற இலக்கியங்களில் உள்ள எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களில் உள்ள தொன்மைச் செய்திகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. தமிழ்மொழியானது எம்மொழியுடனும் சேராது தனித்து இயங்கும் ஆற்றல் பெற்று விளங்குவதையும், உலகத்தில் உள்ள அனைவருக்கும் எக்காலத்தும் பொருந்தும் பொதுவான கருத்துக்களைக் கூறும் பாங்கும், மக்கள் ஒருவருக்கு ஒருவர் செய்த உதவியை மறவாதிருத்தல் என்னும் கருத்தும் ஆராயப்பட்டுள்ளது.

நீதி வழங்கக் கூடிய நடுநிலையில் உள்ளவர்கள் நடுவுநிலையோடு நின்று நீதி வழங்கியதையும், தமிழ் மொழியானது மூத்த மொழியாகவும் முதன்மை மொழியாகவும் பல மொழிகளுக்கு எல்லாம் தாயாய் விளங்கும் ஆற்றல் பெற்று விளங்குகின்றது என்பதும் ஆராயப்பட்டுள்ளது.

சங்ககால மக்களின் சிறந்த விருந்தோம்பல் பண்பும் பண்பாட்டுச்சிறப்பும் பல வகையான கலைகளில் தேர்ச்சி பெற்றமையும் அறிவுத் திறனை சிறப்பான முறையில் பயன்படுத்திய பாங்கும் கூறப்பட்டுள்ளது. இலக்கிய வளம் நிரம்பிக் காணப்படும் மொழி தமிழ்மொழி என்பதும் மக்கள் வாழ்க்கையில் பின்பற்றி வாழ வேண்டிய செய்திகளும், நற்கருத்துக்களும் ஆராயப்பட்டுள்ளன.

தந்தைக்குப் பின் மகன் என்ற பரம்பரை ஆட்சிமுறையே சங்க காலத்தில் நிலவியது. அவ் ஆட்சியை தக்க வைத்துக் கொள்ளவும் வலுப்படுத்திக் கொள்ளவும் போர்கள் நிகழ்த்தப்பட்டன. அது மட்டுமின்றி, தன் உரிமைக்காகவும் புகழ் வேட்கையின் காரணமாகவும் நாட்டின் எல்லையை விரிவுபடுத்த எண்ணுதல் காரணமாகவும் மகள் மறுத்தல் காரணமாகவும் போர்கள் நிகழ்த்தப்பட்டுள்ளன போன்ற செய்திகளும் விரிவாக ஆராயப்பட்டன.

சங்க கால மன்னர்கள் அறமே நோக்கமாகக் கொண்டு ஆட்சி செய்தனர் போர் தொடங்குவதற்கு முன்னர் போர் நடைபெறும் செய்தியை முரசறைந்து அறிவித்து அறப்போரை நிகழ்த்தினார்கள்.

புலவர்கள் அரசரிடம் பெற்ற பொருளைத் தாம் மட்டும் அனுபவிக்காது, தனக்கு உதவி செய்தவர்களுக்கும், தன்னை நாடி வருபவர்களுக்கும் பொருளை கொடுத்து உதவி செய்தனர். அறநெறி தவறிய அரசர்களைக் கண்டிக்கும்விதமாக எடுத்துக் கூறுவர்.

புலவர்கள் மன்னருக்கு அறிவுரைகளைக் கூறி போரினால் ஏற்படக்கூடிய அழிவை உணர்த்திப் போரைத் தடுத்து நிறுத்தியுள்ளனர். புலவர்களும் மன்னர்களும் நண்பர்களாக விளங்கினர்.

வள்ளல் பாரிக்கு உற்ற நண்பராகக் கபிலர் விளங்கியுள்ளார். தன் நண்பன் பாரி இறந்தபின் அவனுடைய இரண்டு மகள்களையும் மணம் முடித்து வைக்க பல போராட்டம் மேற்கொண்டதையும், இறுதியில் இரு பெண்களையும் பார்ப்பனர்களிடம் ஒப்படைத்து விட்டு அவர் வடக்கிருந்து உயிர் துறந்ததையும் உண்மையான நட்பின் உணர்வினையும் உணர முடிகின்றது.

அதியமான் தனக்கு கிடைத்த அரிய நெல்லிக்கனியைத் தானே உண்டு மிக நீண்டநாள் வாழ்வதைவிட அவ்வைக்கு கொடுத்தால் அவரும், தமிழ்மொழியும் நீண்ட நாள் வாழும் என்பதை அறிந்து நெல்லிக்கனியைக் கொடுத்ததையும், அதை பெற்றுக் கொண்ட பிறகு நன்றி உணர்வோடு அதியமானைப் புகழ்ந்துப் பாடி அவரை விட்டு நீங்காது இருந்தமையும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

சங்ககால மறக்குடி மகளிர் தாயன்பு கொண்டவர்களாகவும், குடிப் பெருமையைக் காப்பவர்களாகவும், கற்பு நெறி தவறாதவர்களாகவும் கணவனை பேணுபவர்களாகவும் திகழ்ந்துள்ளனர். கல்வியிலும் சிறந்தவர்களாக இருந்தனர். சங்க காலப் பெண்பாற் புலவர்கள் அதிகப் பாடல்களைப் பாடியுள்ளனர். மன்னரின் சிறப்பு, கொடை, வீரம், போர்ச் செய்தி, வரலாற்றுப் பதிவுகள், சமுதாயக் கடமை ஆகியவை பாடுபொருள்களாக இடம் பெற்றுள்ளன.

விளையாட்டு என்பது சிறுவர் முதல் பெரியவர்கள் வரை மேற்கொள்ளும் ஒரு கலை ஆகும். இக்கலை பொழுதுபோக்காகவும் மன மகிழ்ச்சியை ஊட்டக்கூடியதாகவும் உடல்நலத்தினை பேணும் வகையிலும் அமைந்திருந்தது என்பது ஆய்வின்வழி உணர்த்தப்பட்டது.

மகளிர் கழங்காடுதல், பாவை, பந்து, ஓரை, மணல் விளையாட்டுகள், எண்ணி விளையாடுதல், வள்ளைப்பாட்டு, மலர் கொய்தல், நீர் விளையாட்டு போன்ற விளையாட்டுகளில் மனம் மகிழ்ந்து ஈடுபட்டிருந்தனர் என்ற செய்தியை கூத்துக் கலைகளான குரவை கூத்து, துணங்கை கூத்துகளிலும் ஈடுபட்டு மகிழ்ந்திருந்தனர் என்ற செய்தியும் உணர்த்தப்பட்டன.

சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள் எனும் இவ்வாய்வின் வழியாக செம்மொழி குறித்த பதிவுகளும் தமிழ்ச் செவ்வியல் குறித்த செய்திகளும் சங்கப்புற இலக்கியங்களில் இடம் பெற்ற ஆடவர் மற்றும் மகளிரின் செவ்வியல் கூறுகளும் முழுமையாக வகைப்படுத்தப்பட்டு ஆய்வு செய்யப்பட்டன. இவ்வாய்வின்மூலம் சங்கப்புற இலக்கியங்களில் இடம் பெறும் செவ்வியல் கூறுகளை முழுமையாக நம்மால் உணர முடிகிறது.

சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள் எனும் இவ்வாய்வினை அடியொற்றி சங்கப்புற இலக்கியங்களில் உளவியல் கூறுகள், மகளிரின் செவ்வியல் கூறுகள், பண்பாட்டுக் கூறுகள், சங்ககால மக்களின் வாழ்வியல் கூறுகள், சங்கப்புற இலக்கியங்களில் சமுதாயம், சங்கப்புற பெண்பாற்புலவர்கள், சங்கப்புற இலக்கியங்களில் விளையாட்டுகள் எனும் தலைப்புகளில் எதிர்காலத்தில் ஆய்வாளர்கள் ஆய்வுகளை மேற்கொள்ளலாம்.

## துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


1. சாமிநாதையர் உ.வே. **பத்துப்பாட்டு நச்சினார்க்கினியர் உரை,**
சென்னை தபீர் அச்சுக்கூடம்,
ஐந்தாம் பதிப்பு, 1956.
2. சுப்பிரமணியன்.ச.வே. **பத்துப்பாட்டு மூலமும் தெளிவுரையும்**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை–108.
முதற்பதிப்பு, ஜுன் 2010
3. சுப்பிரமணியன்.ச.வே. **எட்டுத்தொகை மூலமும் தெளிவுரையும், தொகுதி–2,**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை–108.
முதற்பதிப்பு, ஜுன் 2010
4. பாலையன்.அ.ப. **புறநானூறு,**
சாரதா பதிப்பகம்,
கௌரா ஏஜென்சீஸ்,
10/14, தோப்பு வேங்கடாசலம் தெரு,
சென்னை–05.
5. புலியூர்க் கேசிகன் **பதிற்றுப் பத்து,**
பாரி நிலையம்,
184, பிராட்வே,
சென்னை–01.
மூன்றாம் பதிப்பு, 1998.

## துணைமை ஆதாரங்கள்


| | | |
|---|---|---|
| 1. | அகத்தியலிங்கம்.ச. | **சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே**<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>31, சிங்கர் தெரு, பாரிமுனை,<br>சென்னை–108.<br>இரண்டாம் பதிப்பு, நவம்பர் 2012 |
| 2. | அரங்க இராமலிங்கம் | **சங்க இலக்கியத்தில் வேந்தர்**<br>பாரதி புத்தகாலயம்,<br>சென்னை.<br>பதிப்பு, 2003. |
| 3. | அருளி | **நம் செம்மொழி**<br>வேரியம் பதிப்பகம்,<br>அகராதியகம்,<br>502 (466) – வழுதாவூர் சாலை,<br>முத்தரையர்பாளையம்,<br>புதுச்சேரி – 605 009.<br>முதற்பதிப்பு, 17.06.2005. |
| 4. | அனந்தராமையர்.இ.வை. | **கலித்தொகை மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்**<br>நிகழ்படப் பதிப்பு,<br>தமிழ்ப் பல்கலைக்கழகம்,<br>தஞ்சாவூர்,<br>முதற்பதிப்பு, 1984. |
| 5. | இராசமாணிக்கனார்.மா. | **தமிழக ஆட்சி**<br>மெட்ரோ பாலிடன் பிரிண்டர்ஸ்,<br>சென்னை–02.<br>இரண்டாம் பதிப்பு, 1972. |
| 6. | இராசமாணிக்கனார்.மா. | **தமிழ்ப் பண்பாட்டு வரலாறு,**<br>காவ்யா பதிப்பகம்,<br>சென்னை.<br>இரண்டாம் பதிப்பு, 2012. |
| 7. | இளம்பூரணர் | **தொல்காப்பியம் பொருளதிகாரம்,**<br>கழக வெளியீடு,<br>திருநெல்வேலி,<br>சென்னை–111.<br>மறுபதிப்பு, ஜூலை 1956. |

8. இளம்பூரணர் — **தொல்காப்பியம்**
கழக வெளியீடு,
திருநெல்வேலி,
தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் லிமிடெட், 79, பிரகாசம் சாலை (பிராடுவே),
சென்னை–108.
முதற்பதிப்பு, ஜூன் 1953.

9. ஈஸ்வரன்.ச. — **இலக்கிய வரலாறு,**
நிர்மலா பதிப்பகம்,
வடக்காவணி மூலவீதி,
மதுரை–625 001.

10. கந்தையா பிள்ளை — **தமிழர் பண்பாடு,**
காமராஜ் பதிப்பகம்,
கந்தப்பன் தெரு, பிராட்வே குறுக்குத் தெரு,
சென்னை–01.
இரண்டாம் பதிப்பகம்

11. கம்பன் கழகம் — **கம்ப ராமாயணம்,**
கற்பகச்சோலை,
வெள்ளையன் செட்டியார் சாலை,
கோட்டூர்புரம், சென்னை–600 085.
மூன்றாம் அச்சீடு, 1983.

12. குழந்தைசாமி.வா.செ. — **தாய்மொழி பெறாததைச் சமுதாயம் பெறாது**
பாரதி பதிப்பகம்,
108, உஸ்மான் சாலை, தியாகராய நகர்,
சென்னை–17.
நான்காம் பதிப்பு, 1996.

13. குழந்தைசாமி.வா.செ. — **உலகச் செவ்வியல் மொழிகளின் வரிசையில் தமிழ்**
பாரதி பதிப்பகம்,
108, உஸ்மான் சாலை, தியாகராய நகர்,
சென்னை–17.
முதற்பதிப்பு, 2005.

14. கோவிந்தன்.கா. — **கால்டுவெல்லின் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்**
திருமகள் நிலையம்,
தியாகராயநகர், சென்னை–17.
முதற்பதிப்பு, 1992.

15. கோவிந்தன்.கா. **பெண்பாற் புலவர்கள்,**
கழக வெளியீடு,
சங்கத்தமிழ்ப்புலவர் வரிசை–V,
திருநெல்வேலி,
தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் லிமிடெட், 79, பிரகாசம் சாலை (பிராடுவே),
சென்னை–108. மறுபதிப்பு, 1956.

16. சண்முகதாஸ்.அ. **செவ்வியல் தமிழ் – வரலாறும் பண்புகளும்,**
குமரன் புத்தக நிலையம்,
133, ஜி3, ரம்யா பிளாட்,
கொழும்பு–10,
2010.

17. சாமிநாத பைரவர்கள் **சிலப்பதிகாரம்,**
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.
முதற்பதிப்பு, நவம்பர் 1985.

18. சாரதாம்பாள்.செ. **சங்கச் செவ்வியல்,**
மீனாட்சி புத்தக நிலையம்,
60, மேலக் கோபுரத் தெரு,
மதுரை–625 001.
முதற்பதிப்பு, 1993

19. சிக்மண்டு பிராய்டு **சமூகவியலின் அடிப்படை கோட்பாடுகள்**
(மொழி பெயர்ப்பு ஜெ.நாராயணன்)
தமிழ் வெளியீட்டுக் கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு, 1964.

20. சிவஞானம்.பொ. **ஔவையார்.**
பூங்கொடி பதிப்பகம்,
சென்னை.
பதிப்பு, 2005.

21. சிவஞான முனிவர்.பொ. **தொல்காப்பிய சூத்திர விருத்தி,**
திருவாவடுதுறை ஆதின வெளியீடு,
1968

22. சுந்தரராசன்.த. **தமிழ் செம்மொழியே,**
மணிவாசகர் பதிப்பகம்,
31, சிங்கர் தெரு, பாரிமுனை,
சென்னை–108.
முதற்பதிப்பு, டிசம்பர் 2003

| | | |
|---|---|---|
| 23. | சுப்பிரமணியன்.ச.வே. | **திரிகடுகம்,**<br>மணிவாசகர் பதிப்பகம்,<br>31, சிங்கர் தெரு, பாரிமுனை,<br>சென்னை–108.<br>முதற்பதிப்பு, ஜூன் 2010 |
| 24. | சுப்பிரமணியம்.ச.வே., | **தமிழ் இலக்கிய வரலாறு**<br>மெய்யப்பன் தமிழ் ஆய்வகம்,<br>சிதம்பரம்,<br>முதற்பதிப்பு,<br>டிசம்பர், 2002. |
| 25. | செயபால்.இரா. | **அகநானூறு (பகுதி–1,2)**<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பிரை.லிட்)<br>41–பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்,<br>அம்பத்தூர், சென்னை–600 098.<br>முதற்பதிப்பு, ஏப்ரல் 2004. |
| 26. | சேதுப்பிள்ளை.ரா. | **தமிழின்பம்,**<br>பூம்புகார் பதிப்பகம்,<br>127, பிரகாசம் சாலை (பிராட்வே)<br>வெளியீட்டு எண்.894,<br>சென்னை–600 108.<br>முதற்பதிப்பு, ஜூலை 2010 |
| 27. | சேனாவரையர் | **தொல்காப்பியம் சொல்லதிகாரம்,**<br>கழக வெளியீடு,<br>சென்னை, 1959 |
| 28. | சோமசுந்தரனார்.பொ.வெ. | **பட்டினப் பாலை,**<br>திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் லிட்,<br>டி.டி.கே.சாலை, சென்னை–18.<br>பதிப்பு, 1990 |
| 29. | சோமசுந்தரனார்.பொ.வெ. | **புறப்பொருள் வெண்பாமாலை,**<br>கழக வெளியீடு,<br>சென்னை.<br>முதற்பதிப்பு, 2002 |
| 30. | தமிழண்ணல் | **இந்திய இலக்கிய சிற்பிகள் – ஔவையார்**<br>சாகித்திய அகாதெமி,<br>முதற்பதிப்பு, 1998. |

31. தேவநேயப் பாவாணர்.ஞா. **இந்தியால் தமிழ் எவ்வாறு கெடும் ?**
பூம்புகார் பதிப்பகம்,
127, பிரகாசம் சாலை,
சென்னை – 18.
முதற்பதிப்பு, ஜூலை 2011.

32. தேவநேயப் பாவாணர்.ஞா. **தமிழ் வரலாறு,**
பூம்புகார் பதிப்பகம்,
127, பிரகாசம் சாலை,
சென்னை – 18.
இரண்டாம் பதிப்பு, மார்ச் 2018.

33. தேவநேயப் பாவாணர்.ஞா. **தேவநேயம் பாவாணர் அறக்கட்டளை,**
43–பி, அடுக்கதம்,
முனுசாமி தெரு, விருதம்பாக்கம்,
சென்னை – 600 092.
முதற்பதிப்பு, 2004

34. தேவநேயப் பாவாணர்.ஞா. **பண்டைத் தமிழர் நாகரீகமும் பண்பாடும்**
ஸ்ரீசெண்பா பதிப்பகம்,
பாண்டி பஜார், சென்னை–17.
முதற்பதிப்பு, அக்டோபர் 2011.

35. தேவநேயப் பாவாணர்.ஞா. **வேர்ச்சொற் கட்டுரைகள் (1, 2)**
தமிழ்மண் பதிப்பகம்,
அகமது வணிக வளாகம்,
293, திரு.வி.க.நெடுஞ்சாலை,
இராயப்பேட்டை, சென்னை–600 014.
மறுபதிப்பு, 2000

36. நாகராசன் **குறுந்தொகை (பகுதி–1, 2)**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பிரை.லிட்)
41–பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை–600 098.
முதற்பதிப்பு, ஏப்ரல் 2004.

37. பதிப்பகக் குழு **பழமொழி,**
சாரதா பதிப்பகம்,
ஜி–4, சாந்தி அடுக்ககம்,
2/3, கிருஷ்ணாபுரம் தெரு,
இராயப்பேட்டை, சென்னை–14.

38. பரமசிவானந்தம் ஆ.மு. **வரலாற்றுக்கு முன் வடக்குத் தெற்கு,**
வள்ளியம்மாள் கல்வி அறம்,
அண்ணாநகர் கிழக்கு,
சென்னை–102.
திருத்திய இரண்டாம் பதிப்பு, 1990.

39. பரிதிமாற் கலைஞர் **தமிழ்மொழியின் வரலாறு**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை–600 113.
மறுபதிப்பு, 2003.

40. பரிமேலழகர் **திருக்குறள்**
பூம்புகார் பதிப்பகம்,
127, பிரகாசம் சாலை,
சென்னை – 18.
மூன்றாம் பதிப்பு, 2001.

41. பாக்கியமேரி **தமிழின் செம்மொழிப் பண்புகள்**
அஞ்சனச் சிமிழ் பதிப்பகம்,
10/2, சீனிவாசா சாலை, மயிலாப்பூர்,
சென்னை– 600 004.
முதற்பதிப்பு, ஆகஸ்ட் 2012

42. பாலசுப்பிரமணியன்.கு.வெ. **சங்க இலக்கியத்தில் புறப்பொருள்**
மெய்யப்பன் பதிப்பகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்–608 001.
முதற்பதிப்பு, மே 2017

43. பாலுசாமி.நா. **வாழ்வியற் களஞ்சியம்,**
தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
தஞ்சாவூர்.
பதிப்பு, 1986

44. புலியூர்க் கேசிகன் **மணிமேகலை**
பாரி நிலையம்,
184, பிராட்வே,
சென்னை–108.
முதற்பதிப்பு, 1961.
பதின்மூன்றாம் பதிப்பு, 2005.

45. மணவை முஸ்தபா **செம்மொழி உள்ளும் புறமும்**
அறிவியல் தமிழ் அறக்கட்டளை,
AE-5, அண்ணாநகர்,
சென்னை–40. முதற்பதிப்பு, 2004.

46. மணி.பெ.சு. **சங்ககால அவ்வையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி.லிட்)
41–பி, சிட்கோ இண்டஸ்டிரியஸ் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை–600 098.
பதிப்பு, 2004.

47. மலையமான் **செவ்வியல் மொழி தமிழ்**
அன்புப் பதிப்பகம்,
புது எண்.4,
அரங்காச்சாரி சாலை,
சென்னை–600 018.
முதற்பதிப்பு, டிசம்பர் 2001.

48. முகிலன்.பொன். **செம்மொழித் தமிழின் செவ்வியல் தன்மைகள்**
தமிழன்னை பதிப்பகம்,
391, பாரதிதாசன் நகர்,
குள்ளம்பாளையம்,
முதற்பதிப்பு, 2007.

49. முருகேச பாண்டியன்.ந. **அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்**
என்சிபிஹெச் பதிப்பகம்,
சென்னை.

50. லோகநாத முதலியார் **திவாகர நிகண்டு**
மகோன்மணி விலாச அச்சுக்கூடம்,
சென்னை.

51. வரதராஜன்.மு. **மொழிநூல்,**
பாரி நிலையம்,
90, பிராட்வே,
சென்னை–18.
மறுபதிப்பு, 2015.

52. வள்ளிநாயகி **தமிழ் வளர்த்த மகளீர்**
இலக்குமி நிலையம்,
சென்னை.
இரண்டாம் பதிப்பு, 1990

53. வித்யானந்தன்.சு. **தமிழ் சால்பு**
பாரி புத்தகப் பண்ணை,
திருவல்லிக்கேணி,
சென்னை–05.
பதிப்பு, 1971.

54. வேங்கடராமன்.கா.கோ. **தமிழ் இலக்கிய வரலாறு**
கலையக வெளியீடு,
193–H, கண்டர் நகர்,
பரமத்திவேலூர், நாமக்கல்.
முதற்பதிப்பு, 2001.

55. வேலுப்பிள்ளை.ஆ. **கலைக்களஞ்சியம் (தொகுதி–ஏழு)**
தமிழ் வளர்ச்சிக் கழகம்,
சென்னை.
முதற்பதிப்பு, 1959.

56. ஜான் சாமுவேல்.ஜி. **செம்மொழிகளின் வரிசையில் தமிழ்**
முல்லை நிலையம்,
சென்னை–600 017.

<u>**அகராதிகள்**</u>

1. ஆசிரியர் குழு **வின்சுலோவின் ஆங்கிலத் தமிழ் அகராதி**
நியூ டெல்லி,
ஆசியன் எஜிகேஷனல் சர்வீஸ்

2. கழகப் புலவர் குழு **கழகத் தமிழ் அகராதி**
திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம் லிட்,
டி.டி.கே.சாலை, சென்னை–18.

3. சிதம்பரநாத செட்டியார் **ஆங்கில–தமிழ்ச் சொற்களஞ்சியம்**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.
1992

4. சுப்பிரமணியன்.பா.ரா. **கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி**
கிரியா பதிப்பகம்,
இராயப்பேட்டை நெடுஞ்சாலை,
சென்னை–14.
பதிப்பு, 1992.

5. வையாபுரிப்பிள்ளை.எஸ். **தமிழ் பேரகராதி**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.
1982

6. பாலுசாமி.நா. **தமிழ் லெக்சிகன்**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.
1987.

**முனைவர்பட்ட ஆய்வேடுகள்**

1. இராஜேந்திரன்.ந. **சங்க இலக்கியத்தில் வரலாற்றுப் பதிவுகள்,** அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி.
2. மகாலட்சுமி.வீ. **சங்க இலக்கியத்தில் சிந்தனை முறைகளும் படைப்பாக்க நெறிகளும்,** மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம், திருநெல்வேலி.

**இதழ்கள்**

1. முத்துச்செல்வன்.கா. **அரிமா நோக்கு,** காலாண்டு இதழ், ஜனவரி, 2014.

**இணையதளம் :** http://tamil.dinamalar.com

# சங்ககால மக்களின் இசைக்கருவிகள்










Shánár Musicians.

# சங்ககால மக்களின் கொடை











# சங்ககால மக்களின் வீரம்











# சங்ககால மக்களின்  விருந்தோம்பல்





# சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள்

பெரியார் பல்கலைக்கழகமுனைவர் பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
கா.கலையரசி
(பகுதிநேர முனைவர் பட்டஆய்வாளர்)
பதிவுஎண் : PU/R/RD/26246/2015

நெறியாளர்
முனைவர் து.ரேணுகாதேவி எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
உதவிப்பேராசிரியர்

தமிழ்த்துறை
திருவள்ளுவர் அரசுகலைக்கல்லூரி
(தேசியத் தரச்சான்று ‘ஏ’ மறு நிர்ணயம் செய்யப்பட்டது)
இராசிபுரம் -637401.
அக்டோபர் 2020

# இயல் – நான்கு

## சங்கப்புற இலக்கியங்களில் மகளிரின் செவ்வியல் கூறுகள்

பெண் என்பவள் அமைதி, அழகு, மென்மை, சாந்த குணங்களை உடையவள் இல்லத்தைப் பேணுபவள், குழந்தைகள் பெறுபவள் என்று அடக்கி ஆண்டனர். பிற்காலத்தில் ஒவ்வொரு அடக்குமுறையையும் உடைத்து சிறுசிறு உரிமைகளைப் பெற்று வீட்டை மட்டும் அல்ல நாட்டையும் ஆளும் அளவிற்குப் பெண்கள் சரிநிகர் சமமாக வாழத் துவங்கினர். இவர்களின் வாழ்க்கையினையும் வரலாற்றையும் போற்றாமல் இருக்க முடிவதில்லை. அக இலக்கியங்களுக்கு மட்டுமே பொருத்தம் உடையவர்கள் எனும் வரையறையை உடைத்து புற இலக்கியங்களிலும் முதன்மையாளர்களாக, வீரம் நிறைந்தவர்களாக வாழ்ந்த பான்மையை மகளிரின் மறப்பண்பு வழி அறியலாம். புற இலக்கியம் சார்ந்த பெண்மணிகள் தான் பெற்ற பிள்ளையானாலும் போர்க்களத்தில் வீரமரணத்தை விரும்புவளாகவும் தான் மணம் புரிந்த கணவனே ஆனாலும் போர்க்களத்தில் விழுப்புண் பட்டு இறத்தலே சாலச் சிறந்ததாகவும் எண்ணினர். ஒழுக்கநெறி தவறாது கற்புப் பூண்டவளாகவும் துன்பங்களைத் துய்த்தேனும் கற்பினைக் காப்பவளாகவும் ஆண்களுக்குச் சளைக்காத மகளிராக சிறப்புப் பெற்றனர். நாட்டின் ஆட்சித் திறத்திலும் அமைச்சுப் பணியிலும் கல்வியிலும் புலமை மிகுதியால் சிறந்து விளங்கினர். தமது பாடல்கள்மூலம் நாட்டைக் காக்கும் சிறந்த பெண்பாற் புலவர்களாகவும் சிறப்புப் பெற்று இருத்தலை உணர்த்துவதே இவ்வியலின் நோக்கமாகும். கற்பும் வீரமும் நிறைந்தே இருப்பினும் இல்லறத்து விருந்தினர்க்கு விருந்து அளிப்பதில் சிறந்தவர்களாகவும் தமிழர் பண்பாட்டை காப்பவர்களாகவும் சிறந்து விளங்கிய சங்கப்புற இலக்கிய மகளிரின் செவ்வியல் கூறுகளை ஆராயும்விதமாக இவ்வியல் அமைகின்றது.

### மகளிரின் மறப்பண்பு

புற இலக்கியங்களில் முதன்மை பெறுவது மறவுணர்வே ஆகும். மனிதன் தோன்றிய நாள் முதலே அவனோடு உடன் வருவது இவ்வீரப்பண்பே எனலாம். போர்ச் சமுதாயமாக விளங்கிய சங்க காலத்தில் ஆடவர்களைப் போலவே மகளிரும் மறவுணர்வு உடையவர்களாக திகழ்ந்தனர். இம் மறவுணர்வும் மன உறுதியும் படைத்த மகளிர்

'மூதின் மகளிர்' எனப் போற்றப்பட்டனர். 'வீரமும் தியாக உணர்வும் மிக்கவர்களைச் சங்க காலச் சமுதாயம் மூதின் மகளிர் என்று அழைத்தனர்' என்று ஸ்ரீகுமார் கூறுகிறார்.

வீரத்தில் சிறந்தவர்கள் 'மூதின் மகளிர்' (புறம்.279), 'மறக்குடித்தாள்' என அழைக்கப்பட்டனர். இவர்களிடம் மறப்பண்பு மிகுந்து அரசு, நாடு பற்றிய எண்ணங்கள் செறிந்தும் காணப்பட்டன. இதனை

**"மறங்கடை கூட்டியகுடிநிலை"[1]**

எனத் தொல்காப்பியமும்

**"அடல்வேல் அடவர்க் கன்றியும் அவ்விரல்**
**மடவரல் மகளிர்க்கு மறம் மிகுத்தன்று"[2]**

என புறப்பொருள் வெண்பாமாலையும் குறிப்பிட்டுள்ளது.

சங்ககாலங்களில் போர் மறப்பண்பானது ஆண்களிடையே வயது வேறுபாடின்றி எல்லாப் பருவத்தினருக்கும் பொதுவாக இருந்துள்ளது. அம்மறப்பண்பைச் சங்ககால மகளிர் தங்கள் குழந்தைகளுக்கு இளமை முதலே கற்றுக் கொடுத்து வளர்த்து வந்தனர். எனவே சிறுவயது முதலே பெண்கள் மறப்பண்பு உடையவர்களாக வளர்ந்து வந்தனர் என்பது தெளிவாகிறது.

## தாயின் மறப் பண்பு

பெண்ணொருத்தி ஒரு தாயிடம் சென்று உன் மகன் எங்கே எனக் கேட்டாள். அதற்கு அத்தாய் புலி இருந்து பின் பெயர்ந்து சென்ற கற்குகையைப் போல அவனை ஈன்ற வயிறு இதுவேயாகும். ஆனால், அவன் போர்க்களத்தில் இருப்பான். அவனை அங்கு சென்று காண்க என்கிறாள். இதை

**"சிற்றில்நற்றூண் பற்றி நின்மகன்**
**யாண்டுள னோவென வினவுதி ; என் மகன்**
**யாண்டுளன் ஆயினும் அறியேன் ; ஓரும்**
**புலிசேர்ந்து போகிய கல்அளை போல**
**ஈன்ற வயிறோ இதுவே ;**
**தோன்றுவன் மாதோ போர்க்களத் தானே"[3]**

முதல் நாள் நடந்த போரில் இவளது தந்தை யானையைக் கொன்று தானும் இறந்தான். இரண்டாம் நாள் போரில் இவன் கணவன் பசுக்கூட்டங்களைப் பகைவர்

கவராவண்ணம் தடுத்து நிறுத்தி தானும் இறந்தான். மூன்றாம் நாள் போருக்குரிய முரசொலியைக் கேட்டு அம்மறக்குடித் தாய் மனம் வருந்தவில்லை மகிழ்ச்சி அடைகிறாள். தனக்கு ஆதரவாக இருந்த ஒரே மகனையும் போருக்கு அனுப்ப முடிவு செய்கிறாள். தெருவில் விளையாடிக் கொண்டிருந்த மகனை அழைத்து அவனுக்கு வெள்ளை ஆடையை உடுத்தி, வேலைக் கையிலே தந்து பரந்து கிடந்த தலைக்கு எண்ணெய் தேய்த்து தலைவாரிப் போர்க்களம் நோக்கி போய்வா எனக் கூறுகிறாள். இதனை

**"மேல்நாள் உற்ற செருவிற் இவள்தன்னை,**
**யானை எறிந்து, களத்துஒழிந் தனனே ;**
**நெருநல் உற்ற செருவிற் இவள் கொழுநன்**
**பெருநிரை விலங்கி, ஆண்டுப்பட் டனனே ;**
**இன்றும் செருப்பறை கேட்டு, விருப்புற்று மயங்கி,**
**வேல்கைக் கொடுத்து, வெளிதுவிரித்துஉ டீஇப்,**
**பா றுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி,**
**ஒருமகன் அல்லது இல்லோள்,**
**'செருமுக நோக்கிச் செல்க' என விடுமே!"[4]**

என்று புறநானூறு பாடல் உணர்த்துகிறது. இப்பாடல்மூலம் சங்கத் தாயின் மறப்பண்பை நம்மால் உணர முடிகிறது.

## தாயின் பெருமிதம்

போர்க்களத்தில் புறமுதுகு காட்டி ஓடாத கொள்கையினை உடைய ஒரு வீரனுடைய தாய்க்குப் போரின்முடிவில் அவள் மகன் இறந்த செய்தி தெரிவிக்கப்படுகிறது. அதனால் அவள் தன் மகன் இறந்து கிடக்கும் நிலையினைக் காணப் போர்க்களம் செல்கின்றாள். அப்போர்க்களத்தில் தன்னை எதிர்த்த பகைவரைக் கொன்று, முடிவில் தன் மகன் வெட்டுண்டு சிதைந்து வேறுபட்டுள்ளதை அறிந்தாள். பின்னிட்டு ஓடாத கொள்கையினை உடைய அவ்வீரனின் தாய் அன்பினால் வாடிய அவளது உள்ளத்தில் பெருமித உணர்வு தோன்ற அவளுடைய வற்றிய மார்புகள் மீண்டும் பாலூறிச் சுரந்தன என்று ஒளவையார் ஒரு தாயின் பெருமித உணர்வினை எடுத்துக் கூறுகிறார். இதனை,

**“சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி,**

**வாடுமுலை ஊறிச் சுரந்தன**

**ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே”[5]**

என இப்புறநானூறு பாடல் கூறுகின்றது. வீரத்தாயின் வீர உணர்வை வெளிப்படுத்தவே ‘ஓடாப் பூட்கை’ (குலையாத மனவுறுதி) என்ற சொல் கையாளப்பட்டது.

மீன் கொத்திப் பறவையின் சிறகைப் போல் நரைத்த கூந்தலையுடைய முதியவள் மகன் இளையவன். தன்னை நோக்கி வந்த ஆண்யானையைக் கொன்று போர்க்களத்தில் அவனும் இறந்துபட்டான். இச்செய்தியைக் கேட்ட தாய் அவனை ஈன்ற பொழுதைவிடப் பெரிதும் மகிழ்ந்தாள் என்பதை,

**“மீன் உண் கொக்கின் தூவி அன்ன**

**வால்நரைக் கூந்தல் முதியோட் சிறுவன்**

**களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை**

**ஈன்ற ஞான்றினும் பெரிதே”[6]**

என்று தாய் பெருமிதம் கொள்வதாக இப்புறநானூற்றுப் பாடல் அமைந்துள்ளது.

## வீரமரணத்தை விரும்பும் தாய்

நரம்புகள் தளர்ந்து வற்றிய தோள்களையும் தாமரை இலை போன்ற அடிவயிற்றினையும் உடைய வயது முதிர்ந்த ஒரு தாயினுடைய மகன் போர்க்களத்திற்குச் சென்றிருந்தான். அத்தாயின் மகன் பகைவர் படை கண்டு அஞ்சி புறங்கொடுத்து மாண்டான் என்று சிலர் அந்த தாயிடம் கூறுகின்றனர். இதைக் கேட்ட தாய் என் மகன் முதுகில் புண்பட்டு இறந்து கிடப்பானேயானால், அவன் பாலுண்ட மார்பை அறுத்தெறிவேன் என்ற வீர ஆவேசத்துடன் கையில் வாளேந்திக் கொண்டு செறுகளம் சென்று இறந்து கிடக்கும் வீரர்களுடைய பிணங்களைப் புரட்டிப் புரட்டிப் பார்த்துக் கொண்டு வந்தாள். அப்பொழுது தன் மகனின் மார்பில் விழுப்புண் பட்டு உடல் வேறு வேறாகச் சிதைந்து கிடந்த நிலை கண்டு அவனைப் பெற்ற நாளில் கொண்ட உவப்பினும் பேருவகை கொண்டாள் என்பதை,

**“நரம்பு எழுந்து உலறிய நிரம்பா மென்தோள்,**

**முளரி மருங்கின், முதியோள் சிறுவன்**

**படை அழிந்து மாறினன்”** என்று பலர் கூற,

**“மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின், உண்டஎன்**
**முலை அறுத்திடுவென், யான்” எனச் சினைஇக்,**
**கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்**
**செங்களம் துழவுவோள், சிதைந்துவே றாகிய**
**படுமகன் கிடக்கை காணூஉ,**
**ஈன்ற ஞான்றினும் பெரிதுஉவந் தனளே!”[7]**

எனும் இப்புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது.

அச்சம் விளைவிக்கின்ற போர்க்களத்தில் தம் தலைவன், புதல்வர்கள் என அனைவரும் இறந்தனர் என்ற செய்தியைக் கேட்ட பெண் துயரமடையாது மகிழ்ச்சியடைந்தாள் என்பதை

**“எறிந்து களம் படுத்த ஏந்துவாள் வலத்தர்**
**எந்தையோடு கிடந்தோர்எம் புன்தலைப் புதல்வர்**
**இன்ன விறலும் உளகொல் நமக்கென**
**மூதில் பெண்டீர் கசிந்துஅழ நாணிக்**
**கூற்றுகண் ஓடிய வெருவரு பறந்தலை”[8]**

என்று இப்புறநானூற்றுப் பாடல் சான்று பகர்கின்றது. இவ்வாறாக வீரமரணத்தையே அக்கால மறப்பெண்கள் விரும்பினர் என்பதை இப்பாடல் தெளிவாக உணர்த்துகிறது. இதன்மூலம் அக்கால மகளிரும் வீரவுணர்வு நிரம்பியவர்களாக விளங்கினர் என்பது தெளிவாகிறது.

## கணவனைப் போர்க்களத்தில் காணல்

வீரப்பெண்ணொருத்தி கணவன் போர் செய்த களத்திற்குச் சென்று தன் கணவனைப் பார்க்கின்றாள். அவன் மாற்றானின் நெடிய வேல் தன் மார்பில் பாய்ந்ததால் புண்பட்டு நின்றான். மார்பில் இருந்து குருதி வருவதால் கழுகுகள் அவனை மொய்த்துக் கொண்டிருந்தது. இந்நிலை காண்பவருக்கு அச்சம் உண்டாக்கும். ஆனால் இந்நிலையில் இருக்கும் தன் கணவனை அப்பெண் அவனைப் புகழ்ந்து தன் மார்போடு அணைத்துக் கொண்டாள். அதற்குத் தடையாக அக்கழுகுகள் மொய்த்தன. அதற்கும் அஞ்சாது அவனைத் தழுவி மகிழ்ந்தாள். இதனை,

**“நெடுவேல் பாய்ந்த நாணுடை நெஞ்சத்து,**

**அருகுகை . . . . . . . . மன்ற**

**குருதியோடு துயல்வரும் மார்பின்**

**முயக்கிடை ஈயாது மொய்த்தன, பருந்தே”[9]**

என்ற இப்புறநானூற்றுப் பாடலின் வழி கழாத்தலையார் ஒரு பெண்ணின் வீரத்தை உணர்த்தியுள்ளார்.

மறக்குடி பெண் ஒருத்தி போர்க் களத்திலிருந்து மீளாத கணவனைக் காணப் போர்க்களம் சென்றாள். அங்கு அவன் விழுப்புண் பட்டுக் கிடந்தான். அக்களமானது புலி முதலிய கொடிய விலங்குகள் வாழும் காட்டருகே அமைந்து உள்ளதால் அவ்விலங்குகள் ஏதாவது வந்து உன்னை தூக்கிக் கொண்டு சென்று விடுமே என அச்சமடைந்தாள். அக்களத்தில் இருந்து நிழல் இருக்கும் இடத்திற்குக் கொண்டு செல்வதற்கு என்னால் முடியவில்லையே என்று வருந்துகின்றாளே ஒழிய அவன் இறந்தமைக்காக அவள் வருந்தவில்லை என்பதை,

**“ஐயோ! எனின் யான் புலிஅஞ் சுவலே ;**

**அணைத்தனன் கொளினே, அகன்மார்பு எடுக்கவல்லேன் ;**

**என்போல் பெருவிதிர்ப்பு கூறுக, நின்னை**

**இன்னாது உற்ற அறளில் கூற்றே !**

**நிரைவளை முன்கை பற்றி**

**வரைநிழல் சேர்கம் கடத்திசின் சிறிதே”[10]**

என புறநானூற்றுப் பாடல் விளக்குகின்றது. போர்க்களத்தில் கணவன் இறந்ததற்காக வருந்தாத தலைவியின் உணர்வுகளைச் சொல்லும் இப்பாடலின்மூலம் அக்கால மகளிரின் வீர உணர்வுகளை நம்மால் உணர்ந்து கொள்ள இயலுகிறது.

## நன்றி கடன் தீர்க்க விரும்பும் தாய்

மறக்குல மங்கை ஒருத்தி,

**“பலர்மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக்**

**கால்கழி கட்டிலிற் கிடப்பித்,**

**தூவெள் அறுவை போர்பித் திலதே!”[11]**

என்று வெள்ளிய நிறத்தையுடைய வெள்ளாட்டுக் கிடாய்களைப் போல இளைஞர் கூட்டம் இருக்க, அவர்களுள் என் மகனுக்கு மட்டுமே அரசன் சிறப்பாகக் கள் நல்கினான். அப்படிப்பட்ட சிறப்புகளைப் பெற்ற என் மகனை அரசன் கண்ணீர்மல்கப் பாடையில் கிடத்தி தூய வெள்ளாடையால் மூடும் பேறு கிட்டவில்லையே என்று தனது ஏக்கத்தையும், வீர உணர்வையும் புலப்படுத்துவதாக ஔவையாரின் புறநானூற்றுப் பாடல் பாடுகிறது. மேலும்,

**“புரந்தார்கண் நீர்மல்கச் சாகிற்பின் சாக்காடு**
**இரந்து கோள்தக்கது உடைத்து”[12]**

என்ற திருக்குறளில் வேந்தன் பொருட்டும், மன்னனை காக்கும் பொருட்டும் இறப்பை ஏற்றுக் கொள்வது சிறப்புக்குரியது என வள்ளுவப் பெருந்தகையும் குறிப்பிட்டுள்ளது ஈண்டு எண்ணத்தக்கதாகும். அக்கால மகளிரின் வீர உணர்வுகளைச் சங்க இலக்கியங்கள் உணர்த்தியதைப் போலவே செவ்வியல் பண்புகளில் ஒன்றான கற்பையும் வலியுறுத்திக் கூறுகின்றன.

## கற்பு

கற்பு என்பது வாழ்வின் ஒழுக்கநிலை, உண்மைத் தன்மையைக் கொண்டது. ‘கற்பு’ என்ற சொல்லிற்கு ‘கணவன் கற்பித்த வழியில் மனைவி நிற்றல்’ என்றும் ‘கற்போன்ற திண்மை நெஞ்சு உடையளாயிருத்தல்’ என்றும் பொருள் கூறுவர். மகளிரின் கற்பு மேன்மையைச் சிலப்பதிகாரத்தில் ‘உரைசால் பத்தினையை உயர்ந்தோர் ஏத்துவர்’ என இளங்கோவடிகள் கூறுகிறார். இளங்கோவடிகள் கண்ணகியின் பெருமையினைக் கவுந்தியடிகள் வாயிலாகச் சிறப்பித்துப் பேசும்பொழுது,

**“இன்றுணை மகளிர்க் கின்றி யமையாக்**
**கற்புக்கடம் பூண்ட இத்தெய்வ மல்லது**
**பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்”[13]**

என சிலப்பதிகாரத்தில் கண்ணகியின் கற்புத் திறனைப் போற்றிக் கூறியுள்ளார். கற்பின் திறன் குறித்து தொல்காப்பியர்,

**“உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**
**செயிர்தீர் காட்சிக் கற்பு சிறந்தன்று எனத்**
**தொல்லோர் கிளவி”[14]**

ஒரு பெண் தன் உயிரைவிட நாணத்தைப் போற்ற வேண்டும். அந்நாணத்தை விட கற்பு சிறந்தது எனப் போற்ற வேண்டும் என்று கூறுகின்றார்.

## இலக்கியங்களில் கற்பு

கற்புடைய மகளிர் நினைத்தால் மழையைக் கூட வரவழைக்க முடியும் என்ற நம்பிக்கை சங்ககால மக்களிடம் இருந்தது. குறிஞ்சிக் கலியில் தலைவியின் பெருமையைக் குறிக்கும் இடத்தில் உலகம் செழிக்க மழை வேண்டுமெனில் அதனை வருவித்து தருகின்ற பெருமை உடையவள் பெண் என்று பெண்மையின் பண்புநலன் சிறப்பிக்கப் பட்டுள்ளது. இதனை,

**“வான் வரும் கற்பின் மனையுறை மகளிர்”[15]**

என மகளிரின் கற்பு நெறிப் பண்பை மணிமேகலை கூறுகின்றது. மேலும் கற்புடைய மகளிர் வாழும் நாட்டில் வானம் தவறாமல் மழை பெய்து, விளைச்சல் குறையாது இருக்கும் என்று மக்கள் நம்பினர். இதனை,

**“வானம் பொய்யாது வளம் பிழைப்பு அறியாது**
**நீள்நில வேந்தர் கொற்றம் சிதையாது”[16]**

என்று இச் சிலப்பதிகாரப் பாடல் கூறுகின்றது.

மனைவியர்க்குக் கற்பு நெறியே சிறந்த காவல் என்றும் அவளுக்கு வீட்டுச்சிறை எப்பயனும் தராது என்பதைத் திருக்குறள்,

**“சிறைகாக்குங் காப்பு எவன் செய்யும் மகளிர்**
**நிறைகாக்குங் காப்பே தலை”[17]**

என்று கூறுகின்றது. இல்லத்தைச் சிறக்கச் செய்தல், விருந்தினரை உபசரித்தல், மக்களைப் பெற்றிருத்தல் ஆகிய மூன்று கடமைகளையும் சிறப்புற செய்பவள் கற்புடைய பெண் என்பதை,

**“நல்விருந் தோம்பலின் நட்டாளாம் வைகலும்**
**இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய் – தொல்குடியின்**
**மக்கள் பெறலின் மனைகிழத்தி இம்மூன்றும்**
**கற்புடையாள் பூண்ட கடன்”[18]**

என்ற திரிகடுகப் பாடல் வழி அறியலாம்.

## கற்பின் பெருமை

தன்னிடம் வந்து யாசித்துப் பொருள் கேட்கும் இரவலர்கள், புலவர்கள், தங்களுடைய மனைவியை அறிமுகப்படுத்தும்போது கற்புடைய பெண்டீர் என்றும், பாடல் தலைவனைக் குறிப்பிட 'கற்பினையுடையவளின் கணவன்' என்றும் சில இடங்களில் அறிமுகப்படுத்தி உள்ளனர். இதனை,

**"செயிர்தீர் கற்பின் சேயிழை கணவ!"**[19]

என்று பாண்டியன் கருங்கை ஒள்வாள் பெரும் பெயர்வழுதியை வாழ்த்தும் போது, குற்றமில்லாத் தலைக்கற்பின் மாண்புடைய மங்கையின் மணாளன் என்று இரும்பிடர்த் தலையார் குறிப்பிடுகின்றார்.

தமிழ்க் கடவுள் என்று அழைக்கப்படும் முருகப் பெருமானைத் திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் அறிமுகப்படுத்தும்போது, குற்றமற்ற கற்பினையுடைய தெய்வானையின் கணவன் என்று கூறுவதை,

**"மறுஇல் கற்பின் வாணுதல் கணவன்"**[20]

இவ்வடியில் காண முடிகின்றது.

பெருங்குன்றூர்கிழார் இளஞ்சேரல் இரும்பொறையை வாழ்த்தும்போது அரசியின் கற்பு நெறியின் சிறப்பை கூறி அரசனை வாழ்த்தியுள்ளார். இதனை,

**"ஆறிய கற்பின், தேறிய நல் இசை,**
**வண்டு ஆர்கூந்தல், ஒண் தொடி கணவ"**[21]

**"சேண் நாறு நல் இசைச் சேயிழை கணவ"**[22]

இப் பதிற்றுப்பத்து அடிகள் விளக்குகின்றது.

தெய்வத் தன்மைக் கொண்ட கற்பினையும் செந்நிற அணிகளையும் அணிந்தவள் நன்மாறனின் மனைவி. அவள் கற்பு என்னும் குணம் நீங்காமல் நிலைபெற்றவள், செல்வக் கடுங்கோ வாழியாதனின் மனைவி என்கிறார். இதனை,

**"கற்பு இறை கொண்ட கமழும் சுடர் நுதல்"**[23]

**"கடவுள் சான்ற கற்பின், சேயிழை மடவோள்"**[24]

என்று வடமவண்ணக்கன் பேரிச்சாத்தனாரும் கபிலரும் பாடியுள்ளது குறிப்பிடத்தக்கது.

## கற்பின் தன்மை

அழகிய காடுகளில் வளர்ந்திருக்கும் முல்லைப் பூவினுடைய அரும்பானது பல்லின் வெண்மையை ஒத்துக் காணப்படுகிறது. அவ்வாறு உள்ள வெண்மையான முல்லைப் பூவைப் போன்றது விறலியின் கற்பு. இதனை,

**“குல்லைஅம் புறவில் குவிமுகை அவிழ்ந்த**
**முல்லை சான்ற கற்பின்”[25]**

இச் சிறுபாணாற்றுப் படை கூறுகின்றது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மனைவி அறக்கற்பை உடையவள், அடக்கத்தோடு கூடிய பெண்மையை உடையவள் என்பதை,

**“ஆறிய கற்பின் அடங்கிய சாயல்”[26]**

என்று இப் பதிற்றுப் பத்து கூறுகின்றது.

தன்னிடம் நிரம்பிய கற்பினையும், அழகிய நெற்றியையும் உடைய ஒரு பெண்மணி தன் கணவன் விண்ணுலகம் சென்ற பிறகும்கூட அவன் இறந்த இடத்திற்குச் சென்று அவனுக்கு உணவிட விரும்புவதை,

**“அடங்கிய கற்பின் ; ஆய்நுதல் மடந்தை,**
**உயர்நிலை உலகம், அவன்புக வார”[27]**

என்று இப் புறநானூற்றுப் பாடல் அடிகள் கூறுவதை அறிய முடிகின்றது. மாறோக்கத்து நப்பசலையார் அவியனைப் புகழும்போது, அவனது மனைவி கற்புடைய மடந்தையாகியவள் புறத்திருப்பதை,

**“கற்புடை மடந்தை தன்புறம் புல்ல”[28]**

எனப் புறநானூற்று அடிகள் கற்பின் தன்மையைக் கூறுகின்றது.

## அருந்ததியை ஒத்த கற்பு

**“வடமீன் புரையும் கற்பின் மடமொழி”[29]**

**“மீனொடு புரையும் கற்பின்”[30]**

**“சேண் நாறு நறு நுதல், சேயிலை கணவ !”[31]**

**“செம்மீன் அனையள், நின் தொல் நகர்ச் செல்வி”[32]**

**“பெருநல் வானத்து வடவயின் விளங்கும்**
**சிறுமீன் புரையும் கற்பின்”[33]**

அருந்ததியை போன்ற கற்புடையவர்களாக, இளஞ்சேரல் இரும்பொறையின் தேவி, திருமுடிக்காரியின் மனைவி, களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் மன்னனின் தேவி, செல்வக் கடுங்கோ வாழியாதனின் மனைவி, வார்ப்பிணி ஆகியவர்களின் கற்பை ஒப்பிட்டுப் புலவர்கள் கூறுகின்றனர். அருந்ததி வானத்தில் நட்சத்திரமாக ஒளிவீசுகிறாள் என்ற சங்க கால மக்களின் நம்பிக்கையை இப்பாடல் வெளிப்படுத்துகிறது. அக்கால மகளிர் கற்புத்திறம் உடையவர்களாக விளங்கியதை இப்பாடல்கள் வழி தெள்ளிதின் உணர முடிகிறது. கற்புத்திறம் போலவே சங்ககால மகளிர் கல்வித்திறனினும் சிறப்புப் பெற்று விளங்கினர்.

## சங்கப் பெண்பாற் புலவர்களின் கல்வித் திறன்

சங்க கால மகளிர் கல்வி நலம் மிக்கவர்களாக விளங்கியுள்ளனர் என்பதனை இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. இம்மகளிர் ஆழ்ந்த மொழிப்புலமை பெற்றவர்களாகவும் மொழிவளம் பேணும் மாண்பினராகவும் மொழிவளம் பெருக்கும் புலவர்களாகவும் விளங்கியுள்ளனர். அவ்வாறு மகளிர் தனித்து விளங்குவதற்கு காரணம் அவர்களின் செயல்திறமே ஆகும்.

**“மகளிர் தமது கடமையில் ஈடுபட்டிருக்குங்கால் அல்லது ஒரு செயலை மேற்கொண்டிருக்கும்கால் முழுக் கவனத்தையும் செலுத்திச் செயற்படுவதால் தம்மையும் மறக்கும் நிலைக்கு ஆளாகி விடுவதுண்டு”**[34] என்று வள்ளி நாயகி அவர்கள், மகளிர் தாம் மேற்கொண்ட செயலில் முழு ஈடுபாட்டையும் செலுத்தும் மனப்பாங்குடையவர்கள் என்றும் முழு கவனத்தையும் ஒருமுகமாகச் செலுத்தி அவ் வேலையைச் சிறப்பாக முடித்த பின்பே வேறு செயலில் ஈடுபாடு செலுத்துவர்கள் என்றும் கூறுகிறார்.

சங்க காலப் பெண்பாற் புலவர்கள் கல்வி அறிவிலும் கவி புனைந்து பாடும் ஆற்றலினும் சிறந்தவர்களாக இருந்திருக்கின்றனர். பெண்பாற் புலவர்கள் எத்தனை என்பதில் அறிஞர்களிடையில் மாறுபட்ட கருத்துக்கள் இருந்துள்ளன. **“பெண் கவிஞர்களின் எண்ணிக்கையினை குறிப்பிடும்போது உ.வே.சா. 38 எனவும் எஸ்.வையாபுரிப் பிள்ளை 30 எனவும் ஔவை துரைசாமிப்பிள்ளை 34 எனவும் புலவர் கா.கோவிந்தன் 27 எனவும் ஔவை.து.நடராசன் 41 எனவும் ந.சஞ்சீவி 25 எனவும் தாயம்மாள் அறவாணன் 45 எனவும குறிப்பிடுகின்றனர்”**[35] என முருகேச பாண்டியன்

கூறுகின்றார். பெண்பாற் புலவர்களைப் பற்றிய வரலாறுகள் தெளிவாய் அறியப்படவில்லை. இருப்பினும் அவர்கள் வாழ்ந்த காலத்தை அடிப்படையாகக் கொண்டு சில பாடல் வரிகளின்மூலம் அப்புலவர்களைப் பற்றிய குறிப்புகளை அறிய முடிகின்றது.

சங்க இலக்கியங்களில் உள்ள புறப் பாடல்களைப் பாடிய புலவர்களின் எண்ணிக்கை இருபது ஆகும். அப்புலவர்கள்

1. அள்ளூர் நன் முல்லையார்,
2. ஒக்கூர் மாசாத்தியார்,
3. ஔவையார்,
4. காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்,
5. காவற்பெண்டு,
6. குறமகள் இளவெயினி,
7. தாயங்கண்ணியார்,
8. நக்கண்ணையார்,
9. நெட்டிமையார்,
10. பாரி மகளிர்,
11. பூங்கணுத்திரையார்,
12. பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு,
13. பேய்மகள் இளவெயினி,
14. பொன்முடியார்,
15. மாற்பித்தியார்,
16. மாறோக்கத்து நப்பசலையார்,
17. முடத்தாமக் கண்ணியார்,
18. வெண்ணிக்குயத்தியார்,
19. வெள்ளைமாளர்,
20. வெறிப்பாடிய காமக் கண்ணியார்

ஆகிய புலவர்களின் கல்வித் திறம் அவர்களின் பாடல்கள் மூலமாக அகர வரிசையில் ஆராயப்படுகிறது.

## அள்ளூர் நன்முல்லையார்

இப்புலவரது இயற்பெயர் 'நன்முல்லை' என்பதாகும். இவர் வாழ்ந்த ஊரினை அடைமொழியாகக் கொண்டு 'அள்ளூர் நன்முல்லையார்' என்று சிறப்பிக்கப்பட்டுள்ளார். 'அள்ளூர்' என்பது பாண்டி நாட்டில் சிவகங்கைக்கண் அமைந்ததோர் ஊர் என்று உ.வே.சாமிநாதையர் குறிப்பிடுகின்றார். இக் கூற்றினை மெய்ப்பிக்கும் வகையில் 'ஒளிறு வாட் தானைக் கொற்றச் செழியன் பிண்டட நெல்லின் அள்ளூர்' எனும் அகநானூற்றுப் பாடல் அமைந்துள்ளது. இவருடைய **(306, 340)** இரண்டு பாடல்கள் புறநானூற்றில் அமைந்துள்ளன.

**"களிறு பொரக் கலங்கு, கழல்முள் வேலி,**
**அரிது உண் கூவல், அங்குடிச் சீறூர்**
**ஒலிமென் கூந்தல் ஒண்ணுதல் அரிவை**
**நடுகல்கை தொழுது பரவும் ஒடியாது**
**விருந்து எதிர் பெறுகதில் யானை, என் ஐயும்**
**ஒ....... வேந்தனோடு**
**நாடுதரு விருப்பகை எய்துக எனவே"[36]**

எனும் இப்புறநானூற்றுப் பாடல் மகளிரின் வீரப் பண்பினையும் நடுகல் வழிபாட்டையும் இல்லற மகளிரின் விருந்தோம்பல் பண்பு போன்றவற்றையும் எடுத்துக்கூறும் விதமாக அமைந்துள்ளது. மூதின் முல்லைப் பாடலும், 'வீரத்தில் சிறந்து விளங்கும் ஆண்மகனுக்கே தன் மகளை மணம் முடிப்பர், மற்றவர்களுக்குக் கொடுக்க மாட்டார்' என்ற மகட்பாற்காஞ்சி பாடலும் **(புறம்.340)** நன்முல்லையார் பாடிய பாடல்கள் ஆகும்.

## ஒக்கூர் மாசாத்தியார்

ஒக்கூரில் வாழ்ந்த பெண்பாற்புலவர் இவர். ஒக்கூர் என்பது பாண்டி நாட்டில் சிவகங்கைக்கு வடதிசையில், திருக்கோட்டியூருக்கு அருகேயுள்ள ஊர் ஆகும். இவரது இயற்பெயர் 'சாத்தி' என்பதாகும். 'மா' என்பது உயர்வையும் பெருமையையும் குறிக்கும் அடைமொழி. இவர் புறநானூற்றுப் **(279)** பாடலில் தந்தையும் கொழுநனும் **(கணவனும்)** போரில் வீழ்ந்த பிறகு மறக்குடி மங்கை ஒருத்தி தன் ஒரே மகனைப் போருக்கு அனுப்பி வைக்கும் வீரமரபைப் போற்றும் விதமாகப் பாடியுள்ளார்.

**"ஒரு மகன் அல்லது இல்லோள்,**
**செருமுக நோக்கிச் செல்க' என விடுமே"[37]**

என்ற புறநானூற்றுப் பாடல் இன்றைய நாளிலும் படிப்பவர் உள்ளத்தில் வீர உணர்வையும் நாட்டுப் பற்றினையும் ஊட்டுவதாய் அமைந்துள்ளது. ‘ஒரு மகன் அல்லது இல்லோள்’ என்பதில் வெளிப்படக் கூடிய அவலச் சுவையானது உணர்வுப் பூர்வமாக மட்டுமே உணரக் கூடியது ; சொற்களால் விளக்கம் தந்தால் அதனை உணர முடியாத அளவிற்கு ஒக்கூர் மாசாத்தியாரின் பாடல்கள் அமைந்துள்ளது ஈண்டு எண்ணத்தக்கதாகும்.

## ஔவையார்

சங்ககாலச் சமுதாயத்தில் தனி மதிப்பும் சிறப்பும் வாய்ந்தவராகத் திகழ்ந்தவர் ஔவையார். இவரால் தமிழ்மொழிக்கும் தமிழருக்கும் நிலைத்த பெருமை உண்டானது. அதிகப் பாடல்களைப் பாடிய பெண்பாற்புலவர் என்ற பெருமையினையும் பெற்றவர் ஆவார். **“உணர்ச்சிகளின் வன்மை, மென்மைக் கூறுகளைப் பாடுவதில் வல்லவர் என்பதை ஔவையாரின் படைப்புகள் குறிக்கின்றன. பிற பெண்பாற் புலவர்கள் இந்தக் கலை நெறியில் ஔவையாருடன் போட்டியிட முடியவில்லை. கபிலர், பரணர்க்கு அடுத்தபடியாக அதிக எண்ணிக்கையில் பாடல்களை யாத்தவரும் ஔவையாரே ; இதனாலும் சங்ககால ஔவையார், சங்ககாலப் பெண்பாற் புலவர்களின் கவியரசியாக உயர்ந்து நிற்கிறார்”[38]** என்று பெ.சு.மணி குறிப்பிடுகின்றார்.

ஔவையாரின் பாடல்கள் புறநானூற்றில் 33 பாடல்கள் இடம் பெற்றிருக்கின்றன (87–104, 140, 187, 206, 231, 232, 235, 269, 286, 290, 295, 311, 315, 367, 390, 292) இப்பாடல்கள் அரசியல், வீரம், காதல், நட்பு ஆகிய பொருள்கள் பற்றி அமைகின்றன.

ஔவையின் அறிவுரையும் கவிநலமும் நாட்டில் வாழும் மக்களுக்கு நீண்ட நாட்களுக்கு வேண்டும் என எண்ணிய அதியமான் கிடைத்தற்கரிய நெல்லிக் கனியை இவருக்குக் கொடுத்த செய்தி அனைவரும் அறிந்த ஒன்றே. இத்தகைய பெருந்தியாகம் செய்த அதியனை ஔவை கடவுளுக்கே ஒப்பாக எண்ணித் தம் பாடலுள் வடித்துள்ளது, படைப்பையும் தாண்டி அவர் நெகிழ்ந்து போன அன்புள்ளத்தை வெளிப்படுத்துகிறது. இதனை

**“நீலமணி மிடற்று ஒருவன் போல**
**மன்னுக பெருக, நீயே, தொன்னிலைப்**
**பெருமலை விடர் அகத் தருமிசைக் கொண்ட**
**சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது**
**ஆதல் நின்னகத்து அடக்கிச்**

**காதல் நீங்க, எமக்கு ஈத்தனையே''[39]**

என புறநானூற்றில் கூறியுள்ளார். மேலும்,

**''அமிழ்து விளைதீம் கனி ஔவைக்கு ஈந்த**

**உரவுச் சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்**

**அரவக் கடல் தானை அதிகன்''[40]**

என சிறுபாணாற்றுப் படையும் கூறுகின்றது.

புலமையில் சிறந்து விளங்கியதால் ஔவையார் செல்லும் நிலமெங்கும் வரவேற்பும் சிறப்பும் கிடைத்தது. நற்பண்பும் நற்செயல்களும் நிரம்பிய ஆடவர்கள் இருக்கும் பகுதியே நல்ல நிலமாகும் என்று குறிப்பிடுகின்றார். இதனை,

**''எவ்வழி நல்லவர் ஆடவர்,**

**அவ்வழி நல்லை ; வாழிய நிலனே''[41]**

**''வாழச் செய்த நல்வினை அல்லது**

**ஆழுங் காலைப் புணைபிறிது இல்லை''[42]**

என்று விளக்கியுள்ளார்.

ஔவையார் தூது சென்றவிதத்தினை, **''தொண்டைமானிடம் ஔவையார் மேற்கொண்ட அரசியல் தூது உலக இலக்கிய வரலாற்றில் இதுகாறும் உரிய வகையில் குறிக்கப் பெறாதது வருந்தத்தக்கது. வடபுலத்துப் பேரரசன் அசோகன், கலிங்கப் போரில் புத்த பேதம் பெற்று, புத்த தருமத்தின் பெண்பாற் தூதுவரான சங்கமித்திரையை பாரதத்திற்கு வெளியே அனுப்பியதை பாரத மகளிர் பெருமையோடு ஓர்ந்து இன்புறத் தக்கதற்கு ஒப்பாகும் ஔவையாரின் அரசியல் தூது''[43]** என்று பெ.சு.மணி குறிப்பிடுகின்றார். மேலும் **''ஔவைக்கு நிகரான ஒரு பெண்பாற் கவி உலகநாடுகளிலும் தோன்றியதில்லை என்பதற்கு அம்மூதாட்டியார், தொண்டைமானிடம் சென்ற தூது வெற்றி பெற்ற நிகழ்ச்சி ஒன்றே போதுமானதாகும்''[44]** என்று மா.பொ.சிவஞானம் கூறுகின்றார்.

அதியமான் போர்த் திறமையோடு நல்ல சூழ்ச்சித் திறமையும் பெற்று இருந்தார். இவர் காலத்தில் வாழ்ந்த தொண்டைமான் என்னும் மன்னன் இவனோடு போர்புரிய எண்ணினார். அதற்கு வேண்டிய படைக்கலங்களையும் படைகளையும் சேர்த்து வந்தான். இதையறிந்த அதியமான் அம்மன்னனோடு போரிட்டு வெற்றி பெறுவது எளிமையானது ஆகும். தனக்கு அவன் நிகர் இல்லாதவன் என நினைத்தான்.

அம்மன்னனோடு போர் செய்தால் தன் பெருமைக்கு இழுக்காகும். அப்படி அவரோடு போர் செய்தால் பல உயிர்கள்தான் சேதமாகும் என கருதிப் போரைக் கைவிடுமாறு தூது செல்ல வருமாறு ஔவையாரை அனுப்புகின்றான் அதியமான். அதியமானின் சொல்லை ஏற்றுத் தொண்டைமானிடம் தூது சென்றார் ஔவை என்பதை,

**“இவ்வே, பீலி அணிந்து மாலைசூட்டிக்**
**கண்திரள் நோன்காழ் திருத்திநெய் அணிந்து**
**கடியுடை வியன்நக ரவ்வே ; அவ்வே,**
**பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து**
**சொற்றுறைக் குற்றில மாதோ”[45],**

இப்பாடல் மூலம் உணர முடிகின்றது. தொண்டைமான் போர் புரியாததால் அவனுடைய கருவிகள் புதியவையாகத் தோன்றுகின்றன. ஆனால் அதியமான் எப்பொழுதும் போர்ச் செயலில் ஈடுபட்டு வந்ததால் அவனுடைய போர்க்கருவிகள் உடைந்து கிடக்கின்றன என்று கூறி அதியமானின் பேராற்றலை தொண்டைமானிடத்து ஔவையார் கூறியது அதியமானைப் புகழ்ந்தும் தொண்டைமானைப் புகழ்வது போல இகழ்ந்தும் பாடிய திறனை இப்பாடல் சுட்டுகின்றது. இதன்மூலம் சங்க காலத்தில் கல்வி அறிவில் சிறந்து விளங்கிய ஔவையார் போன்ற பெண்பாற்புலவர்கள் அரசர்களுக்கு உறுதுணையாக இருந்துள்ளனர் என்பது தெளிவாகிறது.

## காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்

சேர நாட்டிலுள்ள காக்கையூர் என்ற ஊரைச் சார்ந்தவர் இவர். இயற்பெயர் ‘செள்ளை’ என்பதாகும். இவரின் புலமையை வியந்தவர்கள் ‘நல்’ என்ற அடைமொழி தந்து போற்றினர். ‘நற்செள்ளை’ என்பது நாளடைவில் நச்செள்ளை என மருவியது என்பர். ‘பாடினி’ என்பது பாடுபவள் என்னும் பொருளை உணர்த்துகிறது. குறுந்தொகையில் காக்கை கரைந்தது குறித்துப் பாடியதாலே ‘காக்கைப் பாடினியார்’ என்று சான்றோர்களால் அழைக்கப் பெற்றார்.

சங்கப் பாடல்களைப் பாடிய பெண்பாற் புலவர்களுள் இப்புலவருக்கு என்று ஒரு தனிச்சிறப்பு உண்டு. சேர மன்னர்களைப் பாடிய பதிற்றுப் பத்துப் புலவர்களுள் இவர் மட்டுமே பெண் என்பது இவருக்கு மகுடமாக அமைந்துள்ளது. பதிற்றுப் பத்தில் ஆறாம் பத்தும் புறநானூற்றில் (278) ஒரு பாடலும் இப்புலவர் பாடியுள்ளார்.

‘உவகைக் கலுழ்ச்சி’ என்னும் துறையில் அமைந்துள்ள இவரின் புறநானூற்றுப் பாடலில் ஒரு மறக்குடித்தாய் தன் மகன் இறந்ததை எண்ணி வருத்தப்படாமல் போர்க் களத்திலே தன் மகன் புறமுதுகுக் காட்டி இறந்திருப்பின் அவன் பாலுண்ட மார்பை அறுத்து எறிவதாகக் கூறி போர்க்களம் சென்ற காட்சியை

**“மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்டஎன்**
**முலை அறுத்திடுவன் யான்”**[46]

என்று காக்கைபாடினியார் எடுத்தியம்புகிறார்.

நச்செள்ளையார் பதிற்றுப் பத்துப் பாடலின் ஆறாம் பத்தில் ஆடுகோட்பாட்டு சேரலாதனைப் பாடியமைக்குப் பரிசாக ஒன்பது பொன்னும் நூறாயிரம் காணமும் பெற்றதோடு அவரது அவைக்களத்தில் பக்கத்தில் இருக்கும் பேற்றையும் பெற்றார். இச்செய்தியானது நச்செள்ளையாரின் புலமைக்கு அரசரிகளிடம் இருந்த மதிப்பையும் சிறப்பையும் காட்டுகிறது.

விறலியரின் ஆடல், பாடல் கேளிக்கையில் மகிழ்ந்து இருக்கும் மன்னனைப் பார்த்து, பகைவர்கள் அவனையும் அவனது வீரத்தையும் குறைவாக எடை போட்டுவிடக் கூடாது என்று எச்சரிக்கை செய்யும் வகையில் நச்செள்ளையார் தன் பாடலின்மூலம் திறம்பட எடுத்துக்காட்டியுள்ளார். இதனை,

**“சுடர்நுதல் மடநோக்கின்**
**வாள்நகை இலங்கெயிற்று**
**அமிழ்துபொதி துவர்வாய் அசைநடை விறலியர்**
**பாடல்சான்று நீடினை உறைதலின்**
**வெள்வேல் அண்ணல் மெல்லியன் போன்என**
**உள்ளுவர் கொல்லோநின் உணரா தோரே ?”**[47]

எனப் பதிற்றுப் பத்து கூறுகின்றது.

தலைவியாகிய மனைவியின் பெருமையைக் கூறிக் கணவனை அறிமுகப்படுத்தும் பாங்கும் ‘ஆன்றோள் கணவ’ (பதிற்று–55, பா.1) எனத் தொடங்கும் இவரின் பாடல்வரியில் காண முடிகிறது. தாம் பாடும் வள்ளலின் கொடைச் சிறப்பினைப் புலப்படுத்தும் வகையில் ஒவ்வொரு புலவரும் ஒவ்வொரு தனித்தன்மையினைக் (புது உத்திகளை) கையாண்டதை இலக்கியங்கள் காட்டுகின்றன. பொருள் பெறுவோர் வறுமையில்லாமல் உன்னை நாடி வரமாட்டார்கள். எனினும் நீ அவர்களை தேடிச்

சென்று தன் தேரில் ஏற்றிக் கொண்டு வந்து உணவளித்து யாவரும் விரும்பும் வாய்மொழியுடைய சிறப்புக்குரிய சேரன் என்று நச்செள்ளையார் மன்னனைப் புகழ்ந்து கூறும்முறை நம்மை கவரும் வகையில் உள்ளது.

**“வாரார் ஆயினும் இரவலர் வேண்டி**
**தேரின் தந்து அவர்க்கு ஆர்பதன் நல்கும்**
**நகைசால் வாய்மொழி இசைசால் தோன்றல்”**[48]

எனும் பதிற்றுப்பத்து பாடல் கூறுகின்றது. இவ்வாறு ஔவையாரைப் போலவே நச்செள்ளையாரும் மன்னனுக்கு அறிவுரை கூறும் பாங்கினை நம்மால் உணர இயலுகிறது.

## காவற்பெண்டு

காவற்பெண்டு என்ற இவரது பெயரைக் கொண்டு இவர் ஒரு செவிலித்தாய் எனக் கருத முடிகிறது. மணிமேகலையில் செவிலித் தாய் எனும் பொருளில் வரும்.

**“குதலைச் செல்வாய்க் குறுநடைப் புதல்வர்க்குக்**
**காவல் பெண்டிர்”**[49]

என்ற மணிமேகலை பாடல் சான்று பகர்கின்றது. இப்புலவர் புறநானூற்றில் ஒரு **(86)** பாடலை இயற்றியுள்ளார்.

**“ யாண்டுளன் ஆயினும் அறியேன் ; ஓரும்**
**புலிசேர்ந்து போகிய கல் அளை போல**
**ஈன்ற வயிறோ இதுவோ ;”**[50]

எனும் இப்புறநானூற்றுப் பாடல் வினாவிடை அமைப்பில் அமைந்துள்ளது. ஒரு மறக்குடித் தாயின் வீர உணர்வினை ஒரு நாடக நிகழ்வு போலக் காட்சிப்படுத்தியுள்ளார். தாயின் வீரத்தையும் இளைஞனின் நாட்டுப் பற்றையும் அழகாக எடுத்துக் காட்டியுள்ளார். இதன்மூலம் பெண்கள் நாட்டுப்பற்று உடையவர்களாகவும் விளங்கினர் என்பது தெளிவாகிறது.

## குறமகள் இளவெயினி

புறநானூற்றின் **157**வது பாடல் குறமகள் இளவெயினி பாடியதாகும். **“குறமகள் என்றவுடன் குறவர் குடியில் பிறந்தவள் என்று நன்கு தெரிந்து கொள்ளலாம். மலையும் மலை சார்ந்த இடமுமாகிய குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த மக்கள் ‘குறவர்’ எனப்படுவோர் ஆவார். அவர்களை ‘எயினர்’ என்றும் அழைப்பதுண்டு. குறிஞ்சி நிலத்து**

**ஆண்மகனைக் 'குறவன்', 'எயினன்' என்றும் பெண்மகளைக் 'குறத்தி', 'எயினி' என்றும் வழங்குவர். இவ்வாறு வழங்குதல் ஒரு மரபு. அக்குறவர் குடியில் பிறந்த நங்கை ஒருத்தி அக்காலத்தில் 'குறமகள் எயினி' என்று அழைக்கப்பட்டு வந்தார். அப்பெண்மணி மிகவும் இளமை பருவத்திலேயே கல்வி நலத்தில் சிறந்து விளங்கினார் ; புலவர்களெல்லாம் மதிக்கும் பாவலராக விளங்கினார். எனவே எயினி என்பதனோடு அவரது இளமைப் பருவத்தையும் இணைத்து 'இள+எயினி' – இளவெயினி' என்று அழைக்கப்பட்டு வந்தார். பிற்காலத்தில் அவரது குடிப்பெயரையும் சேர்த்துக் குறமகள் இளவெயினி என்று வழங்கப் பெற்றார்''[51].**

தன்னைச் சார்ந்தவர்கள் செய்யும் தவறைப் பொறுத்துக் கொள்ளுதல் பிறருடைய வறுமையைக் காணும்பொழுது அதை அறிந்து முன்னமே நீக்காதது தனது குற்றம் என எண்ணி வெட்கப்படுதல், போர்க்காலத்தில் பிற படையினர் பழி சொல்லாத அளவிற்கு வீரத்தில் சிறந்திருத்தல், அரசவையில் பெருமிதமாக நடத்தல் இவை அனைத்தும் பெற்றவன் எனது தலைவன் ஏறைக்கோன் ஆவான் என்பதை,

**''தமர்தற் தப்பின் அதுநோன் நல்லும்**
**பிறர்கை யறவு தான்நா ணுதலும்,**
**படைப்பழி தாரா மைந்தினன் ஆகலும்**
**வேந்துடை அவையத்து ஓங்குடி நடத்தலும்**
**நும்மோர்க்குத் தகுவன அல்ல ; எம்மோன்**
**சிலைசெல மலர்ந்த மார்பின், கொலைவேல்,**
**கோடல் கண்ணிக் குறவர் பெருமகன் ;**
**ஆடுமழை தவிர்க்கும் பயங்கெழு மீமிசை,**
**எற்படு பொழுதின் இனம் தலை மயங்கிக்**
**கட்சி காணாக் கடமான் நல்லேறு**
**மடமான் நாகுபினை பயிரின், விடர்மழை**
**இரும்புலிப் புகர்ப்போத்து ஓர்க்கும்**
**பெருங்கல் நாடன் – எம் ஏறைக்குத் தகுமே''[52]**

எனும் இப் புறநானூற்றுப் பாடலில் ஏறைக்கோனின் பண்புகளை எடுத்துக் கூறும்விதமாகக் குறமகள் இளவெயினி இப்பாடலை படைத்துள்ளார்.

## தாயங்கண்ணியார்

புறநானூற்றில் ஒரு பாடல் மட்டும் **(250)** இவர் பாடியுள்ளார். தாயங்கண்ணியார் என்பது இப்பெண்பாற் புலவரின் இயற்பெயராகும்.

பொதுவியல் திணையில் தாபத நிலைத் துறையில் பாடப்பெற்றது இப்பாடல். தாயங்கண்ணியாரின் இப்பாடல் இருவேறு காட்சிகளை உருக்கமுடன் உணர்த்துகிறது. மனைவி கணவனுடன் சேர்ந்து வாழ்ந்த காலத்தில் சமூகத்தில் பெற்றிருந்த உயர்நிலையும் கணவனை இழந்து கைம்மை நோன்பு மேற்கொண்டபோது கூந்தல் கொய்து, வளையல் நீக்கி, அல்லி உணவு உண்டு வாழும் அவல நிலையினையும் ஒரே பாடலில் வெளிக்காட்டியுள்ளார். இதனை,

**“குய்குரல் மலிந்த கொழுந்துவை அடிசில்**
**இரவலர்த் தடுத்த வாயில், புரவலர்**
**கண்ணீர்த் தடுத்த தண்நறும் பந்தர்க்**
**கூந்தல் கொய்து, குறுந்தொடி நீக்கி,**
**அல்லி உணவின் மனைவியோடு, இனியே**
**புல்என் றனையால் வளங்கெழு திருநகர் !**
**வான்சோறு கொண்டு தீம்பால் வேண்டும்**
**முனித்தலைப் புதல்வர் தந்தை**
**தனித்தலைப் பெருங்காடு முன்னிய பின்னே”[53]**

எனும் இப் புறநானூற்றுப் பாடல் தாயங்கண்ணியாரின் கவித்திறத்தை வெளிப்படுத்துகின்றது. இப்பாடல் வழி கணவனை இழந்து வருந்தும் ஒரு பெண்ணின் அவலநிலையை உணர முடிகிறது.

## நக்கண்ணையார்

பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணையார் என்று இவர் பெயர் வழங்கப்பட்டிருக்கிறது. அக்காலத்தில் புலவர் பெயர்களுக்கு முன் உறவுகளைக் குறிக்கும் வழக்கம் இருந்துள்ளது. அவ்வகையில் மகள் என்ற உறவு நக்கண்ணையார் பெயருக்கு முன் வழங்கப்பட்டிருக்கிறது. ‘நாய்கன்’ எனும் பெயர் வணிக மரபினரைக் குறித்துள்ளது. இதனை,

**“மாகவான் நிகர் வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்”[54]**

என்று கண்ணகியை இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தில் அறிமுகப்படுத்துவதில் இருந்து உறையூரைச் சேர்ந்த மரக்கல வாணிகன் ஒருவரின் மகள்தான் கண்ணகி என்பது பெறப்படுகிறது. நக்கண்ணையார் புறநானூற்றில் மூன்று பாடல் (83, 84, 85) பாடியுள்ளார்.

உறையூரை ஆட்சி புரிந்து வந்த தித்தன் என்ற அரசனின் மகனான சோழன் கோப்பெருநற்கிள்ளியை நக்கண்ணையார் பாடிய புறப்பாடல்கள் ஒருதலைக் காமம் என்று கூறப்படும் கைக்கிளைத் திணையில் அமைந்துள்ளன. வீரக்கழல் புனைந்துள்ள கோப்பெருநற் கிள்ளியின் இளம்காளை போன்றுள்ள தோற்றத்தை நினைத்தபோது தன் வளையல்கள் நெகிழ்ந்ததையும் அவன் தோள்களைத் தழுவ விரும்பியதையும் நற்கிள்ளியைப் பார்க்க முடியாததால் பசலை நோய்க்கு ஆளானதையும் தம் புறப் பாடல்களில் வெளிக்காட்டியுள்ளது சிறப்பிற்குரியது. இதனை,

**“அடி புனை தொடுகழல் மை அணல் காளைக்கு என்**
**தொடி கழித்திடுதல், யான் யாய் அஞ்சுவலே ;**
**அடு தோள் முயங்கல் அவை நாணுவலே”[55]**

என்று பாடியுள்ளார். மேலும்

**“யாமே, புறஞ் சிறை இருந்தும் பொன் அன்னம்மே”[56]**

எனும் இப்புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது. இப்பாடல்கள் வழி காதல் கொள்ளை கொண்ட ஒரு பெண்ணின் மனநிலையை நக்கண்ணையார் வெளிப்படுத்தியுள்ளதை அறிந்து கொள்ள முடிகிறது.

## நெட்டிமையார்

நெட்டிமையார் புறநானூற்றில் 9, 12, 15 ஆகிய மூன்று பாடல்களைப் பாடியுள்ளார். அகப்பாடல்கள் எதுவும் எழுதவில்லை. இவர் ஆடவரா, மகளிரா என்ற ஐயம் நிலவியது. இவரது பாடல்களில் இடம் பெற்றுள்ள கருத்துக்களின் வாயிலாக இவர் பெண்பாற்புலவரே என்பது உறுதியாயிற்று.

போரில் விலக்கு உடையோராக,

**“ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்**
**பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்**
**தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்**
**பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்**

**எம்மம்பு கடிவிடுதும்"[57]**

பசு, பார்ப்பன மாக்கள், பெண்டிர், பிணி உடையவர், புதல்வர் பெறாத ஆண், பெண் ஆகியோரைக் குறிப்பிட்டுள்ளார்.

**"அறத்தாறு நுவலும் பூட்கை மறம்"[58]**

எனும் பாடல்வரியில் குழந்தைகளைப் பெறாதவரை விலக்கு அளித்த ஐவருள் ஒருவராகக் குறிப்பிடுகிறார்.

தமிழர் குழந்தைப் பேற்றைச் செல்வம் என்றும், நன்கலம் என்றும் கருதும் இயல்பினர். அப்பெண்ணின் இயல்பே நெட்டிமையாரின் ஒன்பதாம் பாடலில் 'பொன்போல் புதல்வர் பெறாதீர்' என்று எதிரொலித்துள்ளது.

பெண்களின் கண்களுக்கு முதலில்படுவன மற்றவர் அணிந்திருக்கும் அணிகலன்களாகும். நெட்டிமையாரின் 'பொன்போல் புதல்வர்' எனும் அடியிலும், 12 ஆம் பாடலில் 'பொன்னாலான தாமரையைப் பாணர் அணிந்திருக்கும் காட்சியிலும், 15 ஆம் பாடலில் 'விளங்கு பொன் எறிந்த நலங்கிளர் பலகை' என்ற அடியிலும் நெட்டிமையாரின் கண்களில் தங்கம் முன்னிற்பது அவரை ஒரு பெண் என்று காட்டிக் கொடுக்கிறது.

பெண்ணின் கண்ணைக் கவரும் இன்னொரு கூறு தலையில் சூடியிருக்கும் மலர் ஆகும். நெட்டிமையாரின் 12 ஆம் பாடலில் 'பாணர் தலையில் அணிந்திருக்கும் தாமரை மலரும்', 15 ஆம் பாடலில் 'கடுந்தார் முன்பு தலைக்கொண்டதும்' எனும் அடிகளும் நெட்டிமையார் தம் பெண்ணியல்பைப் புலப்படுத்தும் பிறிதொரு சான்றாக உள்ளன.

'பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி' சங்க அரசர்களிலேயே மிகப் பழமை வாய்ந்தவன். இவனது காலத்துப் பஃறுளி ஆறும், குமரிமலையும் கடல்கோளால் அழிந்தன என்பதை இளங்கோவடிகள்,

**"பஃறுளி ஆற்றுடன் பன்மலை அடுக்கத்துக்**
**குமரிக்கோடும் கொடுங்கடல் கொள்ள"[59]**

என்று குறிப்பிட்டுள்ளார்.

**"முந்நீர் விழவின் நெடியோன்**
**நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"[60]**

எனும் அடிகளில் பாண்டியன் நெடுஞ்செழியனைக் குறிப்பிடுகையில் பஃறுளி ஆற்றைக் குறிப்பிடுகிறார். எனவே நெட்டிமையார் பழம்புலவர் என்பது தெரிகின்றது.

## பாரி மகளிர்

புறநானூற்றில் **112**வது பாடல் பாரி மகளிர் பாடியது. கடையெழு வள்ளல்களுள் ஒருவரானவர் பாரி மன்னர் ஆவார். கொடைத் திறத்திற்கு இன்றளவும் பாரி வள்ளலையே அடையாளப்படுத்துகின்றார்கள் என்றால், எந்த அளவிற்கு அவரின் கொடைத்தன்மை சிறப்புற்று இருந்தது என்பதை உணர முடிகின்றது. இப்பாரி மன்னனின் சிறப்புக் கருதி இவர்கள் பாரி மகளிர் என்று அழைக்கப் பெற்றனர். மூவேந்தர்களின் வஞ்சனையால் தனது தந்தை, நாடு என அனைத்தும் இழந்தனர். பின்பு பாரியின் நண்பரான கபிலரால் இப்பெண்கள் பாதுகாக்கப்பட்டனர். தம் தந்தையை இழந்து தாங்கள் பட்ட துயரத்தைப் பாரிமகளிர் பாடலாகப் பாடி வெளிப்படுத்தினர். இதனை,

**“அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்**
**எந்தையும உடையேம் எம் குன்றும் பிறர்கொளார்**
**இற்றைத் திங்கள் இவ்வெண்ணிலவில்**
**வென்று எறி முரசின் வேந்தர் எம்**
**குன்றும் கொண்டார் யாம் எந்தையும இலமே”**[61]

என இப் புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது. பாரிமகளிருள் ஒருவர், வறுமைக் காலத்தில் தன்னை நாடி வந்த பாணனுக்குச் சோறு அளிக்க, நீர் பொருந்திய உலையில் பொன்னைப் பெய்து கொண்டு திறந்த சோறாக நல்கினாள் என்ற செய்தியை,

**“மாரி ஒன்று இன்றி வறந்திருந்த காலத்தும்,**
**பாரி மடமகள், பாண் மகற்கு, நீர் உலையுள்**
**பொன், திறந்து, கொண்டு புகர் வாக நல்கினாள்**
**ஒன்று உறா முன்றிலோ இல்”**[62]

எனும் புறநானூறுப் பாடல் பாரி வள்ளலிடம் இருந்த நற்பண்புகள் அவனது மகள்களிடத்தும் அமையப் பெற்றிருப்பதை உணர்த்துகிறது.

## பூங்கணுத்திரையார்

புறநானூற்றில் 277வது பாடல் இவரால் பாடப்பட்டது. உத்திரை என்பது இவரின் இயற்பெயராகும். காவிரியின் வடகரையில் உள்ள ‘பூங்கண்’ என்பது இவரின் ஊராதலால் பூங்கணுத்திரையார் என்ற பெயர் பெற்றார். முதியோள் ஒருத்தி, தன்

இளையனாகிய ஒரே ஒரு மகன் போரில் யானையால் கொல்லப்பட்ட இறப்புச் செய்தி கேட்டு அவனை ஈன்ற பொழுதை விடவும் மிகுந்த மகிழ்ச்சி அடைந்தாள் என்று பெண்ணின் வீர உணர்வினை வெளிப்படுத்தும் விதமாக இப்பாடலைப் பாடியுள்ளார். இதனை,

**“களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை**
**ஈன்ற ஞான்றினும் பெரிதே ; கண்ணீர்**
**நோன்கழை துயல்வரும் வெதிரத்து**
**வான்பெயத் தூங்கிய சிதறினும் பலவே”**[63]

என்ற இப் புறநானூற்றுப் பாடல் விளக்குகின்றது. இவ்வாறாகச் சங்ககாலப் பெண்கள் வீர உணர்வு மிக்கவர்களாக விளங்கினர் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது.

## பூதப் பாண்டியன் தேவி பெருங்கோப் பெண்டு

புறநானூற்றில் ஒரு பாடல் (246) பாடியுள்ளார் போரில் சேர சோழர்களை எதிர்த்துப் போராடும்பொழுது, பூதப் பாண்டியன் இறந்து விடுகிறான். இச் செய்தியை அறிந்த பெருங் கோப் பெண்டு கைம்மை நோன்பில் மேற்கொண்டு வாழும் பெண்கள் அணிலின் முதுகுப் பகுதியில் உள்ள வரிகளைப் போன்ற தோற்றம் கொண்ட வெள்ளரிக் காயினை வெட்டும்போது துண்டாகும் விதையை போன்று வெண்மையாக இருக்கும் நெய்யைத் தீண்டாமல் பழைய சோற்றுடன் எள்ளுத் துவையல், புளி கூட்டிச் சமைத்த வேளைக் கீரை ஆகியவற்றை உண்டு பாயின்றிப் பருக்கைக் கற்கள் மேல்படுத்துத் துன்பமான வாழ்க்கை வாழ்பவர்கள். அதனால் அவர்களைப் போல யாமும் வாழ விரும்பவில்லை. என் கணவன் இல்லாது இவ்வுலகில் என்னால் தனித்து வாழ முடியாது என சான்றோர்களிடம் கூறி உடன்கட்டை ஏறி தீக்குளிப்பதே நல்லது என்று கூறி ஒன்றோடு ஒன்று முரண்பட்ட நீரும் நெருப்பும் தனக்கு ஒரே உணர்வினை அளிப்பதாகக் கூறி தீப்பாய்கிறாள். இதனால் கைம்மையிலும் தீப்பாய்ந்து உயிர்விடுவதை மகிழ்வோடு விரும்பி ஏற்ற மனப்பாங்கினை,

**“பல்சான் றீரே ! பல்சான்றீரே**
**செல்கெனச் சொல்லாது, ஒலிகென விலக்கும்**
**பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான்றீரே !**
**அணில்வரிக் கொடுங்காய் வாள்போழ்ந் திட்ட”**[64]

என்று புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது. இவ்வாறாக சங்ககாலப் பெண்கள் தன் கணவன் இறந்தவுடன், தானும் உயிர்விடுவதே மகிழ்ச்சியானது என்று கூறி உயிர்விடுகின்றனர் என்ற இச்செய்தியை புலப்படுத்தும்விதமாக இப்பாடல் அமைந்துள்ளது.

## பேய் மகள் இளவெயினி

புறநானூற்றில் ஒரு பாடலைப் (11) பாடியுள்ளார். புலவரும் சேர மன்னனுமான பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பாடிய ஒரே புலவர் என்னும் பெருமைக்குரியவர் ஆவார். **“போர்களத்துப் பிணந்தின்னும் பேய்மகளிரை வியந்து விரிவாகப் பாடிய சிறப்பால் இளவெயினியார்குப் பேய்மகள் என்பது சிறப்புப் பெயராக அமைந்தது”**[65] என்று புலவர் கா.கோவிந்தன் கூறுகின்றார்.

மகளிர் பாவைக்கு பூச்சூட்டியும் ஆற்றில் பாய்ந்து நீர் விளையாட்டுகளிலும் ஈடுபட்டனர். வஞ்சி மாநகரைச் சார்ந்து பொருநை ஆறு ஓடியதும் பாணன், பாடினி, விறலி ஆகியோர் பரிசில் பெறும் தன்மை குறித்தும் பாடியுள்ளார். பொன் தாமரைப் பூவை வெள்ளி நாரால் தொடுத்து மன்னன் பாணனுக்கு வழங்கிய தன்மையை

**“ஒள்ளழல் புரிந்த தாமரை**
**வெள்ளி நாரால் பூப்பெற் றிசினே”** [66]

என்ற இப்பாடலடிகள் வழி இளவெயினி உணர்த்துகிறார்.

## பொன்முடியார்

புறநானூற்றில் இவர் பாடிய பாடல்கள் மூன்று (299, 310, 312) ஆகும். இவர் தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையின் காலத்தில் வாழ்ந்தவர். ‘பொன்முடி’ என்ற ஊரைச் சேர்ந்த இவர் ஊரின் பெயராலே ‘பொன்முடியார்’ என அழைக்கப்படுகிறார்.

சிற்றரசனின் குதிரைகள் உழுந்தின் சக்கையைத் தின்றதனால் போர்க்களத்தில் கடலில் சீறிப்பாயும் தோணி போலப் பகைவருடைய நாட்டில் போர் செய்தது. ஆனால் பெருவேந்தர்களின் குதிரைகள் நெய் பெய்து மிதித்து அமைத்த உணவை உண்டதால் கொழுத்து போரிடாமல் பின்னிட்டு நின்றது. இது முருகன் கோயிலில் கலங்களைத் தொடாத, விலக்குடைய மகளிரைப் போல ஒதுங்கி நின்றது என்று கூறுகின்றார். இதனை,

**“பருத்தி வேலின் சீறூர் மன்னன்**

**உழுத்த அதர் உண்ட ஓய் நடைப்புரவி**

**கடல் மண்டு தோணியின், படைமுகம் போழ,**

**நெய்ம்மிதி அருந்திய, கொய்சுவல் எருத்தின்,**

**தண்ணடை மன்னர், தாருடைப் புரவி,**

**அணங்கு உடை முருகன் கோட்டத்துக்**

**கலம் தொடா மகளிரின், இகழ்ந்துநின் றவ்வே”[67]**

என்ற பொன்முடியாரின் பாடலடிகள் மூலம் அக்கால அரசர்களின் படைவலிமை புலனாகிறது.

## மாற்பித்தியார்

புறநானூற்றில் இரண்டு பாடல்கள் (251, 252) இப்புலவரால் பாடப் பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் தவ வாழ்க்கைப் பற்றிப் பாடிய பெண்பாற் புலவர் இவரே ஆவார். தான் பாடிய இரண்டு பாடல்களிலும் இல்லற வாழ்வினைத் துறந்து துறவியான ஒருவரைப் பற்றிப் பாடுகிறார் புலவர். துறவியானவர் வீரனாக இருந்தவன் என்பது ‘மள்ளர்’ என்னும் குறிப்பால் அறிய முடிகிறது. மேலும் நீண்டு வளர்த்த கருமை நீங்கிய செம்மை நிறமான திரிந்த சடையினையும் அருவி நீராடலையும் தீயின் வெப்பத்தில் தன் சடைமுடியை உலர்த்தியதையும் இவ்விரு பாடல்கள் உணர்த்துகிறது. இக்காட்சிகள் யாவும் அக்காலத்தில் வாழ்ந்த துறவிகளின் தோற்ற வடிவத்தினையும் வாழ்க்கை முறையினையும் காட்டுகிறது என்பர். இதனை,

**“கழைக்கண் நெடுவரை அருவியாடிக்,**

**கான யானை தந்த விறகின்**

**கடுந்தெறல் செந்தீ வேட்டுப்,**

**புறம்தாழ் புரிசடை புலர்த்து வோனே ?” [68]**

**“கறங்குவெள் அருவி ஏற்றலின், நிறம் பெயர்ந்து,**

**தில்லை அன்ன புல்லென் சடையோடு**

**அள்இலைத் தாளி கொய்யு மோனே” [69]**

என்று புறநானூற்றுப் பாடல் கூறுகிறது. மாற்பித்தியாரின் இப்பாடல்கள் வழி துறவிகளின் தவ வாழ்க்கையினை அறிய முடிகிறது.

## மாறோக்கத்து நப்பசலையார்

இவர் புறநானூற்றில் ஏழு பாடல்கள் **(37, 39, 126, 174, 226, 280, 383)** பாடியுள்ளார். இவர் நற்றிணையில் 'பசலையின்' சிறப்பை விளக்கமுறப் பாடியிருப்பதால் இப்பெயர் பெற்றுள்ளார். இப்பெயருடன் இணைந்திருக்கும் 'மாறோக்கம்' என்பது அவர் பிறந்த ஊரினைக் குறிக்கக் கூடியது ஆகும். இதனை இணைத்து 'மாறோக்கத்து நப்பசலையார்' என இவரை அழைத்தனர்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் புகழ்ந்து இதில் மூன்று பாடல்களும் **(37, 39, 226)**, கடையெழு வள்ளல்களில் ஒருவனான மலையமான் திருமுடிக்காரி மீது ஒரு பாடலும் **(126)** காரியின் மகனான சோழிய ஏனாதி திருக்கண்ணனைப் பற்றி ஒரு பாடலும் **(174)**, திருமுனைப்பாடி நாட்டு அரசன் அவியின்மீது ஒரு பாடலும் **(280)** பாடியுள்ளார். மன்னர்களின் வீரத்தினையும் புகழையும் கொடைத் திறத்தையும் பதிவு செய்து தன்னை ஒரு வரலாற்று புலவராகப் பதிவு செய்து கொண்டார் மாறோக்கத்து நப்பசலையார். இவர் ஔவைக்கு அடுத்தபடியாக அதிகப் புறப்பாடல்களைப் பாடியவர் என்று கூறுகின்றனர்.

சோழ மன்னனான கிள்ளி வளவனது கொடைத்திறம், வீரம், ஆட்சிமுறை முதலியவற்றை புகழ்ந்து பாடுகின்றார் நப்பசலையார். புறாவிற்காகத் தன் தசையையே அறிந்து தந்த சிபியின் மரபில் வந்தவன் கிள்ளிவளவன். ஆதலால் ஈகை அவனுக்கு ஒரு பொருட்டு அன்று என்கிறார். பகைவர்கள் அஞ்சி நெருங்குவதற்கு இயலாத வான் தவழும் கோட்டைகளை அழித்த உன் முன்னோர்களை நினைப்பின் பகைவரை வெற்றி பெறுதலும் உனக்கு இயல்பானது என்று பாடுகிறார். ஆனால் அது புகழ் தருவதன்று. கெடுதல் இல்லாத வீரம் விளங்கும் சோழர்களின் உறையூர் அவையத்தில் அறம் நிலைபெற்றது. ஆதனால் நீதி வழங்குவதும் இயல்பானதே. அதுவும் உனக்குத் தனிப்புகழைத் தருவதன்று. அதனால் வீரம் மிக்கு எழுந்த போரை வென்ற கணைய மரத்தை ஒத்த வலிமையான தோளை உடைய கண்கவரும் மாலையையும் துள்ளும் குதிரையையும் உடைய சோழனே ! நான் எவ்வாறு உன்னிடம் சொல்வேன் உனது உயர்ந்த எல்லையைப் பனி படர்ந்த உச்சிகளைக் கொண்ட இமயமலையில் சூட்டப்பெற்ற காவலாகிய வில் பொறியையும் வேலைப் பாடமைந்த தேரையும் உடைய சேரனின் அழகிய அழிவில்லாத வஞ்சி நகரை அழிக்கும் உன் பெருமை பொருந்திய வலிமையான

முயற்சியைப் பாடும்பொழுது அதற்கு எல்லையே இல்லை என்று புகழ்ந்து பாடுகிறார். இதனை,

**“புறவின் அல்லல் சொல்லிய கறையடி**
**யானை வான்மருப்பு எறிந்த வெண்கடைக்**
**கோல் நிறை துலாஅம் புக்கோன் மருக**
**ஈதல்நின் புகழும் அன்றே சார்தல்**
**ஒன்னார் உட்கும் துன் அருங் கடுந் திறல்**
**தூங்குஎயில் எறிந்த நின் ஊங்கணோர் நினைப்பின்,**
**அடுதல் நின் புகழும் அன்றே கெடு இன்று,**
**மறம் கெழு சோழர் உறந்தை அவையத்து,**
**அறம் நின்று நிலையிற்று ஆகலின், அதனால்**
**முறைமை நின் புகழும் அன்றே மறம் மிக்கு**
**எழு சமம் கடந்த எழு உறழ் திணி தோள்,**
**கண்ணார் கண்ணி, கலிமான், வளவ**
**யாங்கனம் மொழிகோ யானே ஓங்கிய**
**வரை அளந்து அறியாப் பொன்படு நெடுங் கோட்டு**
**இமயம் சூட்டிய ஏம விற்பொறி,**
**மாண்வினை நெடுந்தேர், வானவன் தொலைய,**
**வாடா வஞ்சி வாட்டும் நின்**
**பீடு கெழு நோன்தாள் பாடுங் காலே”**[70]

எனப் புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது. இதைப் போலவே

கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய மலையமான் திருமுடிக்காரியைப் புகழ்ந்து பாடிய கபிலர், காரி மற்றும் திருமுடிக்காரியின் மகன் மலையமான் சோழிய வேனாதி திருக்கண்ணனையும் புகழ்ந்துள்ளார். இதனை,

**“புலன் அழுக்கு அற்ற அந்தணாளன்”**[71]

**“பொய்யா நாவின் கபிலன் பாடிய**
**மை அணி நெடுவரை ஆங்கண்”**[72]

என இப் புறநானூற்றுப் பாடல் சான்று பகர்கின்றது. இப்பாடல் வழி அக்கால கடையெழு மன்னர்களின் வீரம், கொடை மற்றும் ஆட்சித்திறத்தை அறிந்துகொள்ள முடிகிறது.

## முடத்தாமக்கண்ணியார்

சங்க இலக்கியப் பத்துப்பாட்டில் உள்ள பொருநர் ஆற்றுப்படையின் பெண்பாற் புலவர் இவர் ஒருவரே ஆவார். இது 248 அடிகள் கொண்டது. சங்கப் பேரரசர்களுள் இன்றளவும் அனைவராலும் நினைவு கூறப்பெறும் வரலாறு போற்றும் ஒரே பேரரசன் ‘சோழன் கரிகாற் பெருவளவன்’ ஆவான். அவ்வரசனிடம் பரிசில் பெற்று வரும் பொருநன் தன் வழியில் எதிர்ப்படும் பொருநனைக் கரிகால் பெருவளவனிடம் ஆற்றுப்படுத்துவதாகப் பொருநராற்றுப்படை அமைந்துள்ளது.

புலவர் தம் பாடலில் முதலில் பாணனின் வறுமை நிலையை எடுத்துக் கூறுகிறார். உணவு உண்ணாமல் வாடக்கூடிய பொருநரை,

**“அறாஅ யாணர் அகன்தலைப் பேரூர்**
**சாறுகழி வழிநாள், சோறுநசை உறாது,**
**வேறுபுலம் முன்னிய விரகு அறி பொருந”[73]**

என அறிமுகம் செய்கிறார். இவ்வடியில் அவலத்தைக் காட்ட மனமில்லாமல் ‘அகன்தலைப் பேரூர்’ என்று மகிழ்வூட்டும் சொற்களைப் பயன்படுத்தியுள்ளார் புலவர். அடுத்து ஆற்றுப்படுத்தக்கூடிய பொருநரின் உயரிய பண்பினை எடுத்துக் காட்டுகிறார். பரிசு பெற்ற பொருநன் எதிர்ப்படும் பொருநனை தாம் செல்லும் வழியறியாமல் தவறான பாதையில் சென்று பயனடையாமல் போகக்கூடும். எனவே, அவர்களை உரிய வழியில் ஆற்றுப்படுத்துவது தனது கடமை என்று கூறி ஆற்றுப்படுத்துவதை,

**“அறியாமையின் நெறி திரிந்து ஒராஅது**
**அற்று எதிர்ப்படுதலும் நோற்றதன் பயனே ;**
**போற்றிக் கேண்மிதி, புகழ் மேம்படுந !”[74]**

என இப்பாடல் விளக்குகின்றது.

கரிகால் வளவனை அறிமுகப்படுத்தும் காட்சியில் அவ்வரசனின் முழு வரலாற்றினையும் சுருக்கமாகவும் தெளிவாகவும் வரலாற்று நோக்குடன் எவ்வித வர்ணனைகளும் இன்றி அழகான இனிமை பயக்கும் சொற்களைக் கொண்டு பாடியுள்ளார் புலவர்.

**“. . . . . . வென்வேல்**
**உருவப் பல்தேர் இளையோன் சிறுவன்**
**முருகற் சீற்றத்து உருகெழு குருசில்,**

**தாய் வயிற்றிருந்து தாயம் எய்தி,**
**எய்யாத் தெவ்வர் ஏவல் கேட்ப,**
**செய்யார் தேஎம் தெருமரல் கலிப்ப**
**பவ்வ மீமிசைப் பகற்கதிர் பரப்பி,**
**வெவ்வெஞ் செல்வன் விசும்பு படர்ந்தாங்கு,**
**பிறந்து தவழ் கற்றதன் தொட்டு, சிறந்தநன்**
**நாடுசெகிற் கொண்டு நாள்தொறும் வளர்ப்ப,**
**ஆளிநன் மான் அணங்குடைக் குருளை**
**மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி**
**முலைக்கோள் விடாஅ மாத்திரை, ஞெரேரென,**
**தலைக்கோள் வேட்டம் களிறு அட்டாங்கு**
**இரும்பனம் போந்தைத் தோடும், கருஞ்சினை**
**அரவாய் வேம்பின் அம்குழைத் தெரியலும்,**
**ஓங்கு இருஞ் சென்னி மேம்பட மிலைந்த**
**இருபெரு வேந்தரும் ஒரு களத்து அவிய,**
**வெண்ணித் தாக்கிய வெருவரு நோன் தாள்,**
**கண் ஆர் கண்ணி, கரிகால் வளவன்"**[75]

எனும் இப்பாடலில் முருகனைப் போன்று வீரமும் அழகும் உடையவன். தாய் வயிற்றில் இருக்கும் போதே தந்தையை இழந்ததால் அரசு உரிமையைப் பெற்றவன். சிறு வயதிலேயே தான் கூறுவதைப் பிறர் கேட்கும் ஆற்றல் உடையவராக விளங்கினான். பகைவரைத் தனது வலிமையால் அவர்களை வென்று தன் நாட்டை காத்தவன். குழந்தைப் பருவத்திலேயே மிகுந்த வலிமையுடையவனாய் வெண்ணிப் பறத்தலை என்ற இடத்தில் பனம்பூவைச் சூடிய சேரனையும் வேப்பமாலையை அணிந்திருந்த பாண்டியனையும் ஒரே நேரத்தில் வென்று வாகை சூடியவன் கரிகாலன் என்று பிறப்பு முதல் போர் வெற்றி வரை முழு வரலாற்றையும் இப்பாடலிலேயே பதிவு செய்துள்ளார். மேலும் அரசனின் கொடைத் தன்மைகளையும் யாழ் என்ற இசைக் கருவியையும் ஏழு வகையான பண்களையும் மக்கள் ஒற்றுமையும் விறலியரின் முடி முதல் அடி வரையிலான (கேசாதி பாதம்) வருணனைகளையும் விருந்தோம்பல் திறத்தினையும் முடத்தாமக் கண்ணியார் தன் கவிநயத்தால் அழகுபட எடுத்துக் கூறியுள்ளார்.

## வெண்ணிக்குயத்தியார்

புறநானூற்றில் ஒரு பாடல் (66) பாடியுள்ளார். இப்புலவர் ஊர்ப் பெயரையும் குடிப் பெயரையும் இணைத்துத் 'வெண்ணிக்குயத்தியார்' என அழைக்கப்பட்டார். இவர் கரிகாற் பெருவளத்தானைப் பாடியுள்ளார். இதில் சோழன் வெண்ணிப் பறந்தலை என்னும் பகுதியில் நடைபெற்ற போரின் வெற்றியையும் சேரமான் பெருஞ்சேரலாதன் தான் புறப்புண் பட்டுத் தோற்றுவிட்டோமே என்று எண்ணி அப்போர்க்களத்திலேயே வடக்கிருந்து உயிர்விட்டான் என்ற செய்தியையும் பாடியுள்ளார். சேரமானின் இத் தன்மான உணர்வால் கவரப்பட்ட குயத்தியார் தம் வேந்தனை பொய்ப் புகழால் புகழாமல் தன் உள்ளத்தில் தோன்றிய உண்மைக் கருத்தைப் புலப்படுத்திப் பாடியுள்ளார். இதனை,

**"கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை**
**மிகப்புகழ் உலகம் எய்திப்**
**புறப்புண் நாணி வடக்கிருந் தோனே"** [76]

என இப்புறநானூற்றுப் பாடல் கூறுகின்றது. இப்பாடல்வழி சேரமான் பெருஞ்சேரலானின் தன்மான உணர்வை வெண்ணியக்குயத்தியார் உணர்த்திய பாங்கை அறிய முடிகிறது.

## வெள்ளைமாளர்

புறநானூற்றில் ஒரு பாடல் (296) பாடியுள்ளார். இவர் பாடிய 'ஏறான் முல்லை' பாடல் மிக்க பொருள் நயம் உடையது என்று உ.வே.சாமிநாதையர் சிறப்பித்துக் கூறுகிறார். போருக்குச் சென்ற வீரர்கள் அனைவரும் வீடு திரும்பிய நிலையில், ஒரு வீரன் மட்டும் வராமல் இருந்து அவனது தேர் மட்டும் தாமதமாக வந்ததைக் கண்டோர் கூறுவதாக இப்பெண்பாற் புலவரின் பாடல் அமைந்துள்ளது. இதில் போரில் புண்பட்டவர்கள் எளிதில் தொற்றுநோய்க் கிருமிகளால் தாக்குதலுக்கு உள்ளாகிப் புண்கள் ஆறாத ரணமாகிவிடும் என்பதனால் அவர்கள் இருக்கும் வீட்டினில் வேப்பிலையைச் செருகி வைப்பதுடன், வலியால் துன்பப்படும் வீரர்களை அமைதிப்படுத்தி 'காஞ்சிப் பண்ணை' பாடுவதிலும் கடுகினைத் தீயிலிட்டு உண்டாகும் புகையை வீட்டில் பரவச் செய்வதனையும் கூறுகின்றார். இதனை,

**"வேம்புசினை ஒடிப்பவும், காஞ்சிபாடவும்**
**நெய்யுடைக் கையர் ஐயவி புகைப்பவும்**
**எல்லா மனையும் கல்லென் றவ்வே**
**வெந்துஉடன் எறிவான் கொல்லோ**

**நெடிதுவந் தன்றால் நெடுந்தகை தேரே ?"[77]**

என இப்புறநானூற்றுப் பாடல் விளக்குகின்றது. வீரர்கள் திரும்பி வந்ததனால் அவர்களது சுற்றத்தார் மகிழ்ச்சியில் இருந்ததாகப் புலவர் கூறுகிறார்.

## வெறிபாடிய காமக்கண்ணியார்

இவர் புறநானூற்றில் இரண்டு பாடல்கள் (271, 302) பாடியுள்ளார். 'காமக் கண்ணி' என்னும் பெயர் பார்ப்போர் விரும்பும் கண்களை உடையவள் என்று பொருள்படும் 'வெறியாடல்' இதனை 'வேலன் வெறியாட்டு' என்று குறிப்பிடுவர். இவருடைய அகப் பாடல்கள் வெறியாடலைப் பற்றி சிறப்பாகப் பாடுவதால் 'வெறிபாடிய காமக் கண்ணியார்' என்று அழைக்கப்பட்டார்.

போரில் வேலினால் தாக்கி யானையைக் கொன்ற வீரனின் பேராற்றலை எண்ணிப் பார்த்தால் மேகம் பொழியும் மழைத்துளிகளை விடவும் விண்ணில் உள்ள விண்மீன்களை விடவும் போர்க்களத்தில் வீரர்களால் கொல்லப்பட்ட யானைகளின் எண்ணிக்கை அதிகம் என்பதை,

**"நோக்கினார்ச் செகுக்கும் காளைஊக்கி**
**வேலின் அட்ட களிறுபெயர்த்து எண்ணின்**
**விண்ணிவர் விசும்பின் மீனும்**
**தண்பெயல் உறையும், உறையாற் நாவே"[78]**

என இப்புறநானூற்றுப் பாடலின்வழி புலவர் விளக்குகின்றார்.

சங்கப் புறப்பாடல்களில் இடம் பெற்றுள்ள பெண்பாற்புலவர்கள் கல்வியில் சிறந்து விளங்கினர் என்பதை இப்பாடல்களின் வழி அறிய முடிகின்றது. சங்க காலத்தில் ஆடவரகளைப் போல பெண்பாற் புலவர்களும் அரசவைக் கவிஞராகவும் அரசியல் தூது செல்பவராகவும் இரக்க குணம் உடையவராகவும் நட்பு நலம் பாராட்டக் கூடியவராகவும் ஒற்றுமையைப் பேணுபவர்களாகவும் அறக்கருத்துக்களை உணர்த்துபவர்களாகவும் பண்பாட்டை நிலை நிறுத்துபவர்களாகவும் வீரத்தில் சிறந்தவர்களாகவும் தன் கடமையைச் செவ்வனே செய்யக் கூடியவர்களாகவும் விளங்கினர் மகளிர் என்பதை இப்பாடல்கள் வழி உணர முடிகிறது.

## விருந்தோம்பல்

இல்லற மகளிரின் இன்றியமையாப் பண்புகளுள் ஒன்று விருந்தோம்பல். விருந்தோம்பல் என்பது அன்றும் இன்றும் நடைமுறையில் உள்ள ஒரு பண்பாட்டு நிகழ்வாகும்.

**“விருந்தே தானும்**

**புதுவது கிளந்த யாப்பின் மேற்றே” [79]**

என்ற நூற்பாவில் தொல்காப்பில் ‘விருந்து’ என்பதைப் ‘புதுமை’ என்றும் (புதிதாய் வந்தோர்க்கு உணவு கொடுத்தல்) விருந்தினர் என்பதற்கு அதிதியர், புதியோர் என்றும் விருந்தோம்பல் என்பதற்கு வேளாண்மை, மாந்தரியல்பினொன்று’ என்று தமிழ்மொழி அகராதிகள் விளக்கம் தருகின்றன.

விருந்தோம்பல் என்பது சங்க காலத்தில் உறவினர்களை வரவேற்று உபசரித்தல் என்னும் பொருளில் பின்பற்றப்படவில்லை. அன்று விருந்தினர் என்பவர் முன் பின் அறியாத புதியவர்களாக இருந்துள்ளனர். ஆதலால் அறியாதவர் பசியோடும் தாகத்தோடும் வருவாராயின் அவருக்கு வேண்டிய உணவையும் நீரையும் முக மலர்ச்சி யோடு கொடுத்து உபசரித்தலையே விருந்தோம்பல் என்று அழைத்தனர். இத்தகைய விருந்தினரை அகமும் முகமும் மலரும்படி வரவேற்று உபசரிக்க வேண்டும். இல்லை யென்றால் முகர்ந்து பார்த்த அளவிலே வாடிவிடும் அனிச்சப் பூப்போல, விருந்தளிப்பவரின் முகம் திரியும்போது விருந்தினரின் முகம் வாடி உள்ளம் வருந்தி நிற்பர் என்பதை,

**“மோப்பக் குழையும் அனிச்சம் முகம் திரிந்து**

**நோக்கக் குழையும் விருந்து” [80]**

என்ற குறட்பாவின் மூலம் விளக்கியுள்ளார். சங்க காலத்தில் விருந்தோம்பல் இல்வாழ்க்கையின் சிறந்த அறமாகக் கருதப்பட்டது. அதனால்தான்,

**“விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்” [81]**

என்று தொல்காப்பியர் கூறியுள்ளார். சங்க காலத்தில் பெண்களுக்கு விருந்தோம்பல் பண்பும் சுற்றத்தைப் பாதுகாக்கும் பொறுப்பும் தலையாய கடமையாக இருந்துள்ளது என்பதை நாம் அறிய முடிகிறது.

## ஐவகை நில மகளிரும் விருந்தோம்பலும்

## குறிஞ்சி நில மக்களின் உணவு முறை

மலையும் மலைசார்ந்த பகுதிகளும் குறிஞ்சி நிலமாகும். குறிஞ்சி நில மக்கள் சிலம்பன், குறவன், வெற்பன், வேட்டுவர், கானவர், குறத்தி, கொடிச்சி என அழைக்கப்பட்டனர். இவர்கள் வில், அம்பு, வேல் ஆகியவற்றின் துணையுடன் வேட்டையாடி வாழ்ந்தனர். மூங்கிலரிசி, திணை, மலைநெல், தேன், கிழங்குகள் ஆகியன உணவாகப் பயன்பட்டன. மான் முதலிய விலங்குகளின் மாமிசத்தோடு முள்ளம்பன்றியின் மாமிசத்தையும் இவர்கள் விரும்பி உண்டனர் என்பதை,

**“வன்கைக் கானவன் வெம்சிலை வணங்கி**
**உளமிசைத் தவிர்த்த முளவுமான் ஏற்றையோடு**
**மனைவாய் ஞமலி ஒருங்குபுடை ஆட**
**வேட்டுவலம் படுத்த உவகையன் காட்ட**
**நடுகாற் குரம்பைத்தன் குடிவயிற் பெயரும்” [82]**

எனும் பாடலடிகள் உணர்த்தி நிற்கின்றன. சோழநாட்டு குறிஞ்சி நில மக்கள் தேனையும் கிழங்கையும் மகிழ்வோடு உண்டனர். மேலும் இவ்விரு பொருட்களையும் நெய்தல் நில மக்களிடம் விற்றுவிட்டு அதற்குப் பதிலாக மீன், நெய், நறவை (கள்) உண்பதற்காக வாங்கிச் சென்றனர் என்பதை,

**“தேனெய்யொடு கிழங்கு மாறியோர்**
**மீன் நெய்யொடு நறவு மறுகவும்” [83]**

என வரும் பொருநராற்றுப் படை அடிகள் கூறுகின்றன. இப்படிக் கிடைத்த பொருளை தான் மட்டும் உண்ணாமல் வரும் விருந்தினர்களுக்கும் கொடுத்து உபசரித்தனர் என்பதை,

**“தேனினர் கிழங்கினர் ஊன்ஆர் வட்டியர்**
**சிறுகண் பன்றிப் பழுதுளி போக்கிப்**
**பொருதுதொலை யானைக் கோடுசீர் ஆகத்**
**தூவொடு மலிந்த காய கானவர்**
**செழும்பல் யாணர்ச் சிறுகுடிப் படினே**
**இரும்பேர் ஒக்கலொடு பதம்மிக்கப் பெறுகுவீர்” [84]**

என்று இப்பாடல்வழி உணர முடிகின்றது.

**“பரூ உக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு**

**குரூஉக் கண் இறடிப் பொம்மல் பெறுகுவீர்” [85]**

எனும் மலைபடுகடாம் பாடலில் வேடுவர்களின் சிறுகுடிகள் பெரிய மலைப்பக்கத்தில் அமைந்துள்ளன. இவர்கள் தாம் வென்ற யானைகளைக் காவு மரமாகக் கொண்டு தேன், கிழங்கு, பன்றியின் தசைகள் போன்ற உணவுப் பொருட்களைத் தொங்கவிட்டுச் சுமந்து வந்து சேகரிப்பர். இவ்வுணவுகளை ஊர்களுக்குள் வரும் விருந்தினர்களுக்கு உண்ணக் கொடுத்து, தங்குவதற்கு இடமும் அளித்தனர். மேலும் பெரிய தசையை நெய்யில் பொரித்தும் வேக வைத்தும் அழகிய நிறமுடைய திணையரிசி சோறுடன் வேட்டுவ மகளிர் விருந்து வழங்கினர் என்பதையும் இப்பாடல்வழி அறிய முடிகின்றது.

நறிய மலர் சூடி மணம் வீசும் கரிய கூந்தலையுடைய குறவர் இன மக்கள், மன மகிழ்வுடன் உள்ளம் உவப்ப தங்கள் பிள்ளைகளை அனுப்பி, அவர்களின் உறவுமுறைகளைச் சொல்லி அவ்வழியில் செல்லும் கூத்தர்களைத் தடுத்து நிறுத்தி உணவினை வழங்கினர் என்பதை,

**“குறமகள் ஆக்கிய வால்அவிழ் வல்சி**

**அகம்மலி உவகை ஆர்வமொடு அளைஇ**

**மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவீர்” [86]**

எனும் பாடல் அடியில் உணர முடிகிறது. மேலும் குறிஞ்சி நில மகளிர் அளிக்கும் விருந்தானால் பரிசில் பெறுவதையே மறந்து மலையிலேயே தங்கியிருந்தனர் கூத்தர்கள் என்பதை,

**“செருச்செய் முன்பின் குருசில் முன்னிய**

**பரிசில் மறுப்ப, நீடலும் உரியிர்**

**அனையது அன்று, அவன் மலைமிசை நாடே” [87]**

என்று இப்பாடல் உணர்த்துகிறது. இப்பாடல்கள் வழி குறிஞ்சி நில மக்களின் விரும்தோம்பும் பண்பினையும் அவர்களின் உணவுமுறையினையும் அறிய முடிகிறது.

## முல்லைநில மகளிரின் விருந்தோம்பல்

‘காடும் காடு சார்ந்த பகுதியும் முல்லை நிலமாகும்’. இடையர், இடைச்சியர், ஆயர், ஆய்ச்சியர் போன்றோர் வாழ்ந்தனர். ஆடு, மாடுகளை மேய்க்கும் மேய்ச்சல் நில வாழ்க்கையை மையமாகக் கொண்டது முல்லை நிலமாகும். முல்லை நிலத்தில் உணவு தேடும் வாழ்க்கையைக் கடந்து உணவு உற்பத்தி செய்யும் நிலை உருவானது. ஆயர்

மகளிர் வரகுச் சோற்றையும் வேளப்பூவைத் தயிரோடு சேர்த்து செய்த புளியங் கூழையும் உணவாகக் கொண்டனர் என்பதை,

**“நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன**
**இன் சுரல் முரல்” [88]**

எனும் இப்பெரும்பாணாற்றுப் படை பாடலால் அறிய முடிகிறது.

முல்லை நில மக்களாகிய இடையர்கள் ஆடு, மாடுகளைக் கொண்டு செல்பவர்களாயினும் அவர்களுடைய உணவுமுறையோ புன்செய்த் தானியங்கள் ஆகும். நண்டுக் குஞ்சுகளைப் போலக் காணப்படும் திணைச் சோறும் பாலும் அவர்கள் உட்கொள்ளும் உணவாகும். இவ்வகையான உணவுகளையே விருந்தினர்களுக்கும் கொடுத்து உபசரிப்பர். இதனை,

**“மடிவாய்க் கோவலர் சேப்பின்**
**இருங் கிளை நெண்டின், சிறுபார்ப்பு அன்ன**
**பசுந்திணை முரல் பாலொடும் பெறுகுவீர்” [89]**

என வரும் இவ்வடிகளில் உணர முடிகின்றது. மேலும்

**“பருவ வானத்துப் பா மழைக் கடுப்பக்**
**கருவை வேய்ந்த கவின் குடிச் சீறூர்**
**நெடுங்குரல் பூளைப் பூவின் அன்ன**
**குறுந்தாள் வரகின் குறள் அவிழ்ச் சொன்றி**
**புகர் இணர் வேங்கை வீ கண்டன்ன**
**அவரை வான் புழுக்கு அட்டி பயில்வுற்று**
**இன்சுவை முரல் பெறுகுவீர்” [90]**

எனும் இப்பாடலில் மழைக்காலத்தில் வானத்தில் மேகங்கள் தோன்றுவது போல அவர்களுடைய குடிசைகள் வரகு வைக்கோலால் உரை போடப்பட்டிருந்தது. அழகிய சிறிய ஊராக அது அமைந்தது. அங்கு இருக்கும் மக்கள் வரகினைச் சமைத்து அதற்கு அவரை பருப்பை அவித்து வரகுச் சோற்றோடு தாமும் உண்டு விருந்தினராகிய பாணர்களுக்கும் மிகுதியாக வழங்கினர் என்பதை உணர முடிகின்றது. மேலும்

**“வேளை வெண்பூ வெண் தயிர்க் கொளீஇ**
**ஆய்மகள் அட்ட அம் புளி மிதவை**
**அவரை கொய்யுநர் ஆர மாந்தும்” [91]**

எனும் புறநானூற்றுப் பாடலில் ஆயர் மகளிர் வரகரிசியைக் குற்றிச் சமைத்த சோற்றையும் வேளைப்பூவைத் தயிரில் இட்டு சமைத்த அழகிய புளித்தக் கூழினையும் அவற்றோடு அவரைக் காய்களையும் விருந்தினர்க்கு உண்ணக் கொடுத்தனர் என்று பாடப்பட்டுள்ளதன்மூலம் பண்டைத் தமிழரின் விருந்தோம்பல் பண்பை உணர முடிகிறது.

விடியற்காலைப் பொழுதில் பறவைகள் எழும்போதே எழுந்து விடும் ஆயர்மகள், தன் கடமையான தயிரைக் கடைந்து, வெண்ணெய், மோர் இவற்றைத் தனியாகக் கடைந்து எடுத்து, மோரை விற்க செல்லுகின்றாள். மோரை விற்றதனால் கிடைத்த உணவுப் பொருள்களைக் கொண்டு உறவினர்களுக்கு விருந்தோம்புகின்றாள்.

**“நள் இருள் விடியல் புள் எழப் போகி**
**புலிக்குரல் மத்தம் ஒலிப்ப வாங்கி**
**உறைஅமை தீம்தயிர் கலக்கி, நுரைதெரிந்து**
**புகழ்வாய் குழிசி பூஞ்சுமட்டு இரிஇ” [92]**

என்று கூறுகின்றது. மேலும் தன் வீட்டிற்கு இரவு நேரத்தில் வரும் கூத்தர்களுக்கு

**“பாலும் மிதவையும பண்ணாது பெறுகுவீர்**
**துய்ம்மயிர் அடக்கிய சேக்கை அன்ன**
**மெய் உரித்து இயற்றிய மிதி அதள் பள்ளித்” [93]**

என உணவாகப் பாலும் பால் சோறும் அளித்தனர். பின் விலங்குகளின் தோல் படுக்கையில் உறங்கினர் என்று கூறுகின்றது. இப்பாடல்களின் வழி முல்லைநில மக்களின் விருந்தோம்பும் பண்பினையும் வாழ்வியல் சூழ்நிலைகளையும் உணவுப் பழக்கவழக்கங்களையும் அறிய முடிகின்றது.

## மருத நில மக்களின் விருந்தோம்பல்

‘வயலும் வயல் சார்ந்த பகுதிகளும் மருத நிலமாகும். மக்கள் ஊரன், உழவர், உழத்தியர், கடையர், கடைசியர் என அழைக்கப் பெற்றனர். இவர்களின் முதன்மையான தொழிலே வேளாண்மையாகும். ஆதலால் இங்கு வாழும் மக்கள் வேற்றுநில மக்களைக் காட்டிலும் செல்வச் சிறப்புடையவர்களாக விளங்கினர். சோழ நாடு எப்போதும் வளமுடையதாக இருக்கும். ஆகையால் அங்கு கரும்பு, நெல், பழங்கள், காய்கள், கீரை வகைகள் போன்ற உணவுப் பொருட்கள் மிகுந்து காணப்பட்டன.

விளைந்த நெல்லை அறுவடை செய்யும் காலத்தில், நெல் அறுப்பவர் நீரின் கடைமடையில் பிடித்த வாளை மீனையும், உழவர்கள் ஆமையையும் கரும்புக்

காடுகளிலிருந்து கொண்டு வரப்பட்ட தேனையும் பெரிய நீர்த்துறைகளிலிருந்து பெண்கள் கொண்டு வந்த செங்கழுநீர்ப் பூவையும் கொண்டு விருந்தினர்களுக்கு விருந்தளித்தனர் என்பதை,

**"பெருவிறல் யாணர்த் தாகி அரிநர்**
**கீழ்மடைக் கொண்ட வாளையும் உழவர்**
**படைமிளிர்ந் திட்ட யாமையும் அறைநர்**
**கரும்பிற் கொண்ட தேனும் பெருந்துறை**
**நீர்தரு மகளிர் குற்ற குவளையும்**
**வன்புலர்க் கேளிர்க்கு வருவிருந்தயரும்**
**மென்புல வைப்பின் நன்னாட்டுப் பொருந" [94]**

என இப்பாடல் கூறுகிறது.

முள்ளை நீக்கி சமைத்த மீன் துண்டங்கள் கலந்த வெண்மையான நிறத்தை உடைய சோற்றைக் கூத்தர்கள் சுற்றத்தோடு பெற்றனர்.

**"முள்ளரித்து இயற்றிய வெள்ளரி வெண்சோறு" [95]**

என்ற இப்பாடல் விருந்து பெற்றதை எடுத்துக் கூறுகின்றது.

தன் பிள்ளைகளால் பாணர்களைத் தடுத்து, வரவழைக்கப்பட்டு நண்டினது கலவையோடு வெண்சோற்றினையும் உண்ணத் தந்தார்கள் என்பதை,

**"அவைப்பு மாண் அரிசி அமலை வெண்சோறு,**
**கவைத்தாள் அலவன் கலவையொடு பெறுவீர்" [96]**

என்று உணவு அளித்ததை கூறும்விதமாக அமைந்துள்ளது. இப்பாடல்வழி மருதநில மக்களின் விருந்தோம்பும் பண்பினை உணர முடிகின்றது.

## நெய்தல் நில மக்களின் விருந்தோம்பல்

கடலும் கடல் சார்ந்த பகுதிகளும் நெய்தல் நிலமாக அமைந்துள்ளன. சோழ நாட்டின் தலைநகராகிய 'காவிரிப்பூம்பட்டினம்' கடலால் ஆன பகுதி என்பதால் செழிப்பாகக் காட்சியளிக்கும். இம் மக்கள் மீனை உணவாகக் கொண்டுள்ளனர். இங்கு வாழும் மக்கள் யாதவர், நுளைச்சியர், நுளையர், சேர்ப்பன் போன்றோர் ஆவார்.

இம்மக்கள் தன்னை நாடி வருவோருக்கு மனமுவந்து உணவளிக்கும் பாங்கினை,

**"நுதிவேல் நோக்கின் நுளைமகள் அரிந்த**
**பழம்படு தேறல் பரதவர் மடுப்பக்" [97]**

**“வறல் சூழல் சூட்டின் வயின்வயின் பெருகுவீர்” [98]**

எனும் இப்பாடல் உணர்த்துகிறது. நுளைச்சியர் காய்ச்சிய கள்ளை பரதவர் வழங்க, குழல் மீன் சூட்டுடன் அதனை உண்டு மகிழ்ந்தனர் என்றுரைக்கப்பட்டுள்ளது. மேலும் கடலில் வலை வீசிக் கொண்டு வந்த வாளைமீன் தசையைத் தூண்டிலில் சிக்கிய துதிக்கை போன்ற சிவந்த கண்களையுடைய விரால் மீன் தூண்டுகளுடன் கலந்து, பகன்றைப் பூவால் செய்த கண்ணியை அணிந்த, கள்விற்கும் விலைஞருடைய மகளிர் கூத்தருக்குக் கொடுத்ததை,

**“வலையோர் தந்த இருஞ்சுவல் வாளை**
**பிலையோர் இட்ட நெடுநாண் தூண்டில்**
**பிடிக்கை அன்ன செங்கண் வரா அல்**
**துடிக்கண் அன்ன குறையொடு விரைஇப்**
**பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்” [99]**

என்று கூறுகின்றது. இப்பாடல் மூலம் விருந்தினர்களுக்கு மீன் வகைகளை உணவாகக் கொடுத்ததை அறிய முடிகின்றது. மேலும் அம்மக்கள் நெய் அரிசியைக் கொண்டு கூழாகச் சமைத்த சுவையுள்ள உணவை, அகன்ற வாயுடைய முடைந்த தட்டிலே ஊற்றி ஆறவிட்டு, பாம்புப் புற்றிலே இருக்கும் புற்றாஞ் சோற்றைப் போலிருக்கின்ற மெல்லிய நல்ல நெல் முளையை சுவை உண்டாக்கக் கலந்து, காலை, மாலை ஆகிய இரு வேளையும் இரண்டு நாள் வைத்திருப்பர். பின்பு உறுதியான வாயையுடைய பெரிய சாடியில் அதைப் போட்டு வெந்நீர் ஊற்றி வேக வைப்பர். பின்பு, கையால் துழாவி நெய் அரிப்பால் வடிகட்டுவர். அது சுவையான மதுவாக அமையும். அந்த மதுவினை பச்சை மீனைச் சுட்ட சூட்டோடு உண்பதற்கு அளிப்பர். வழியில் செல்வோரும் பசி தீர உண்டு வழி நடந்த களைப்புத் தீர இளைப்பாறிப் பின்சென்றனர்என்ற இச்செய்தியை

**“வல்வாய்ச் சாடியின் வழைச்சு அற விளைந்த,**
**வெந்நீர், அரியல விரல்அலை, நறும்பிழி,**
**தண்மீன் சூட்டொடு தளர்தலும் பெறுகுவீர்” [100]**

எனும் இப்பாடல் உணர்த்துகிறது. விருந்தினர்க்கு உணவு உபசரித்த பாங்கினை இப்பாடல் உணர்வுபட எடுத்து இயம்புகின்றது. இப்பாடல் வழி நெய்தல் நில மக்களின் உணவுமுறைகளையும் விருந்தோம்பும் பண்பினையும் உணர முடிகிறது.

## பாலை நில மக்களின் விருந்தோம்பல்

மணலும் மணல் சார்ந்த பகுதியும் பாலை நிலமாகும். இந்நிலம் வெயிலின் வெப்பம் நிறைந்தும், கள்வர்கள் மிகுந்தும் காணப்படும் இடமாகக் காட்சியளிக்கின்றது. மக்கள் எயினர், எயிற்றியர், மறவர், மறத்தியர் ஆவர்.

எயினர் குலத்தில் பிறந்த மகளிரும் விருந்தோம்பலில் சிறந்து விளங்கியுள்ளனர் என்பதை,

**“எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு,**
**தேமா மேனிச் சில்வளை ஆயமொடு**
**ஆமான் சூட்டின் அமைவரப் பெருகுவீர்”** [101]

எனும் இப்பாடலில் எயினர் குலத்தில் பிறந்த மகளிர் சமைத்த இனிய புளிங்கறி அதாவது புளிச்சோற்றினை மானினது சூடான இறைச்சியுடன் பசி தணியுமாறு நிரம்பப் பெறுவீர் என்று பாணன் கூறுவதை இப்பாடல் அடிகளில் காண முடிகின்றது. மேலும் எயிற்றியர் தாம் கொணர்ந்த புல்லரிசியை உரலில் இட்டு குற்றி எடுத்து, ஆழ்ந்த கிணற்றில் உள்ள உவர்ப்பு நீரைக் கொண்டு சமைத்து வந்தனர். அவ்வுணவினை வந்த விருந்தினர் – களுக்குத் தேக்கு இலையில் உணவு படைத்தும் உள்ளனர் என்பதை,

**“நீழல் முன்றில் நிலஉரல் பெய்து**
**குறுங்காழ் உலக்கை ஒச்சி நெடுங்கிணற்று**
**வல்ஊற்று உவரி தோண்டி தொல்லை**
**முரவுவாய்க் குழிசி முரி அடுப்பு ஏற்றி”** [102]

**“தெய்வமடையின் தேக்கிலைக் குவைஇ, நும்**
**பைதிர் கடும்பொடு பதம்மிகப் பெறுகுவீர்”** [103]

என்னும் இப்பாடலின் வழியாகப் பாலை நில மக்கள் விருந்து படைத்ததை அறிய முடிகின்றது.

## கலைகள்

மனிதனின் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக விளங்குவது இலக்கியம் எனலாம். இவ்விலக்கியங்களில் சங்க இலக்கியங்கள் சமூக அமைப்பினைக் காட்டும் வரலாற்றுப் பெட்டகங்களாகத் திகழ்கின்றன. இலக்கியத்தின் பாடுபொருட்களில் பெண்களுக்கு மிக முக்கியமான பங்கு உண்டு. தொடக்க காலம்

முதல் இக்காலம் வரையிலான இலக்கியங்கள், பெண்களின் திறன்களைப் பல்வேறு படிநிலைகளில் வெளிப்படுத்தியுள்ளன.

கலை என்பது மனிதனின் உள்ளத்தைத் தன் வயப்படுத்தி ஆற்றலை வெளிப்படுத்துவதாகும். இவற்றை **“கலை என்ற சொல் முதலில் வழங்கியபோது செயல் திறமையைக் காட்டுவதும் அழகு ஏற்படும் வகையில் செய்வதும் சுவை பயக்க வல்லதும் பற்பல காரியங்களுக்கு உதவுவதுமான அறிவையும் ஆற்றலையும் குறித்தது என்றும் கலையில் செயல், பயன், திறமை, அழகு, சுவை என்ற அம்சங்கள் உள்ளன”**[104] என்றும் கூறுகிறது கலைக்களஞ்சியம்.

## கலை – விளக்கம்

கலை என்பதற்கு ஆண்மான், ஆடை, ஆண் குரங்கு, சேணம், பகுதி, ஒளி நுட்பமான கால அளவு, மொழி, பெண்களின் இடையணி, எழுத்து, நூல், கற்பூரவகை’ என்று தமிழ் அகராதியில் பொருள் விளக்கப்பட்டுள்ளன.

புத்தர் வரலாற்றைக் கூறும் ‘லலித விஸ்ரதம்’ என்னும் நூலிலும் சமண நூல்களிலும் இந்து நூல்களிலும் அறுபத்து நான்கு கலைகளின் பெயர்கள் காணப்படுகின்றன. சமணர் நூல்களில் ஆடவர்களுக்குரிய கலைகள் எழுபத்திரண்டு, பெண்களுக்குரிய கலைகள் அறுபத்து நான்கு என்று குறிப்பிடப்பட்டுள்ளன.

அறுபத்து நான்கு கலைகள் **“ஆடல், பாடல், இசைக் கருவிகள், கவிதை, பூ வேலைகள், உடை அலங்காரம், காதணிகள், வாசனைப் பொருட்கள், நகைகள், உதட்டிற்கு வண்ணம் தீட்டுவது, முகம் முதலிய உறுப்புகளுக்கு ஏற்ப மண–நிறப் பொடிகளைப் பயன்படுத்துதல், ஆண்களும் பெண்களும் சேர்ந்து நீராடும் பொழுது விளையாட்டாக நீரில் மிருகங்கள் போல் ஒலிகளைக் கிளப்பும் கலைகள்”**[105] என்று மா.இராசமாணிக்கனார் கூறியுள்ளார்.

இத்தகைய சங்கப்புற நூல்களில் இடம் பெற்றுள்ள மகளிர் விளையாட்டுக்கள், கூத்துக்கலைகள், நாடகம், இசை மற்றும் அவரகள் அணிந்திருந்த ஆடை, அணிகலன்கள், ஒப்பனைகள், செய்த தொழில்கள் ஆகிய அனைத்தும் கலை நயத்தோடு வாழ்ந்திருக்கின்றனர் என்பதை உணர்த்துகின்றது.

## மகளிர் விளையாட்டுக்கள்

சிறுவர் முதல் பெரியவர்கள் வரை மேற்கொள்ளும் ஒரு கலையே விளையாட்டாகும். விளையாட்டு என்பதற்கு, **“பொழுது போக்கிற்காகவும் திறமையை வெளிப்படுத்தும் விதமாகவும் நிகழ்த்தப்படும், விதிமுறைகளை உடைய செயல்பாடு, உண்மை என்று எடுத்துக் கொள்ள வேண்டாதது, வேடிக்கையாகச் செயல்படுவது”**[106] என்று கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி பொருள் குறிப்பிட்டுள்ளது.

சங்க இலக்கியங்களில் மகளிர் விளையாடிய விளையாட்டுக்கள் தொடர்பான செய்திகளை ஆராயும்போது சங்க கால மகளிர் விளையாட்டின்மீது கொண்ட ஆர்வத்தையும் ஈடுபாட்டையும் அறிந்து கொள்ள முடிகின்றது. இவர்களின் விளையாட்டுகள் பெரும்பாலானவை மகிழ்ச்சி ஊட்டக்கூடிய விளையாட்டுகளாகவே இருந்திருக்கின்றன. உடலும் உள்ளமும் சிறந்த ஆரோக்கியத்துடன் அமைய வேண்டும் என்பதே அக்கால மகளிர் விளையாட்டின் அடிப்படையாக இருந்துள்ளது. சங்க கால மகளிர் பூஞ்சோலைகள், அருவி உள்ளிட்ட நீர்நிலைகள், கடற்கரைகள், மணற்குன்றுகள், மாடங்கள், முற்றங்கள் ஆகிய பல்வேறு இடங்களில் விளையாடி உள்ளனர்.

சங்கப்புற இலக்கியங்களில் மகளிர் விளையாட்டுக்களாக,

- கழங்காடுதல்,
- பாவை விளையாட்டு,
- பந்து விளையாட்டு,
- ஓரை விளையாட்டு,
- மணல் விளையாட்டு (அ) வண்டல் அயர்தல்,
- எண்ணி விளையாடுதல்,
- வள்ளைப் பாட்டு,
- மலர்க்கொய்தல்,
- நீர் விளையாட்டு,
- ஓசை எழுப்புதல்

ஆகியன குறிப்பிடத்தக்கவையாகும்.

## கழங்காடுதல்

கழங்கு என்பதற்கு ‘கழற்சிக்காய், கழற்சி விளையாட்டு, வெறியாட்டு, ஆடல் வெறியாட்டாளன், சூது வேலனாடல் என்று பொருள் கூறப்படுகிறது. கழங்காடுதல் என்பதற்குப் பெண்கள் ஆடும் கழற்சிக்காய் ஆட்டம்’ என்று தமிழ் அகராதியில் கூறப்பட்டுள்ளது. இவ்வகையில் மகளிர் முத்துப் போன்று ஆர்ந்த மணலிடத்தில் பொன்னாலான கழல் ஏந்தி ஆடுவதை,

**“முத்த வார்மணல் பொற்கழங்கு ஆடும்”[107]**

என்று பெரும்பாணாற்றுப்படை உணர்த்துகிறது. காற்சிலம்பும் வளையல்களும் அணிந்த மகளிர், பொருநையாற்று மணல் மேட்டில் பொன்னால் செய்த கழற்சிக் காய்கள் வைத்து வீசி விளையாடினர் என்பதை,

**“செறி அரிச் சிலப்பின், குறுந் தொடி மகளிர்**
**பொலம் செய் கழங்கின் தெற்றி ஆடும்”[108]**

என்னும் பாடல் வரிகளின் மூலம் புலப்படுகிறது. ஒளி பொருந்திய நெற்றியினையுடைய மகளிர் கழற்சிக்காயொடு முல்லை நிலமெங்கும் திரிந்து கொண்டிருந்தனர். இதனை,

**“ஒண் நுதல் மகளிர் கழலொடு மறுகும்”[109]**

என்னும் பாடலின் வாயிலாக வெளிப்படுத்துகிறது. இத்தகைய பொன்னாலான கழற்சிக் காய்களைக் கொண்டு மகளிர் விளையாடியுள்ளதையும் அக்காய்களைக் கையில் வைத்துக் கொண்டு திரிந்ததையும் அறிந்து கொள்ள முடிகிறது.

## பாவை விளையாட்டு

‘பாவை’ என்பது பதுமையைக் குறிக்கும் விளையாட்டுப் பொருள்களுள் ஒன்றாகும். ஆண், பெண் ஆகிய இருபாலர் உருவங்களில் அமைக்கப்பட்டதாகக் காணப்படும். ‘மண்பாவை’ என்பது மண்ணால் ஆனது என்றும் ‘மரப்பாவை’ என்பது மரத்தினால் ஆனது என்றும் ‘மலர்ப்பாவை’ என்பது மலரினால் ஆனது என்றும் ‘பொற்பாவை’ என்பது பொன்னாலானது என்றும் ‘பைஞ்சாய்ப் பாவை’ என்பது கோரைப் புல்லால் ஆனது என்றும் வழங்குவர். இவற்றை,

**“திணிமணல் செய்வுறு பாவைக்குக் கொய் பூத் தைஇ”[110]**

**“செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை”[111]**

என்னும் பாடல் வரிகளில் காண முடிகிறது. இவ்வகையான பாவைகளை வைத்து மகளிர், சிறுமியர் போன்றோர் விளையாடுவர். மண், மரம் ஆகியவற்றால் செய்யப்படும்

பாவைகளின் மேல் இயற்கையான பல வண்ணங்கள் பூசப்பட்டிருக்கும். இதன்மேல் ஓவிய வேலைப்பாடுகள் அமைக்கப்பட்டப் பாவை 'சித்திரப் பாவை' என பெயர் பெற்றிருக்கும்.

மென்மையான தோள்களைக் கொண்ட பெண்கள், பாவையைச் செறிந்த மணலில் வைத்து விளையாடிப் பாதுகாத்துள்ளனர்.

**"தெற்றிப் பாவை திணி மணல் அயரும்**

**மென்தோள் மகளிர் நன்று புரப்ப"[112]**

என்னும் புறநானூறுப் பாடலின் வழி அறிய முடிகிறது. இவ்வாறாக மகளிர் விளையாடக் கூடிய விளையாட்டுக்களில் பாவை விளையாட்டுப் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது.

## பந்து விளையாட்டு

பழங்காலத்தில் மகளிர் மட்டும் ஆடும் பந்தாட்டம் இன்று ஆண், பெண் ஆகிய இருபாலரும் ஆடும் ஆட்டமாக அமைந்துள்ளது. வீட்டின் முற்றம், வெளிப்புறம், மாடம், மணல் பரப்பியப் பகுதி போன்ற இடங்களில் இப்பந்தாட்டம் விளையாடப்பட்டுள்ளது. பந்து பல நிறங்களில் வேலைப்பாடுகள் கொண்டு காட்சியளிப்பதை,

**"வான்தோய் மாடத்து, வரிப்பந்து அசைஇ"[113]**

என்னும் இப்பாடல் வரிகளில் பந்தாட்டத்தில் களைத்துப்போகும்போது, பொன்னால் ஆகிய கழற்சிக்காயைக் கொண்டு கழற்சி ஆடினர் என்பது இடம் பெற்றுள்ளது. மேலும் தொண்டை நாட்டுத் துறைமுக நகரங்களில் வாழும் மகளிர் தமது வீட்டின் மேல்மாடத்தில் பந்தடித்து விளையாடினர். இத்தகைய மகளிர் விளையாடும் பந்தாட்டம் பற்றி அறிய இயல்கிறது.

## ஓரை விளையாட்டு

ஓரை என்பது 'மாதர் கூட்டம், மகளிர் விளையாட்டு, விளையாட்டிடம், குரவை, ஒரு முகூர்த்தம், நேரம், கூகை, இரண்டரை நாழிகைப் பொழுது, அணிகலன்' என்றும் 'ஓரைப்பாவை என்றால் மகளிர் விளையாட்டுப் பாவை' என்றும் தமிழ் அகராதி விளக்குகிறது. இதனை,

**"ஓரை ஆயத்து ஒண் தொடி மகளிர்"[114]**

என்ற பாடல் வரியில் மெல்லிய வளையணிந்த மகளிர் ஓரை விளையாட்டு விளையாடியதை வெளிப்படுத்தியுள்ளனர். இதனால் 'ஓரை' என்பது மகளிர் ஆடும் விளையாட்டு என்பதை உணர முடிகிறது.

## மணல் விளையாட்டு (அ) வண்டல் அயர்தல்

மணலில் அழகிய உருவம் செய்து விளையாடும் விளையாட்டு 'மணல்' விளையாட்டாகும். பெண்கள் இவ்விளையாட்டை விளையாடி இருக்கின்றனர் என்பதை,

**"வால் இழை, மட மங்கையர்**
**வரி மணல் புனை பாவைக்குக்**
**குலவுச் சினைப் பூக் கொய்து"[115]**

என்னும் பாடலின் மூலமாக தூய அணிகலன்களை அணிந்த பேதைப் பெண்கள், வண்டல் மண்ணால் இழைத்த பாவைக்கு மலர் சூட்டி, பிறகு பொருநை ஆற்று நீரில் விளையாடுவர் என்று பேய்மகள் இளவெயினி பாடியிருப்பதை உணர முடிகிறது. இதேபோல் இளங்கீரனார்,

**"முதிர் வார் இப்பி முத்த வார் மணல்**
**கதிர் விடு மணியின் கண் பொரு மாடத்து**
**இலங்கு வளை மகளிர் தெற்றி ஆடும்"[116]**

என்னும் பாடல் வரியில் உயர் மாடத்தில் வாழும் ஒளியையுடைய வளையணிந்த மகளிர், முதிர்ந்து நீண்டு அகன்ற சிப்பியில் உள்ள முத்துப்போன்று, வெண்மையான ஒழுங்குபட்ட மணல் திடலின் மேட்டில் விளையாடினர் என்று கூறியுள்ளார். சோழநாட்டு உழவர் மகளிர் நெய்தல் நிலத்து மணற்குன்றில் வண்டல் இழைத்து ஆடுவதை,

**"இளையோர் வண்டல் அயரவும்"[117]**

என்னும் பொருநராற்றுப்படை விளக்குகிறது. இப்பாடல்கள் வழி மகளிர் தம் மனதில் தோன்றும் எண்ணங்களை மண்ணில் உருவமாக இழைத்து மகிழ்ந்துள்ளமையை அறிய முடிகின்றது.

## எண்ணி விளையாடுதல்

உப்பு வண்டிகள், யானைகள், படகுகள், குதிரைகள், விளக்குகள், குருகுகள் ஆகியவை சாலைகளில் வரும்போது எண்ணி விளையாடுவர். பறம்பு மலையின் உயர்ந்த சிகரத்தில் ஏறி நின்று பகை மன்னரின் குதிரைகளை எண்ணிய பாரி மகளிர், பாரியின் இறப்பிற்கு பின் உப்பு வண்டிகளை எண்ணினர். இச்செய்தியை,

**". . . . . . . . . . . , கூர் வேற் பாரியது**
**அருமை அறியார், போர் எதிர்ந்து வந்த**
**வலம்படு தானை வேந்தர்**

**பொலம் படைக் கலிமா எண்ணுவோரே"[118]**

என்னும் பாடலில் பாரி மகளிர் உமணரின் உப்பு வண்டிகளை எண்ணி விளையாடினர் என்பதை அறிய முடிகிறது. செவ்விய இழையணிந்த மகளிர், யானைகளை எண்ணிய பாங்கினை,

**"ஊசல் மேவல், சேயிழை மகளிர்**
**உரல்போல் பெருங்கால் இலங்குவாள் மருட்பின்**
**பெருங்கை மகமாப் புகுதரின் அவற்றுள்**
**விருந்தின் வீழ் பிடி எண்ணு முறை பெறாஅ"[119]**

என்று பரணர் குறிப்பிட்டுள்ளார். மேலும்,

**"கடலே, கால்தந்த கலன் எண்ணுவோர்"[120]**

என்னும் பாடல் வரியில் நெய்த நில மகளிர் கடற்கரை ஓரங்களில், காற்றால் அடித்து வரப்பட்ட மரக்கலங்களை எண்ணி விளையாடியதைக் கூறுகின்றது. இதன் வழியாக மகளிர் உப்பு வண்டிகள், யானைகள், மரக்கலங்கள் முதலியவற்றை எண்ணி விளையாடிய செய்திகள் புலப்படுகின்றன.

## வள்ளைப்பாட்டு (உலக்கைப் பாட்டு)

சங்க காலத்தில் ஆண்களும் பெண்களும் ஆகிய இருவரும் விளையாடும் விளையாட்டுக்கள் இசை நலன் சான்ற பாடல்களோடு அமைந்துள்ளன. அதாவது இசையோடு கூடிய பாடல் அமைவதால் அவை எளிமையாகவும் இனிமையாகவும் நிறைவடையும். 'வள்ளைப் பாட்டு' என்பதனை உலக்கைப் பாட்டு, உரற்பாட்டு, அவலிடி, அம்மானை, வள்ளை என்று கூறுவர். இத்தகைய வள்ளைப்பாட்டு, திணை குத்தும்போது மகளிரால் பாடப்பட்டதை,

**"தினைகுறு மகளிர் இசைபடு வள்ளையும்"[121]**

என்ற மலைபடுகடாம் பாடல் வரியில் காண முடிகிறது. விளையாட்டு, தொழில் ஆகியவற்றின் போது மகளிர் மேற்கொள்ளும் வள்ளைப்பாட்டை அடியார்க்கு நல்லார் சிலம்பதிகாரத்தில் சுட்டிக் காட்டியுள்ளார். எனவே வள்ளைப் பாட்டு சங்க காலத்தில் ஆண்மகனின் புகழைப்பாடும் பாட்டாகவும் மகளிரின் உடல்நலத்தைப் பேணும் பயிற்சியாகவும் அமைந்துள்ளன என்பவை புலப்படுகிறது.

## மலர் கொய்தல்

மனித வாழ்க்கையின் இன்ப துன்ப நிகழ்வுகளில் மலர்கள் இடம் பெறுகின்றன. சிறுவர் முதல் பெரியவர் வரை அனைவரையும் மயக்கும் தன்மை மலருக்குண்டு. நிறமும் மணமும் உடையது மலர்கள். குறிஞ்சிப் பாட்டு என்னும் நூலில் கபிலர் தொண்ணூற்று ஒன்பது வகையான மலர்களைப் பற்றி குறிப்பிட்டுள்ளார். இது பூக்களின்மீது பெண்கள் வைத்திருக்கும் ஆர்வத்தை வெளிக்காட்டுவதாக உள்ளது.

மகளிர் பொழுது போக்கிற்காகவும் சுற்றத்தார்க்கு விரும்பி வழங்கும் பொருட்டும் மலர்கொய்தலில் ஈடுபட்டுள்ளனர். பெரிய நீர் நிலைகளிலிருந்து நீர் எடுத்துச் செல்லும் மகளிர் செங்கழுநீர் மலர்களைப் பறித்துச் சென்று, ஊர்களில் வரும் சுற்றத்தார்க்கு விரும்பி வழங்கியிருக்கின்றனர். இச் செய்தி,

**“நீர் தரு மகளிர் குற்ற குவளையும்**
**வன்புலக் கேளிர்க்கு வரு விருந்து அயரும்”**[122]

என்ற பாடலின் மூலமாக தெளிவாகிறது. மென்மைத் தன்மைக் கொண்ட மகளிர் மருத நிலத்துத் தாமரை மலர், நெய்தல் நில மலரோடு கொய்யும் காட்சி,

**“வள் இதழ்த் தாமரை நெய்தலோடு அரிந்து**
**மெல்லியல் மகளிர் ஒல்குவணர் இயலி”**[123]

என்ற அடிகளிலும் வளையணிந்த மகளிர் பச்சை அவல் இடித்த உலக்கையை அருகிலுள்ள வாழை மரத்தில் சார்த்தி விட்டு வள்ளைப் பூவினைப் பறிப்பர் என்பதை,

**“அவர் எறி உலக்கை வாழைச் சேர்த்தி,**
**வளைக் கை மகளிர் வள்ளை கொய்யும்”**[124]

என்னும் பாடல் வரிகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. வேங்கை மரத்தின் பெரிய கிளைகளில் தோன்றிய மணம் பொருந்திய மலர்களைப் பறிக்கும் மகளிர் புலி வருவதாக ஆரவாரம் எழுப்பியதை,

**“கருங்கால் வேங்கை இருஞ்சினைப் பொங்கர்**
**நறும் பூக் கொய்யும் பூசல்”**[125]

என்கின்ற பாடல் வாயிலாக தெளிவுபடுத்துகின்றன. வயல்வெளிகளில் வேலை செய்யும் பொழுதும் ஆரவாரம் எழுப்பியும் மலர் கொய்தலில் ஈடுபட்டுள்ளனர் என்பது புலப்படுகிறது.

## நீர் விளையாட்டு

தமிழகத்தின் வெப்பமிகுதிக் காரணமாக இங்கு வாழும் மக்கள் குளிர்ச்சியை விரும்புவர். ஆதலால் தாங்கள் வாழும் இடங்களில் உள்ள அருவிகள், ஆறுகள், சுனைகள், குளங்கள், ஏரிகள், கடல்கள் ஆகிய நீர் நிலைகளில் நீராடி மகிழ்ந்தனர். இவ்வாறு நீராடுதல் இன்பம் நல்குவதாகவும் பொழுதுபோக்கு விளையாட்டாகவும் பழங்காலந்தொட்டு இருந்து வந்துள்ளது. மகளிர் தனித்தும் தன் தோழியர் கூட்டத்துடனும் கற்பு நிலையில் கணவருடனும் நீராடி மகிழ்ந்துள்ளனர்.

சங்ககால மகளிர் மலைகளில் இருந்து வரும் அருவி நீரைக் குடைந்தும் குளம், ஆறு முதலிய நீர் ஆதாரங்களில் விரும்பியும் நீந்தியும் குதித்தும் விளையாடியுள்ளனர். இவர்கள் விளையாடும் புனல் விளையாட்டில் நீர் குடைந்தாடியதை,

**"புனல்ஆடு மகளிர் கதுமெனக் குடைய"[126]**

என்னும் பாடல் வரிகள் வெளிப்படுத்துகின்றன.

சிறுபாணாற்றுப் படையில்,

**"நறுவீ நாகமும் அகலும் ஆரமும்**
**துறைஆடு மகளிர்க்குத் தோட்புணை ஆகிய**
**பொருபுனல் தரூஉம்"[127]**

என்னும் பாடல் வழியாக அகில், சந்தனம், சுரபுன்னை போன்றவற்றை நீராடும் மகளிர்க்குத் தெப்பமாகக் கொண்டு நீராடி வந்துள்ளனர் என்பதை இப்பாடலடிகள் உணர்த்துகின்றன.

ஆறு, குளம் இவற்றின் ஆழமான இடங்களில் நீராடும்பொழுது மகளிரின் காதுகளில் அணிந்திருக்கும் பொற்குழை கழன்று விழுந்துவிடும், புனலாடுங்கால் நீரில் நழுவி விழும் என்று நினைத்து மகரக் குழையைக் கரையில் வைத்துப் பின்னர் மறந்து போவதும் முறையே,

**"புனல் பாய் மகளிர் ஆட ஒழிந்த**
**பொன் செய் பூங்குழை"[128]**

என்று குறிப்பிட்டுள்ளன. மகளிர், தோழியர் கூட்டத்தோடு கடலில் நீராடி மகிழ்ந்தனர் என்பதை,

**"தொடலை அல்குல் தொடிந்தோள் மகளிர்**
**கடல் ஆடிக் கயம் பாய்ந்து"[129]**

என்னும் பாடல் வரிகளும், தென்னையின் இளநீரையும் நுங்கின் நீரையும் கரும்புச் சாரையும் உண்டு மகளிர் கடலில் பாய்ந்து விளையாடியதை,

**“முந்நீர் உண்டு முந்நீர்ப் பாயும்”[130]**

என்ற அடியும் சுட்டிக் காட்டுகின்றன. நீர் விளையாட்டினை உடல் நலம் காக்கும் பொருட்டாகவும் இன்பத்தின் பொருட்டாகவும் சங்க கால மகளிர் மேற்கொண்டுள்ளமை இதன்மூலம் தெளிவாகிறது.

## கூத்துக் கலைகள்

கூத்து என்பதன் பொருள் அதிசயம், நடனம், நாடகம், கேலி என்பது ஆகும். கூத்துக் கலைகள் பழங்கால மக்களிடம் இருந்து வந்த கலையாகும். இவை கருங்கூத்து, கழனிக்கூத்து, வள்ளிக்கூத்து, வெறிக்கூத்து ஆகியவையாகும். சங்க நூல்களின் வழி குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் முதலிய நானிலங்களிலும் கூத்தர்கள் இருந்துள்ளனர் என்பதை காண முடிகிறது. குறிஞ்சி நிலக் கடவுள் முருகனை வழிபடுவதற்காக ஆடும் கூத்து ‘குரவை’ அல்லது ‘குன்றக் குரவை’ என்றும் முல்லை நிலக் கடவுளாகியத் திருமாலை வழிபட்டு ஆடும் கூத்து ‘ஆய்ச்சியர் குரவை’ எனவும் பெயர் பெறுகின்றது.

சங்கப்புற இலக்கியங்களில் குறிப்பிடும் மகளிர் கூத்துக்கள்

குரவைக் கூத்து

துணங்கை கூத்து

## குரவைக் கூத்து

ஆண், பெண் ஆகிய இருபாலருக்கும் உரியது குரவைக் கூத்து. குரவைக் கூத்தே ‘கைகோத்தாடல்’ என்று திவாகர நிகண்டு கூறியுள்ளது. குரவைப் பாட்டோடும் அப்பாட்டிற்கேற்ப ஆண்களும் பெண்களும் கைகோர்த்து நின்றாடும் கூத்து என்பது தெளிவாகிறது. குறவர் தொண்டகப்பறை கொட்டக் குரவையாடுவர். பரவருடைய மகளிர் எந்த நாளும் ஆடும் குரவைக் கூத்தின் ஓசையை,

**“பரதவர் மகளிர் குரவையோடு ஒலிப்ப”[131]**

என்ற பாடல் வரியும், வேலனை வழிபடும்போது மகளிர் ஆடும் குரவைக் கூத்தினை,

**“சீர் மிகு நெடுவேட் பேணி, தழூஉப் பிணையூஉ**
**மன்று தொறும் நின்ற குரவை”[132]**

என்கிற பாடல் வரிகளும் குறிப்பிடுகின்றன. வளையணிந்த மகளிர்க்கு ஆடவர் முதற்கைத் தந்து குரவை அயரும் இயல்பினை,

**"மைந்தர் எல் வளை மகளிர்த் தலைக் கை தரூஉந்து"[133]**

என்பதை பாடல் வரிகளின் மூலமாக அறிய முடிகிறது.

பதிற்றுப் பத்துப் பாடலில் குரவைக்கூத்துக் காட்சியை,

**"செய்யுள் நாரை ஒய்யும் மகளிர்**
**இரவும் பகலும் பாசிழை களையார்**
**குறும்பல் யாணர்க் குரவை அயரும்"[134]**

என்று அரிசில் கிழார் பாடியுள்ளார். குறவர் தன் மனைவியருடன் சேர்ந்து சிறுபறை ஒலிக்க குறிஞ்சி மலையுச்சியில் மது அருந்தி, குரவைக் கூத்தாடியதை,

**"நறவு நாட் செய்த குறவர் தம் பெண்டிரொடு**
**மான் தோற் சிறுபறை கறங்கக் கல்லென**
**வான் தோய் மீமிசை அயரும் குரவை"[135]**

என்ற மலைபடுகடாம் பாடல்களும் தேறல் உண்ட சிறுகுடிக் கானவர் தம் சுற்றத்தாருடன் மகிழ்ந்து குரவை அயர, மகளிர் அவர்கள் கையினைத் தழுவி தம் கையினால் முதற்கைக் கொடுத்துக் குரவையாடினர் என்னும் செய்தியை,

**"நீடுஅமை விளைந்த தேக்கண் தேறல்**
**குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து,**
**தொண்டகச் சிறுபறைக் குரவை அயர"[136]**

**"மென்தோள் பல்பிணை தழீஇ, தலைத்தந்து"[137]**

என்று நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படையின் பாடல்களும் தெளிவாக உணர்த்துகின்றன. எனவே மகளிர் ஆடவர்க்கு முதற்கைத் தந்தும் மது அருந்திய தன் கணவரோடு சேர்ந்தும் குரவை ஆடியுள்ளனர். இச்செய்திகள் புறப்பாடல்களினால் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

## துணங்கைக் கூத்து

துணங்கைக் கூத்து ஆண்கள், பெண்கள் ஆகிய இருவருக்கும் உரியது. சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லார், இவற்றை 'சிங்கிக்கூத்து' என்று குறிப்பிட்டுள்ளார். சங்க கால மக்கள் விழாக்களில் துணங்கையாடியதை,

**"துணங்கை அம்தழூஉவின் மணம் கமழ் சேரி"[138]**

என்னும் சங்க பாடல் வரிகளில் அறிய முடிகின்றன. இவ்வகையான துணங்கைக் கூத்தில் ஆர்வம் கொண்ட இறைவியைத் ‘துணங்கையஞ் செல்வி’ என பெரும்பாணாற்றுப் படையில் கடியலூரா் உருத்திரங்கண்ணார் குறிப்பிட்டுள்ளார்.

துணங்கைக் கூத்து ஆடும் இடங்களில் மகளிர் தன் தலையிலும் தழையாடைகளிலும் ஆம்பல் மலரணிந்து விரைவாக ஆடியதால் உதிர்ந்த மலர்களைப் பசுக்கள் உண்ணும் காட்சியையும் முழவின் ஓசைக்கேற்ப மகளிர் ஆடிய துணங்கைக் கூத்திற்கு ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் தலைக்கைத் தந்த சிறப்புத் தன்மையையும் பதிற்றுப் பத்துப் பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன.

**“கலிகெழு துணங்கை ஆடிய மருங்கின்**
**வளைதலை மூதா ஆம்பல் ஆர்நவும்”[139]**

**“முழுா இமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணை ஆக,**
**சிலைப்புவல் ஏற்றின் தலைக் கை தந்து”[140]**

இப்பாடல் அடிகள் மகளிர் ஆடிய துணங்கைக் கூத்தினை உணர்த்துகின்றன. இதனால் மகளிர் ஆடைகளிலுள்ள மலர்கள் உதிர்ந்து விழும் அளவிற்கு ஆரவாரம் செய்து துணங்கை ஆடியுள்ளனர் என்பதும் மகளிருக்கு மன்னன் முதற்கைத் தந்து ஆடியுள்ளமையும் தெளிவாகிறது.

## தொகுப்புரை

- ❖ புற இலக்கியம் வாயிலாக மறக்குடி மகளிரின் தாயன்பு, பெருமை, வீரவுணர்வு, நாட்டுப்பற்று, சமுதாயத்தின்மீது கொண்ட அக்கறை போன்றவையும் மகளிர் போருக்குச் செல்லவில்லை என்றலும் போருக்காகப் புகழ்மிக்கப் புதல்வர்களை ஈன்று தரும் பெருமைக்குரியவர்களாகத் திகழ்ந்தனர் என்பதையும் அறிய முடிகின்றது.
- ❖ மகளிர் கற்பு நெறி பிறழாதும் தன் கணவனுக்கு பெருமை சேர்க்கும் வகையிலும் வாழ்ந்தனர் என்பதை அறிய முடிகின்றது.
- ❖ சங்க காலத்தில் பெண் கல்வி ஏற்றம் பெற்றிருந்த பாங்கை பெண்பாற் புலவர்களின் பாடலின் வழி அறிய முடிகின்றது.
- ❖ சங்க காலத்திலேயே பெண்கள் கல்வி அறிவும் அரசியல் அறிவும் பெற்றிருந்தனர் என்பதை காண முடிகின்றது.
- ❖ தமிழர் பண்பாட்டில் தலைசிறந்த அறமாகவும் பாரம்பரிய பண்புகளுள் ஒன்றாகவும் திகழ்வது விருந்தோம்பல். விருந்து என்பதற்குப் புதுமை, புதியோர் என்று பொருள்படும். சங்கப் புற இலக்கியங்களில் இடம்பெறும் விருந்தோம்பல் குறித்த செய்திகள் இவ்வியலில் ஆராயப்பட்டன.
- ❖ மகளிர் விருந்தோம்பும் பண்பு அவர்கள் வாழ்ந்த சூழலுக்கேற்ப அமைந்து இருந்ததை இவ்வியல் வழி உணர முடிகிறது.
- ❖ விளையாட்டு என்பது சிறுவர் முதல் பெரியவர்கள் வரை மேற்கொள்ளும் ஒரு கலையாகும். இக்கலை பொழுதுபோக்காகவும் மனமகிழ்ச்சியை ஊட்டக் கூடியதாகவும் உடல்நலம் பேணும்வகையாலும் மேற்கொள்ளப்பட்டதை உணர முடிகின்றது.
- ❖ மகளிர் கழங்காடுதல், பாவை விளையாட்டு, பந்து விளையாடுதல், மணல் விளையாட்டுக்கள், வள்ளைப் பாட்டு, மலர் கொய்தல், நீர் விளையாட்டு போன்ற செயல்களில் மகிழ்வுடன் ஈடுபட்டது இவ்வியலில் வழியாக உணர்த்தப்பட்டது.
- ❖ நாடகக் கலைகளான குரவை கூத்து மற்றும் துணங்கைக் கூத்துகளிலும் அக்கால மகளிர் சிறப்புற ஈடுபட்டிருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

•••••••••

## அடிக்குறிப்புகள்

1. தொல்.பொருள், நூற்பா.41.
2. பு.வெ.மா.8, நூற்பா.21.
3. புறம், பா.86.
4. மேலது பா.279.
5. மேலது, பா.295.
6. மேலது, பா.277.
7. மேலது, பா.278.
8. மேலது பா.19
9. மேலது, பா.288.
10. மேலது, பா.255.
11. மேலது, பா.286.
12. குறள், 1032.
13. சிலம்பு, அடைக்கலக்காதை 142–144.
14. தொல்.களவியல், 23.
15. மணிமேகலை, 15–77.
16. சிலம்பு, 15.
17. குறள், 57.
18. திரிகடுகம், 64.
19. புறம், பா.3.
20. திருமுருகு, பா.6.
21. பதிற்று, பா.90
22. மேலது, பா.80.
23. மேலது, பா.70.
24. புறம், பா.198.
25. சிறு, பா.வரிகள், 29–30.
26. பதிற்று, பா.16.
27. புறம், பா.249.

28. மேலது, பா.383.

29. புறம், பா.122.

30. பதிற்று, பா.89.

31. மேலது, பா.65.

32. மேலது, பா.31.

33. பெரும் பா.30.

34. வள்ளிநாயகி, தமிழ்வளர்த்த மகளீர், பக்.152–153.

35. முருகேச பாண்டியன், அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின், ப.14.

36. புறம், பா.306.

37. மேலது, பா.279.

38. பெ.சு.மணி, சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், ப.394.

39. புறம், பா.91.

40. சிறு, பா.101–103.

41. புறம், பா.187.

42. மேலது, பா.95.

43. மேலது, பா.367.

44. பெ.சு.மணி, சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், ப.349.

45. ம.பொ.சிவஞானம், ஔவையார், ப.54.

46. புறம், பா.278.

47. பதிற்று, பா.51.

48. மேலது, பா.55

49. மணிமேகலை–7, ப.57–58.

50. புறம், பா.86.

51. வள்ளி நாயகி, தமிழ் வளர்த்த மகளிர், ப.143.

52. புறம், பா.157.

53. மேலது, பா.250.

54. சிலம்பு, பா–1, வரி–23.

55. புறம், பா.83.

56. மேலது, பா.84.

57. புறம், பா.9.

58. மேலது, பா.9.

59. சிலம்பு, பா.11 (19–20)

60. புறம், பா.9.

61. மேலது, பா.112.

62. பழமொழி, பா.32

63. புறம், பா.277

64. மேலது, பா.246

65. கா.கோவிந்தன், பெண்பாற்புலவர்கள், ப.74.

66. புறம், பா.11.

67. மேலது, பா.299.

68. புறம், பா.251.

69. மேலது, பா.252.

70. புறம், பா.39.

71. மேலது, பா.126.

72. மேலது, பா.174.

73. பொரு, பா வரிகள் 1–3.

74. மேலது, பா.58–60.

75. மேலது, பா.129–148.

76. புறம், பா.66.

77. மேலது, பா.296.

78. மேலது, பா.302.

79. தொல், செய், 234.

80. குறள், 90.

81. தொல்.கற்பு, நூற்–11.

82. நற்றினை, 285.

83. பொரு, பா.214, 215.

84. மலை, பா.152–157.

85. மேலது, பா.168, 169.

86. மேலது, பா.183–185.

87. மேலது, பா.186–188.

88. பெரும், பா.192–196.

89. மேலது, பா.166–168.

90. மேலது, பா.190–196.

91. புறம், பா.215.

92. பெரும், பா.155–159.

93. மலை, பா.417–420.

94. புறம், பா.42.

95. மலை, பா.465.

96. சிறு, பா.194, 195.

97. மேலது, பா.158–159.

98. மேலது, பா.163.

99. மலை, பா.455–459.

100. பெரும், பா.280–282.

101. சிறு, பா.175–177.

102. பெரும், பா.96–99.

103. மேலது, பா.104–105.

104. கலைக்களஞ்சியம், தொகுதி–3, பக்.339–400.

105. மா.இராசமாணிக்கனார், தமிழ்ப்பண்பாட்டு வரலாறு, ப.492.

106. கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப.40

107. பெரும், பா.335.

108. புறம், பா.36.

109. பதிற்று, பா.30, வரி.28.

110. புறம், பா.243.

111. மதுரை, பா.410.

112. புறம், பா.283.

113. பெரும், பா.333,

114. புறம், பா.176.

115. மேலது, பா.112.

116. மேலது, பா.53.

117. பொரு, பா.

118. புறம், பா.116.

119. பதிற்று, பா.43, வரிகள்.2–5.

120. புறம், பா.386.

121. மலை, பா.342.

122. புறம், பா.42.

123. பதிற்று, பா.78, வரிகள்.4–5.

124. மேலது, பா.29, வரிகள்.1–2.

125. மதுரை, பா.296–297.

126. பொரு, பா.241.

127. சிறு, பா.115–117.

128. பதிற்று, பா.86, வரிகள்.10–11.

129. புறம், பா.339.

130. புறம், பா.24.

131. மதுரை, பா.97.

132. மேலது, பா.614–615.

133. புறம், பா.24.

134. பதிற்று, பா.73, வரிகள்.9–11.

135. மலை, பா.320–322.

136. திருமுருகு, பா.195–197.

137. மேலது, பா.216.

138. மதுரை, பா.329.

139. பதிற்று, பா.13, வரிகள்.5–6.

140. மேலது, பா.52, வரிகள்.14–15.

## முடிவுரை

ஒவ்வோர் இயலிலும் கூறப்பெற்ற ஆய்வு முடிவுகள் இங்கு தொகுத்தளிக்கப் பெற்றுள்ளன.

செவ்வியல் எனும் சொல்லின் மூலச்சொல் தமிழ்மொழியே என்பது எடுத்துரைக்கப் பெற்றுள்ளது. செவ்வியல் பற்றிய அகராதி விளக்கங்களும், செவ்வியல் குறித்து தமிழ்நாட்டு அறிஞர்களும் மேலைநாட்டு அறிஞர்களின் கருத்துகளும் விளக்கப்பட்டுள்ளன. செவ்வியலுக்கான அடிப்படைத் தகுதிகள், கோட்பாடுகள், செவ்வியல் வளர்ச்சி போன்றவை பற்றியும் ஆராயப்பட்டுள்ளன. உலகச் செவ்வியல் இலக்கியமான கிரேக்கம், இலத்தீன், சமஸ்கிருதம், பாரசீகம், அரபிக், சீனம் போன்றவை பற்றியும் ஆராயப்பட்டுள்ளது.

உலகச் செவ்வியல் இலக்கியத்தில் தமிழ்மொழியின் சிறப்பும் தமிழ் மொழியானது செம்மொழி ஆவதற்கான தகுதிகளும், செவ்வியல் நூல்களும், செவ்வியல் கூறுகளை பல்வேறு அறிஞர்கள் பல்வேறு விதமாக கூறும் கருத்துமுறைகளும் இவ்வாய்வில் எடுத்துக் கூறி நிறைவாகத் தமிழக அரசு வரையறை செய்துள்ள நிலையும் ஆராயப்பட்டுள்ளது.

பண்பாட்டின் ஒளி விளக்காகவும், இந்திய இலக்கியத்தின் தலையூற்றாகவும் வரலாற்று உண்மைகளைத் தொகுத்தும், வாழ்க்கை நெறிமுறைகளை செம்மொழித் தகுதிக்கு வகுத்துத் தருவது சங்க இலக்கியமே என்று நிறுவப்பட்டுள்ளது.

சங்கப்புற இலக்கியங்களில் உள்ள எட்டுத்தொகை, பத்துப்பாட்டு நூல்களில் உள்ள தொன்மைச் செய்திகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. தமிழ்மொழியானது எம்மொழியுடனும் சேராது தனித்து இயங்கும் ஆற்றல் பெற்று விளங்குவதையும், உலகத்தில் உள்ள அனைவருக்கும் எக்காலத்தும் பொருந்தும் பொதுவான கருத்துக்களைக் கூறும் பாங்கும், மக்கள் ஒருவருக்கு ஒருவர் செய்த உதவியை மறவாதிருத்தல் என்னும் கருத்தும் ஆராயப்பட்டுள்ளது.

நீதி வழங்கக் கூடிய நடுநிலையில் உள்ளவர்கள் நடுவுநிலையோடு நின்று நீதி வழங்கியதையும், தமிழ் மொழியானது மூத்த மொழியாகவும் முதன்மை மொழியாகவும் பல மொழிகளுக்கு எல்லாம் தாயாய் விளங்கும் ஆற்றல் பெற்று விளங்குகின்றது என்பதும் ஆராயப்பட்டுள்ளது.

சங்ககால மக்களின் சிறந்த விருந்தோம்பல் பண்பும் பண்பாட்டுச்சிறப்பும் பல வகையான கலைகளில் தேர்ச்சி பெற்றமையும் அறிவுத் திறனை சிறப்பான முறையில் பயன்படுத்திய பாங்கும் கூறப்பட்டுள்ளது. இலக்கிய வளம் நிரம்பிக் காணப்படும் மொழி தமிழ்மொழி என்பதும் மக்கள் வாழ்க்கையில் பின்பற்றி வாழ வேண்டிய செய்திகளும், நற்கருத்துக்களும் ஆராயப்பட்டுள்ளன.

தந்தைக்குப் பின் மகன் என்ற பரம்பரை ஆட்சிமுறையே சங்க காலத்தில் நிலவியது. அவ் ஆட்சியை தக்க வைத்துக் கொள்ளவும் வலுப்படுத்திக் கொள்ளவும் போர்கள் நிகழ்த்தப்பட்டன. அது மட்டுமின்றி, தன் உரிமைக்காகவும் புகழ் வேட்கையின் காரணமாகவும் நாட்டின் எல்லையை விரிவுபடுத்த எண்ணுதல் காரணமாகவும் மகள் மறுத்தல் காரணமாகவும் போர்கள் நிகழ்த்தப்பட்டுள்ளன போன்ற செய்திகளும் விரிவாக ஆராயப்பட்டன.

சங்க கால மன்னர்கள் அறமே நோக்கமாகக் கொண்டு ஆட்சி செய்தனர் போர் தொடங்குவதற்கு முன்னர் போர் நடைபெறும் செய்தியை முரசறைந்து அறிவித்து அறப்போரை நிகழ்த்தினார்கள்.

புலவர்கள் அரசரிடம் பெற்ற பொருளைத் தாம் மட்டும் அனுபவிக்காது, தனக்கு உதவி செய்தவர்களுக்கும், தன்னை நாடி வருபவர்களுக்கும் பொருளை கொடுத்து உதவி செய்தனர். அறநெறி தவறிய அரசர்களைக் கண்டிக்கும்விதமாக எடுத்துக் கூறுவர்.

புலவர்கள் மன்னருக்கு அறிவுரைகளைக் கூறி போரினால் ஏற்படக்கூடிய அழிவை உணர்த்திப் போரைத் தடுத்து நிறுத்தியுள்ளனர். புலவர்களும் மன்னர்களும் நண்பர்களாக விளங்கினர்.

வள்ளல் பாரிக்கு உற்ற நண்பராகக் கபிலர் விளங்கியுள்ளார். தன் நண்பன் பாரி இறந்தபின் அவனுடைய இரண்டு மகள்களையும் மணம் முடித்து வைக்க பல போராட்டம் மேற்கொண்டதையும், இறுதியில் இரு பெண்களையும் பார்ப்பனர்களிடம் ஒப்படைத்து விட்டு அவர் வடக்கிருந்து உயிர் துறந்ததையும் உண்மையான நட்பின் உணர்வினையும் உணர முடிகின்றது.

அதியமான் தனக்கு கிடைத்த அரிய நெல்லிக்கனியைத் தானே உண்டு மிக நீண்டநாள் வாழ்வதைவிட அவ்வைக்கு கொடுத்தால் அவரும், தமிழ்மொழியும் நீண்ட நாள் வாழும் என்பதை அறிந்து நெல்லிக்கனியைக் கொடுத்ததையும், அதை பெற்றுக் கொண்ட பிறகு நன்றி உணர்வோடு அதியமானைப் புகழ்ந்துப் பாடி அவரை விட்டு நீங்காது இருந்தமையும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

சங்ககால மறக்குடி மகளிர் தாயன்பு கொண்டவர்களாகவும், குடிப் பெருமையைக் காப்பவர்களாகவும், கற்பு நெறி தவறாதவர்களாகவும் கணவனை பேணுபவர்களாகவும் திகழ்ந்துள்ளனர். கல்வியிலும் சிறந்தவர்களாக இருந்தனர். சங்க காலப் பெண்பாற் புலவர்கள் அதிகப் பாடல்களைப் பாடியுள்ளனர். மன்னரின் சிறப்பு, கொடை, வீரம், போர்ச் செய்தி, வரலாற்றுப் பதிவுகள், சமுதாயக் கடமை ஆகியவை பாடுபொருள்களாக இடம் பெற்றுள்ளன.

விளையாட்டு என்பது சிறுவர் முதல் பெரியவர்கள் வரை மேற்கொள்ளும் ஒரு கலை ஆகும். இக்கலை பொழுதுபோக்காகவும் மன மகிழ்ச்சியை ஊட்டக்கூடியதாகவும் உடல்நலத்தினை பேணும் வகையிலும் அமைந்திருந்தது என்பது ஆய்வின்வழி உணர்த்தப்பட்டது.

மகளிர் கழங்காடுதல், பாவை, பந்து, ஓரை, மணல் விளையாட்டுகள், எண்ணி விளையாடுதல், வள்ளைப்பாட்டு, மலர் கொய்தல், நீர் விளையாட்டு போன்ற விளையாட்டுகளில் மனம் மகிழ்ந்து ஈடுபட்டிருந்தனர் என்ற செய்தியை கூத்துக் கலைகளான குரவை கூத்து, துணங்கை கூத்துகளிலும் ஈடுபட்டு மகிழ்ந்திருந்தனர் என்ற செய்தியும் உணர்த்தப்பட்டன.

சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள் எனும் இவ்வாய்வின் வழியாக செம்மொழி குறித்த பதிவுகளும் தமிழ்ச் செவ்வியல் குறித்த செய்திகளும் சங்கப்புற இலக்கியங்களில் இடம் பெற்ற ஆடவர் மற்றும் மகளிரின் செவ்வியல் கூறுகளும் முழுமையாக வகைப்படுத்தப்பட்டு ஆய்வு செய்யப்பட்டன. இவ்வாய்வின்மூலம் சங்கப்புற இலக்கியங்களில் இடம் பெறும் செவ்வியல் கூறுகளை முழுமையாக நம்மால் உணர முடிகிறது.

சங்கப்புற இலக்கியங்களில் செவ்வியல் கூறுகள் எனும் இவ்வாய்வினை அடியொற்றி சங்கப்புற இலக்கியங்களில் உளவியல் கூறுகள், மகளிரின் செவ்வியல் கூறுகள், பண்பாட்டுக் கூறுகள், சங்ககால மக்களின் வாழ்வியல் கூறுகள், சங்கப்புற இலக்கியங்களில் சமுதாயம், சங்கப்புற பெண்பாற்புலவர்கள், சங்கப்புற இலக்கியங்களில் விளையாட்டுகள் எனும் தலைப்புகளில் எதிர்காலத்தில் ஆய்வாளர்கள் ஆய்வுகளை மேற்கொள்ளலாம்.